50/-

# விலங்கியல்

# அகராதி

கல்விநூல் வெளியீட்டுத் திணைக்கள வெளியீடு.

# விலங்கியல் அகராதி

## கல்வி வெளியீட்டுத் திணைக்கள வெளியீடு

இலங்கை அரசினர் அச்சகத்திற் பதிப்பிக்கப்பட்டு இலங்கைக் கல்வி வெளியீட்டுத் திணைக்களத்தினராற் பிரசுரிக்கப்பட்டது.

1968

# පෙරවදන

අපගේ ද්විතීයික පාඨශාලාවන්හි උසස් පන්තිවල සත්ත්ව විද්‍යාව විෂයයක් වශයෙන් හදරන ශිෂ්‍යයන්ගේ ප්‍රයෝජනය සඳහා සත්ත්ව විද්‍යාව පිළිබඳ මෙම ශබ්දකෝෂය පළ කරනු ලැබේ. මෙහි අර්ථ දක්වා ඇති පද තෝරා ගනු ලැබූයේ රාජ්‍ය භාෂා දෙපාර්තමේන්තුවේ ප්‍රකාශන අංශය මගින් 1957 දී පළ කරනු ලැබූ සත්ත්ව විද්‍යාව පිළිබඳ පාරිභාෂික ශබ්ද මාලාවේ ප්‍රථම මුද්‍රණයෙනි.

කිසියම් පදයක් සඳහා එහි මුල් පදයට දී ඇති නිර්වචනයෙන් එහි ව්‍යුත්පත්තිය සඳහා අර්ථ දක්වා නැත. උදාහරණයක් වශයෙන් දක්වතොත් අභිසරණය (convergence) යන මුල් පදයට දී ඇති නිර්වචනයෙන් අභිසාරී (convergent) යන පදයෙහි අර්ථය පැහැදිලි වන හෙයින් එහි නිර්වචනය නැවත දක්වා නැත.

සත්ත්වයන්ගේ ප්‍රාදේශික වූත් විද්‍යාත්මක වූත් නාමයන්ගෙන් වැඩි කොටසක් (එනම්, විශේෂ නාම, ගණ නාම, ගෝත්‍ර නාම හා වෙනත් ක්‍රමානුගත නාම) මේ ශබ්දකෝෂයෙහි ඇතුළත් කර නැත.

මෙම නිර්වචන පිළියෙළ කරන ලද්දේ දෙපාර්තමේන්තුවේ කාර්‍ය මණ්ඩලයක් විසිනි. ඒ සඳහා පහත දැක්වෙන ඉංග්‍රීසි ශබ්ද කෝෂ පිහිට කොට ගන්නා ලදී.

(i) A Dictionary of Scientific Terms by I. F. Henderson, W. D. Henderson and J. H. Kenneth (Oliver and Boyd, Edinburgh.)

(ii) Chambers's Technical Dictionary–edited by C. F. Tweney and L. E. C. Hughes (W. and R. Chambers Ltd., London.)

(iii) A Dictionary of Biology by M. Abercrombie, C. J. Hickman and M. L. Johnson (Hunt, Barnard & Co. Ltd., Aylesbury.)

(iv) "Webster's New International Dictionary of the English Language" (G & C. Merriam Company, Publishers, Springfield, Mass., U. S. A.)

මෙ ශබ්ද කෝෂය වැඩිදියුණු කිරීම සඳහා එය භාවිත කරන්නවුන්ගේ යම යෝජනාදියක් වෙතොත් ඒවා අගේ කොට කලසමු.

ඇම්. ඒ. පෙරේරා,
කොමාසරිස්.

අධ්‍යාපන ප්‍රකාශන දෙපාර්තමේන්තුව,
කොළඹ 7.
1.12.66.

# நூன்முகம்

எமது உயர்நிலைப் பாடசாலைகளில் கற்கும் மேல் வகுப்பு விலங்கியல் மாணவர்க்கு இவ்வகராதி பெரிதும் பயன்படும் என்ற நம்பிக்கையில் இதை வெளியிடுகின்றோம். அரசகரும மொழித்திணைக் களத்துக் கல்விப் பிரிவினரால் 1957 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட விலங்கியற் சொற்றொகுதியில் அடங்கிய கலைச் சொற்களுக்கே இவ்வகராதியில் வரைவிலக்கணம் கூறப்பட்டுளது.

ஒரு மூலக் கலைச் சொல்லின் வரைவிலக்கணத்திலிருந்து அதன் வழிச்சொற்களினது கருத்துக்களும் தெளிவாகவுள்ள இடத்து அவ்வழிச் சொற்களுக்கு வரைவிலக்கணம் கூறப்படவில்லை. உதாரணமாக மூலக் கலைச்சொல்லாகிய 'ஒருங்குதல்' என்பதன் வரைவிலக்கணத்திலிருந்து அதன் வழிச்சொல்லாகிய "ஒருங்குகின்ற" எனும் கலைச்சொல்லினது கருத்தும் தெளிவாகவுள்ளமையால் "ஒருங்குகின்ற" என்ற அவ்வழிச் சொல்லிற்கு வரைவிலக்கணம் கூறப்படவில்லை. விலங்குகளின் சாதாரணப்பெயர்களுக்கும் அவற்றின் இனப்பெயர், சாதிப்பெயர், வருணப் பெயர் ஆகிய விஞ்ஞானத் தொகுதிப் பெயர்களுக்கும் வரைவிலக்கணம் கூறுதுவிடப்பட்டுளது.

கலைச் சொற்களின் விளக்கங்களைத் தரும் ஒரு சிறிய கைநூலாக இவ்வகராதி பயன்படவேண்டும் என்பதற்காக இதிலுள்ள வரைவிலக்கணங்கள் யாவும் கூடியவளவு குறுக்கப் பெற்றுள்ளன. எனினும் மாணவர்க்கு வேண்டிய முக்கிய தகவல்கள் யாவும் தரப்பட்டுள்ளன.

இவ்வகராதியில் இடம் பெற்றுள்ள வரைவிலக்கணங்கள் யாவும் இத்திணைக்களத்திலேயே ஆக்கப்பட்டவையாகும். இம்முயற்சியின்போது கீழ்க்காணும் ஆங்கில அகராதிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன:—

(i) A Dictionary of Scientific Terms by I. F. Henderson, W. D. Henderson and J. H. Kennneth (Oliver and Boyd, Edinburgh.)

(ii) Chambers's Technical Dictionary–edited by C. F. Tweney and L. E. C. Hughes (W. and R. Chambers, Ltd., London.)

(iii) A Dictiona y of Biology by M. Abercrombie, C. J. Hickman and M. L. Johnson (Hunt, Barnard & Co. Ltd., Aylesbury.)

(iv) "Webster's New International Dictionary of the English Language" (G & C. Merriam Company, Publishers, Springfield, Mass., U. S. A.)

இவ்வகராதியில் குற்றங்குறைகள் இருப்பின் அவற்றை எமக்கு அறிவிக்குமாறு வேண்டிக்கொள்ளுகின்றேன்.

எம். ஏ. பெரேரா,
ஆணையாளர்.

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்,
கொழும்பு.
1.12.1966.

# விலங்கியல் அகராதி

## அ

**அகக் கலவுரு,** (endoplasm). ஒரு கலத்தினது குழியமுதலுருவின் சிறு மணிகள் கொண்ட மையப் பகுதி.

**அகச் சுரப்பு,** (internal secretion). குருதிக்கலன்களினுள் அல்லது முணுணினுள் ஊற்றப்படுகின்ற ஒரு சுரப்பு. அகஞ் சுரக்குஞ் சுரப்பு. ஓமோன்.

**அகஞ் சுரப்பிகள்,** (endocrine glands). உள்ளே சுரக்கின்ற சுரப்பிகள். இவை முக்கியமாக முள்ளந்தண்டு விலங்குகளிற் காணப்படுகின்ற சுரப்பிகளைக் குறிக்கப் பிரயோகிக்கப்படுகின்றன. இச் சுரப்பிகள் தமது சுரப்புக்களை (ஓமோன்களை) குருதியினுள் ஊற்றி, அதனால் உடலில் தொலைவிலுள்ள அங்கங்களையோ பகுதிகளையோ தாக்கக்கூடியனவாக உள்ளன.

**அகத்துறிஞ்சல்,** (absorption). உயிர்க்கலன்களாலோ இழையங்களாலோ பாய பொருள் உள்ளேற்றல்; உயிர்க் கலன்களினூடே போசணைப் பதார்த்தங்கள் கடந்து செல்லல்.

**அகத்தோற்படை,** (endoderm). (1) ஆதிக் கருக்குடலைப் படலிட்டுள்ளதும் புனனுதரனின் சுவராக உள்ளதுமான, கலங்களாலான படை. (2) இப்படையிலிருந்து நேரடியாகத் தோன்றிய இழையங்கள்.

**அகத்தோற்படை மென்றட்டு,** (endodermal lamella). சிலவகைக் குறுங்ஸ்ராசெயாப் பிராணிகளில், பக்கம் பக்கமாக உள்ள ஆரைக் கால்வாய் கட்கிடையிலும், வட்டக் கால்வாய்க்கும் உணவுச்சுவட்டுக் குழிக்கும் இடையிலும், விரிந்து காணப்படும் ஒரு மெல்லிய அகத்தோற்படைத் தட்டு.

**அகநிணநீர்,** (endolymph). காதின் மென்சவ்வுச் சிக்கல் வழியிலுள்ள பாய்பொருள்.

**அகநிணநீர்க் கான்,** (ductus endolymphaticus). தாழ்ந்த முள்ளந்தண்டு விலங்குகளிலும், உயர்வகை முள்ளந்தண்டு விலங்குகளின் முளையங்களிலும், சுற்றியுள்ள ஊடகத்துடன் உட்செவியானது தொடர்பு பூணுவதற்கு உதவியாக உள்ள குழாய்.

**அகநிரல்,** (endostyle). (1) தொர்ணுறியாவின் கலச்சுவரில் உள்ள ஒரு தடித்த மேலணிப்பட்டை. (2) தூனிக காற்றேயின் தொண்டையில் ஒரு தவாளிப்பால் பிரிக்கப்பட்டுள்ள இரண்டு வயிறுறுபபுற நீள்பக்க மடிப்புக்கள். (3) அம்பியொக்சுஸின் தொண்டைச சுவரின கீழ்ப்பக்கத்தில் பிசிர் மேலணியினால் படலிடப்பட்டுள்ள ஒரு நீள்பக்கத் தவாளிப்பு. (4) தயிரொயிட்டுச் சுரப்பியின முன்னோடி.

**அகமுளையங்கள்,** (endites). (1) குறுஸ்ராசெயாவில், இலைக்காய்க்கு உட்பக்கத்தே உள்ள ஒரு சோணை. (2) ஓர் அவயவத்தின உட்பக்கத்தே காணப்படும் எதுமொரு முளை. உ–ம்., தாடையடிமுளை.

**அகவணி,** (endothelium). நீர்ப்பாயக்குழிகள், இதயம், குருதிக் கலன்கள், நிணநீர்க் கலன்கள் ஆகிய வற்றைப் படலிட்டுள்ள செதிண்மேலணி.

**அகவன்கூடு,** (endoskeleton). உள் வன்கூடு.

**அகவொட்டுண்ணி,** (endoparasite). விருந்துவழங்கியின் உடலினுள்ளே வாழும் ஒட்டுண்ணி.

**அங்கைக்குரிய, (palmar).** கையின் உள்ளங்கையைக் குறிப்பது. பிரிசவ்வு நரம்பு, தசை, தெறிப்பு முதலிய வற்றைக் குறிக்கும்.

**அங்கையுருவான, (palmate).** (1) ஒரு பொதுப்புள்ளியிருந்து எழும் சோணைகளைக் கொண்ட. (2) படலமுடைய பாதங்களை உடைய. உதா: நீர்ப்பறவைகள்.

**அச்சங்கம், (axial organ).** எகைனோடேர் மாற்றுவில், உற்பத்திக் கலங்கள் உட்பட, அச்சுக்குடாவிறகு அண்மையிற் காணப்படுவதாய்த் தொடுப்பிழையங்களையும் கலனிடைக்குழியிழையங்களையும் கொண்டுள்ள ஓர் அமைப்பு. சுருங்குதலே இதன் தொழிலெனக் கருதப்படுகின்றது.

**அச்சிழை, (axial filament).** சவுக்கு முளையினூடாக ஓடிச் சென்று, கலத்தின் உடலையடைந்து, அடிச்சிறு மணியோடு அதாவது இமையடி மணியோடு இணைகின்ற ஓர் உள நூல். ஆரைப் பொய்ப்பாதத்தின் விறைப்பான மத்திய நூல்.

**அச்சின் பின்புறமான, (post axial).** அச்சுக்குப் பின்பக்கம் உள்ள; உதாரணமாக, காலின் கணைக்கால் வெளியென்புக்குப் பக்கத்தே உள்ள.

**அச்சு, (axis).** உயர்வகை முள்ளந்தண்டு விலங்குகளில், இரண்டாவது கழுத்து முள்ளந்தண்டென்பு. ஓர் அங்கத்தினதோ அங்கியினதோ சமச்சீரின மத்திய கோடு.

**அச்சுக்குடா, (axial sinus).** எக்கினோடேர்மாற்றுவில், இது ஒரு நிலைக்குத்து வெளி. இஃது ஒரு நுனியில் தாய்க்கற்றகடு வழியாகப் புறத்தோடும் உடற்குழியோடும் மறுநுனியில் உட்குருதிச் சுற்று வளையத்தோடும் தொடர்புற்றிருக்கும்.

**அச்சுப்புறமான, (adaxial).** அச்சுப் பக்கமாகத் திரும்பிய—அச்சுக்கெதிர்ப்புறமான என்ற சொல்லின் எதிர்ப்பதம்.

**அச்சு வன்கூடு, (axial skeleton).** தலை, முண்டம் ஆகியவற்றின் வன்கூடு, வேர்ற்றிபிருற்றுவில், தூக்க வன்கூட்டுக்கு மாறாகவுள்ள மண்டையோடும், முள்ளந் தண்டும்.

**அசற்றபுலம், (acetabulum).** தொடையெலும்பின் தலைப்பகுதியை அடக்குவதற்கெனக் காணப்படும் கிண்ணவுருவான குழி. பூச்சிகளில், கால்களைச் செருகி வைப்பதற்கென நெஞ்சறையில் உள்ள குழி.

**அசைவில் பொருத்து (suture).** (1) இரண்டு பகுதிகள் அசைவுறுவண்ணம் தொடுக்கப்பட்டிருக்கும்பொழுது அவற்றின் சந்தியில் உள்ள கோடு. (2) ஓட்டின் சுவரும் பிரிசுவரின் விளிம்பும் இணைகையில் ஏற்படும் கோடு. உ–ம்., அம்னியோற்றுக்கள். (3) வன்கோதுகட்கிடையே அவற்றின் சந்தியில் உண்டான கோடு. (4) என்பின் அசைவுறுத மூட்டு. உ–ம்., தலையோடு.

**அடிக்குழி (fundus).** உட்குழிவான அங்கமொன்றின் உட்பரப்பின் அடித்தளம் அல்லது அவ்வுட்பரப்பிற்கு எதிரே உள்ள பகுதியே அடிக்குழி எனப்படும். இரைப் பையின் பெரும் வளைவே அதன் அடிக்குழியாகும். தோற்பையின் கீழ்ப் பின்பக்கப் பகுதியே அதன் அடிக்குழியாகும். கருப்பையின் பெரும் மேன் முனையே அதன் அடிக்குழியாகும். கண்மணிக்கு எதிரேயுள்ள பகுதியே கண்ணின் அடிக்குழியாகும்.

**அடிச்சந்துக் கான் மூட்டு, (basipodite).** சிலவகைக் குறுஸ்ராசெயன்களின் தூக்கங்களில், முதற்கான் மூட்டின் இரண்டாவது மூட்டு, அஃதாவது சேய்மை மூட்டு.

**அடிச்சிறுமணி (basal granule).** சிலவகைப் புரோற்றோசோவாக்களின் சவுக்கு முளைகளினடியிலுள்ள ஒரு தடிப்பு அல்லது பொருள்.

**அடித்தட்டு** (basal plate). இஃது, விருத்தியடைந்து கொண்டு வரும் முள்ளந்தண்டு விலங்குகளின மண்டையோட்டில் பரநாணெண்புகளின் இணைப்பினால் உண்டான ஒரு கசியிழையத் தட்டு ; கிறினேயிடெயாவில், காம்பின் நுனியிலோ அண்மையிலோ காணப்படுகினற ஒருவகைத் தட்டுக்கள். எக்கினொயிடெயாவில், உச்சிவட்டத்தட்டின் ஒரு பகுதி யான ஒருவகைத் தட்டுகள்.

**அடித்தள மென் சவ்வு,** (basement membrane). அதிகமான விலங்கு மேலணிகளுககுக் கீழே அமைந்துள்ள மெல்லிய, கலததிடை மென்சவ்வு. இது வழக்கமாக மிகவும் நுண்ணிய (சிறு வலை) நார்களைக் கொண்டிருக்கும்.

**அடிப்பதார்த்தம்,** (ground substance). (அ) இழையங்களின கலவிடைப் பதார்த்தம். (ஆ) முதலுருவின் வலையிலுள்ள இடைவெளிகளை நிரபபுகினற, தோற்ற வளவில் ஓரினமான பதார்த்தம்.பளிங்கு முதலுரு.

**அடிப்பிடரென்பு,** (basi occipital). உயர்வகை முள்ளந்தண்டு விலஙகுகளில், தலையோட்டின் பிடரென்புப் பிரதேசத்தில் நடுவயிற்றுப்புறமாகவுள்ள ஒரு கசியிழையவென்பு.

**அடிவட்டத்தட்டு,** (basal disc). சில சீலெண்ரெறுற்றுக்களில் (கடற்பூ, முருகைக் கல்), அடியில் உண்டான வன் கூட்டின் முதற்றட்டு.

**அடைகாத்தல்,** (incubation). இயற்கை அல்லது செயற்கை வெப்பத்தின் மூலம் முட்டைகளிலிருந்து குஞ்சு பொரித்தல்.

**அண்ணம்** (palate). (1) வாயின் கூரை. (2) பூச்சியின் மேற்றுண்டை.

**அண்ணவென்பு,** (palatine bone). இது முள்ளநதண்டு விலங்குத் தலையோட்டினது ஒரு சோடி மென்சவ்வென்பாகும். இறக்கைப் போலியென்புகட்கு முன்னும், மேற்றுடையங்கட்கு இடையே பின்னுலும் உள்ள சோடியென்புகளுள் ஒன்று. வாய்க்கூரையின் ஒரு பகுதி இதனுலாயது.

**அண்மை மணிக்கட்டென்பு,** (carpale). முளளந்தண்டு விலங்குகளில், மணிக் கட்டை அமைக்கும் எனபுகளுள் ஒன்று.

**அணங்குப் புழு** (nymph). எக்சொபரெறிகோறறுப் பூச்சியின் இளம் பருவம. வாய்ப்பகுதிகளையும் கூட்டுக கண்களையும் பொறுத்தமட்டில இது நிறையுடலியை ஒத்திருககிறது. இலிங்க முதிராசசியின்மை, செட்டையினமை, செட்டைகள் குறையாய் விருததியடைந்துள்ளமை ஆகியவற்றைப் பொறுததமட்டில இது நிறையுட லியிலும் வேறுபட்டுக் காணப் படுகினறது.

**அத்திலசு முள்ளந்தண்டென்பு,** (atlas vertebra). முதலாவது கழுத்து முள்ளநதண்டென்பு.

**அதிரீனல்** (adrenal). சிறுநீரகத்துக்கு அருகிலுள்ள ; அதிரீனல சுரப்பியைச் சார்ந்த.

**அதிரீனல் சுரப்பி,** (adrenal gland). உயர்வகை முளளந்தண்டு விலங்குகளில், சிறுநீரகததுககு அணமையில காணப் படும் அகஞ்சுரககுஞ சுரபபிகளுள் ஒன்று இஃது உடல அனுசேபத்தில முககியமான விளைவுகளையுடைய சுரப்பு களைக் குருதியினுள் விடும். இதைச் சிறுநீரகமேல் உடல் என்றும் அழைக கலாம.

**அதிரீனலின்,** (adrenaline). அதிரீனல சுரப்பியின் மையவிழையத்தால் சுரக்கப்படுகின்ற ஓமோன். இதையொத்த பதார்ததமொனறு பரிவு நரம்புத தொகுதியின பல நரம்பு நுனி களிற சுரக்கப்படுகின்றது.

**அம்பிழைகள்,** (acontia). அன்தொசோவாவில், நடுமடிப்புக்களிலிருந்தோ நடுமடிப்பிழையத்திலிருநதோ கிளம்பும் கட்டற்ற நூல்போன்ற அமைபபுக்கள். இவற்றில் அழன்மொட்டுச் சிறைப்பைகள் பொதிந்திருக்கும். இவை வாய்வழியாகவோ பிரத்தியேகமான இல்லி வழியாகவோ வெளியேற்றப்படக்கூடியவை.

**அமிலேசு, மாப்பொருள் நொதிச்சத்து,** (amylase). மாப்பொருளை தெக்கிரினுகவோ, தெக்கிரினை மோற்றோசு ஆகவோ மாற்றுகின்ற ஒரு நொதியம். மாப்பொருட் பகுப்பு நொதியம்.

**அமினியன்,** (amnion). நகருயிர்கள், பறவைகள், முலையூட்டிகள் ஆகியவற்றின் முதிர மூலவுரு மென்சவ்வு; பூச்சிகளின் முளையவுரு உள்மென்சவ்வு.

**அமினியன் விலங்கு,** (amniote). முதிர மூலவுருவாழவிலே அமினியனைச் சிறப்பாக உடைய ஒரு விலங்கு.

**அமினியனுக்குரிய,** (amniotic). அமினியனைச சார்ந்த; அதன மடிப்புகள், குழி, பாய்பொருள் ஆகியவற்றிற்குப் பொருந்தும்.

**அமீபா,** (amoeba). இது ஒருவகை ஆதிப் புரோற்றொசோவன. இது மழுங்கிய, தடித்த போலிக்காலை வெளித தள்ளி நகரும்.

**அமீபாக்குழியம்,** (amoebocyte). அமீபாவின் இயல்புகளிற் சிலவற்றை—சிறப்பாக உருவம், இடம் பெயர்தல் ஆகியவற்றை—உடைய மெற்றசோவன் கலம்; பொறிபெருவில் பலவகைத் தொழில்களுடைய அலைந்து திரியும் கலம்; எக்கினோடேர்மாற்றுவில் கழித்தற்றொழிலைச் செய்கின்ற அலைந்துதிரியும் உடற்குழிக் கலம்; ஒரு வெணகுருதிக்கலம்.

**அமீபாப் போலி,** (amoeboid). ஓர் அமீபாவை ஒத்துள்ள—நிலையற்ற உருவுடைய, நகரக்கூடிய, போலிப் பாதங்களை வெளித்தள்ளக்கூடிய.

**அமைப்பொத்த,** (homologous). அமைப்பிலும் உற்பத்தியிலும் ஒத்துள்ள: பலவகைப் பதார்த்தங்கட்குப் பிரயோகிக்கப்படுகின்றது. உதாரணமாக, ஒரே இனத்தைச் சேர்ந்த அங்கிகளை மட்டுமே தாககுகின்ற அருளுத்திரின்கள்; பரம்பரையலகுகளை ஒரே வரிசைக் கிரமத்தில் உடைய நிறமூர்த்தங்கள்; ஒரே இயல்பினைத் துணியும் பரம்பரையலகுகள்—உதாரணமாக, கண் நிறம்.

**அமைப்பொப்பு,** (homology). அங்கங்களோ பகுதிகளோ அவற்றின் அமைப்பிலும் விருத்தியிலும் ஒத்திருத்தல்.

**அமோனைற்று,** (ammonite). மீசோசோயிக் காலத்துப் பாறைகளிற் காணப்படுகின்ற, ஒரு மறைந்த செபலொப்பொட்டின் உயிர்ச சுவடு. இது சிறப்பாக யூராவில் காணப்படும். ஒரு தளச் சுருளியாக அல்லது ஏறக்குறைய அப்படி சுருண்டு காணப்படும்.

**அப்பாற் செலுத்தி,** (vas deferens). விதையிலிருந்து ஆண் குறிக்கு, அல்லது வெளிப்புறத்திற்கு, சிறுநீர்ச்சனனிக் கால்வாயக்கு அல்லது கழியறைக்கு இட்டுச்செல்லும் கான்.

**அயலாரை,** (ad-radius). சீலென்ரெருற்றுவில், மூன்றுவது சீரைச் சேர்ந்த ஓர் ஆரை. ஊடாரைக்கும் இடையாரைக்கும் இடையே காணப்படுவதாய எட்டு ஆரைகளுள் ஒன்று.

**அரந்தி,** (ulna). ஆரையென்போடு சமாந்தரமாயமைந்து, முன்னங்கையின் நடுக்கோட்டுப் பக்கத்தே உள்ள ஒரு நீண்ட என்பு.

**அரந்தித் தொடுகை,** (ulnare). அரந்தியின சேய்மை முனையில் உள்ளதும், மணிக்கட்டென்புகளின் அண்மை வரிசையில் உள்ளதுமான என்பு.

**அருட்டல்,** (excitation). (1) தூண்டலை உண்டாக்குகின்ற அல்லது மிகைப் படுத்துகின்ற செயல். (2) தூண்டலுக்கு முதலுரு உடன் தூண்டற் பேறடைதல்.

**அரும்புமுறைப் பெருக்கல்,** (budding). பல ஆதி விலங்குகளிற் காணப்படும் ஒருவகை இனப்பெருக்கம்.

**அரைச்சந்து,** (coxa). இது பூச்சியினது அல்லது அறக்னிட்டினது காலின் அண்மையிலுள்ள மூட்டு.

**அரைச்சந்துக்கான் மூட்டு, (coxopidite).** குறுஸ்ராசெயனின் அவயவத்தின் முதற் கான் மூட்டினது அணைமைப் பகுதி. சிலந்திகளின் அரைச்சந்து.

**அரைச்சந்துச் சுரப்பி, (coxal gland).** ஆர்த்திரோப்பொடுக்களின் சோடிச சுரப்பிகளுள் அரைசசந்துப் பகுதிகளுள் திறக்கின்ற கான்களையுடைய ஒருவகைச் சுரப்பி.

**அரைப்புப் பை, (gizzard).** பல்வகை விலங்குகளின் உணவுக கால்வாயின் தசைப்பிடிப்பான அரைக்கும் அறை. பூச்சிகளின் புரோதரம்.

**அரைப் பூ, (hemibranch).** பூவிழை களை ஒரே பககததே மட்டும் கொண் டுளள பூ. பாதிப்பூ.

**அரைவட்டக் கால்வாய்கள், (semi circular canals).** கிருனியாறருவில், சமநிலைப் படுத்தும் தொழிலோடு சம்பந்தபபட்ட வையாய்க் காணப்படும், உடசெவியின் கால்வாய்கள்.

**அல்புமின், (albumin).** இஃது, வெப் பத்தினால் திரளககூடிய, நீரிற்கரை யககூடிய புரதக் கூட்டத்துள் ஒன் றுகும். இது முடடையின வெண்கரு, குருதி நீர்ப்பாயம, பலவிலங்குகளின தும் தாவரஙகளினதும் இழையஙகள ஆகியவற்றில் காணப்படும்.

**அல்புமினுக்குரிய, (albuminous).** வெண் கருவையோ அலபுமினையோ சாரநத அல்லது அவற்றின தன்மையுடைய.

**அலகுப் பூ, (cere).** பறவைகளில் மேற் சொண்டின் அடியை மூடிநிறகும் மெல் லியதோல.

**அலகுருமுனை, (rostrum).** (1) அலகு அலலது அலகு போனறுள்ள முனை. (2) கிறேபிஸ்ஷின கண்கட்கிடையே தள் ளிக்கொண்டிருக்கும் முனை. (3) சிற்றிப பெடியாவினது தலையுருவின் அடியி லுள்ள ஒரு நடுகோட்டமைநத வயிற்றுப் புறத் தட்டு. (4) கணவாயோடடின பின்பக்க முனையிற் காணப்படும் கூர் நுனி. (5) இறெகறினேயின் முற்பக்க முனை. இது மேற்பாததாக அமையும். (6) மூக்குககு முனனுளள பிரதேசம் ; (7) அடி ஆபபுருவெனபின் முறபககத தொடாசசி.

**அலந்தோயிக்குரிய, (allantoic).** அலந் தோயியைச் சாரந்த அல்லது அலந் தோயியைக கொண்டுள்ள ; அலந்தோயி யினால் சிறப்பிககபபட்டுள்ள.

**அலந்தோயிச் சவ்வுப்பை, (allantoic bladder).** அலந்தோயியிலிருநது பெறப் பட்ட உயாவகை முள்ளநதண்டு விலங்கு களின சிறுநீர்ப்பை.

**அலந்தோயி, (allantois).** உயர் வகை முள்ளநதணடு விலங்குகளில் சமிபாட்டுக காலவாயின பினபகுதியி லிருநது கிளம்பும் முளையவஙகமாகிய ஒரு மென்சவ்வுபபை. இது சுவாசவங்க மாகவோ போசனையங்கமாகவோ அல் லது இரண்டுமாகவோ தொழிறபடுகின றது.

**அலி, இருபாலான, (bisexual).** ஈரி லிங்கத்துககுரிய பார்கக.

**அலையு நரம்பு, (vagus).** (1) சுவாசவுதர நரம்பு அல்லது பததாம மணடையோட்டு நரம்பு. (2) பூசசிகளின உடலகததுணை நரம்புத் தொகுதி.

**அவசேபம், (katabolism).** வாழும் அங்கிகளில நடைபெறுகினற அழிவு இரசாயன முறைகள்.

**அவயவம், (limb).** சிறபபாக, முள்ளந் தண்டு விலங்குகளினது ஒரு மூடடுணட தூக்கம். வழககமாக, உயாவிலஙகுக ளின கைககளையும் காலகளையும் குறிககப் பயன்படும் ஒரு கூட்டுப் பதம்.

**அழன்மொட்டுச் சிறைப்பை, (nematocyst).** சீலெண்ரெருறறுககளில் உள்ள கொட்டும கலஙகளினால (அழன் மொட்டுகளினால) தோற்றுவிககபபட்ட ஓர் அமைப்பு. அது முடடகள உள்ள குடுவை வடிவ உடலையும ஒரு நீணட மெல்லிய இழையையும கொண்டதாயக் காணப படும்.

**அழன்மொட்டு, (nematoblast).** சிலேன்ரெருற்றுக்களிலும் (நீடாறியா வருணத்தைச் சார்நத, அதாவது, ஐதரொயிடுககள, சொறி முட்டை, கடல் அனிமோனிகள், முருகைக கற்கள் ஆதியவற்றில் ; திடீனோபொருவில காணப்படுவதில்லே) அவறறை இரையாகக் கொணடு அவறறிலுள்ள நூற்கலங்களை தம் வயமாக்கிக கொள்ளும விலஙகுகளிலும் காணபபடுகின்ற மிகவுஞ சிறப்படைநத கலம். பலவகை அழன்மொட்டுகள வெவ்வேறு தொழில்களை (உ-ம்., கொட்டுதல், ஒட்டிப்பிடிததல் ஆகியன) புரிபவையாயக் காணப்படும். ஒரு நூற கலம் அதனுளளே ஓர் அசாதாரண சிககலான ஓர் அமைப்பை (அழனமொட்டுச் சிறைப்பையை) ஆக்கும். இவ வமைபபு ஒரு தோற்பையையும், அதனுள தூண்டுதல வரையும் (உ-ம்., இரையின் தொடுகையினுல்) சுருண்டு கிடககின்ற ஒரு நீணட உட்குழிவான நூலேயும் உடையதாயிருக்கும். இரை தொட்டதும், நூலானது வெளிததள்ளப்பட்டு இரையில் ஒட்டிக் கொள்ளும ; அல்லது கொட்டும் வகையாய் இருப்பின் அதனுள நஞ்சைப பாய்சசும. சொறிமுட்டை சுணேப்பதற்குக காரணம் அதன் பரிசக் கொம்புகளில நிறைந்து காணப்படுகின்ற நூற்கலங்களாகும்.

**அழன்மொட்டு முளே, (cnidocil).** இது அழன்மொட்டின புறபபகுதியிலிருநது விருத்தியடைந்துள்ள ஒரு கட்டையான, உணர்ச்சியுள்ள முளே அல்லது பொறி மயிர். இதன் தூண்டுதிறன அழன் மொட்டுச சிறைப்பையை வெளித் தள்ளுகின்றது.

**அறுகாலி, (hexapod).** ஆறுகால் உள்ளது. ஆறு கால்களே உடைய ஓர் விலங்கு ; குறிப்பாக ஹெக்ஸ போடாவில் உளள ஒனறு.

**அழுகல் தின்னிக்குரிய, (saprophytic).** கரைசலிலுள்ள சேதனவுறுப்புச்சேர்வைகளே உண்ணுகின்ற.

**அறுமுள்ளி (அறுமுள்ளுள்ள), [hexacanth (onchosphere)].** நாடாப் புழுககளின் வாழக்கைச் சரிதததில் காணபபடும் ஆறு கொளுக்கிகளேயுடைய ஒரு பருவம்.

**அறை, (ventricle).** ஒரு குழி : உதாரணமாக, இதயததிலுள்ளது இதயவறை என்றும் மூளேயிலுள்ளது மூளேயறையென்றும் கூறபபடும். குரலவளேயில் உள்ள இரு முளேயுங் கூம்பிய வடிவுடைய குடையம். பறவைகளின் அரைபபுப்பை. பூச்சிகளின் நடுக்குடல் அல்லது குடறபாலே உண்டாககும் அறை.

**அனு, (maxilla).** அனேகமான ஆர்த திரேப்பொட்டுககளில் சிபுகத்திற்குப் பின்னுல உள்ள தூக்கம். இது தேவைககும தொழிற்பாட்டுக்கும் ஏறப பலவாறு திரிபடைநது காணப் படும்.

**அனுக்கணுக்காலென்புகள், (metatarsal bones).** இவை நாறபாதமுளி முளளந தண்டு விலங்குகளின் பின்னங்கால் என்புகள். இவை கோல் போனற என்புகள ; வழககமாக ஒவ்வொரு விரலுக்கும் ஓர் என்பெனறவாறு அமைநதிருக்கும ; கணுக்கால் என் போடு மூட்டப்பட்டிருக்கும்.

**அனுக்காலி, (maxillipede).** ஆர்த திரேபபோடாவில, சிறப்பாக குறுஸ்ரா செயாவில், வாய்க்குப பின்னுல் உள்ள ஓர் தூக்கம். இது வாய்க்கு உணவை எடுத்துச செல்ல உதவுவதற்கு இயைபு படுத்தப்பட்டுள்ளது.

**அனுசேபம், (metabolism).** பொதுப் படச் சொன்னுல், ஓர் அங்கியினுள்ளோ அதன் ஒரு பகுதியினுள்ளோ நிகழும் இரசாயன முறைகள். இது சிக்கலான சேதனச் சேர்வைகளே

உடைத்து (அவசேபம்) அவற்றை எளியனவாக்கி அதன்போது அங்கியின் பல தொழிற்பாடுகட்கு வேண்டிய சத்தியை வெளிவிடுவதையும், வெளியேற்றப்பட்ட சத்தியைப் பயன்படுத்தி எளிமையான சேதனச சேர்வைகளிலிருந்து சிக்கலான சேதனச் சேர்வைகளை ஆக்குவதையும (உற்சேபம்) உள்ளடக்கும்.

**அனுதண்டு,** (stipes). (1) காம்புள்ள கண்ணின் தண்டடி. (2) பூச்சிகளின் முதலாம அனுவில் உள்ள முதற்கான மூட்டின் சேய்மைப்பகுதி. இப்பகுதியானது மேலும், நல்லனுதண்டெனவும் பரவனுதண்டெனவும் பிரிந்துளது. நல்லனுதண்டானது மேலும சேய்மையனுதணடு, அண்மையனுதண்டு, அடியனுதண்டெனப் பிரிந்துளது.

**அனுதோட்பட்டை,** (metacromion). தோட்பட்டை முள்ளின் தோட்பட்டை முனையின் பிற்பக்கக் கிளை முனை.

**அனுபாத்து,** (metamere). ஓர் உடற்றுண்டம்.

**அனுபாத்து உருவாகு முறை,** (metamerism). ஏறத்தாழ உடலானது ஒரே மாதிரியான துண்டங்களாகப் பகுக்கப் பட்டிருக்கும் நிலை. வலயச சமச்சீா.

**அனுமணிக்கட்டு,** (metacarpus). மணிக் கட்டுக்கும் விரல்கட்கும் இடையே உள்ள வன்கூட்டுப் பகுதி. இது மாதிரியாக, ஐந்து உருளை வடிவ என்புகளைக் கொண்டதாயிருக்கும்.

**அனுமணிக்கட்டென்புகள்,** (metacarpal bones). இவை நாற்பாதமுளி முள்ளந் தண்டு விலங்குகளின் முன்னங்கால (மனிதனின் உள்ளங்கைப் பிரதேச) என்புகள். இவை கோல்போன்ற என்புகள் : வழக்கமாக ஒவ்வொரு விரலுக்கும் ஓர் என்பென்றவாறு அமைந்திருக்கும். இவை அண்மையில மணிக்கட்டென்புகளுடனும சேய்மையில விரலென்புகளுடனும் (பலஞ்சர்கள்) மூட்டப்பட்டிருக்கும்.

**அனுமார்பு,** (metathorax). பூச்சியின் மார்பின் பிற்புறத் துண்டம்.

**அனுமுதுகு,** (metanotum). பூச்சியின் அனுமார்பின் முதுகுப்படை அல்லது முதுகுப் பகுதி.

**அனுமூர்த்தம்,** (metasoma). எயுறிப்டெறிடாவின் மூர்த்தத்தின் முனையிலுள்ள அறுதுண்டங்கள் : அறகனெயிடெயாவின பிற்பகக உடற்பிரதேசம் ; பின்வயிறு ; வயிறு. உ-ம்., மரபபேன.

**அனுவவத்தை,** (metaphase). இழையுருப்பிரிவிலோ ஒடுக்கற் பிரிவிலோ, காணப்படும ஒரு பருவம. இப்பருவத்தின்போது நிறமூர்த்தங்கள் மத்திய கோட்டுத் தட்டில் பிளவுபடும்.

**அனுவாதக் கொள்கை,** (recapitulation theory). வியத்திவரலாறு கணவரலாற்றை அனுவாதிக்க முற்படுகின்றது என்பதுபற்றிய ஓர் கொள்கை : அதாவது, தனியனின வாழக்கை வரலாறுனது குலத்தின வாழ்க்கை வரலாற்றின் சில பருவங்களை மீட்கின்றது என்பது. உயிர்ப்பிறப்பு விதி. ஹேககலின் விதி.

**அனுவென்பு முனை,** (metapophysis). சில முள்ளந்தண்டு விலஙகுகளில், முள்ளந தண்டின் வயிற்றுப் புற மூட்டு முனையிலிருந்து விருத்தியடைந்துள்ள ஓர் நீட்சி.

**அனூரு (சாலியென்ரியா). [anura (salientia)].** இஃது அம்பீபியா வகுப்பின் ஒரு வருணம். தவளைகளும் தேரைகளும். இவை பாய்வதற்கு நீண்ட பின்னங்கால்களையுடையவை : வால் இல்லாதவை : சுவாசத்திற்கு முக்கியமான மென்றோல் உடையவை. தோலில் செதில்கள் கிடையா.

**அன்னெலிட்டு, (annelid).** வளையம்போன்ற துண்டங்களால் அமைக்கப்பெற்ற (எடுத்துக்காட்டு, வளையம் பட்டபுழுக்கள்): அனனெலிடாவைச் சேர்ந்த விலங்கு.

**அன்னெலிடா, (annelida).** வளையம் பட்ட அல்லது துண்டுபட்ட புழுக்கள் (சிலிர்முட் புழுக்கள், மண்புழுக்கள், அட்டைகள்). நன்கு தெளிவான அனுபாத்துத் துண்டுபடல், உடற்குழி, குருதித் தொகுதி, கழிநீரகங்கள், நன்கு வரையறுக்கப்பட்டுள்ள நரம்புத் தொகுதி ஆகியவற்றை உடைய விலங்குக் கணம். இவற்றை உடையதால் தட்டைப் புழுககள், வட்டப்புழுக்கள் ஆகியவற்றைக் காட்டிலும் மிகவுஞ்சிக்கலாக அமைக்கப்பட்டுள்ளன. அன்னெலிடாவில் பொலிககீற்று, ஒலிகோகீற்று, ஹிருடினெயா, ஆர்க்கியனனெலிடா, எக்கியூறொயிடெயா, சிப்புன்குலொயிடெயா ஆகிய வகுப்புக்கள் அடங்கும்.

**அனைத்துமுண்ணுகின்ற, (omnivorous).** விலங்கிறைமயம், தாவரவிறைமயம் ஆய இவ்விரண்டையும் உண்ணுகின்ற.

# ஆ

**ஆட்சியுடைமை,** (dominance). தாம் பரவியுள்ள தன்மையால் குறித்த ஒரு நிலப்பரப்பின் வாழ்க்கைநிலைமைகளை நிர்ணயிக்கும் தாவரங்களின் பண்பு; ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் அல்லது குறிப்பிட்ட ஒரு காலத்தில் நன்கு பரவியுள்ள இனங்களின் பண்பு; பெற்றோர்களில் ஒன்றில் இருந்த இயல்பு, கலப்புப்பிறப்பு அங்கியில் மற்றைய பெற்றோரில் இருந்து பெற்ற ஒத்த இயல்பை மூடி மறைத்திருத்தல்; $F_1$, பல்லினநுகத்தில் தொடர்ந்து இருக்கும் பெற்றோர்களின் எதிருரு இயல்புகளில் ஒன்று.

**ஆண்,** (male). விந்துக்களை அல்லது இவற்றை வகையில் ஒத்த புணரிகளை உற்பத்தியாக்கும் சனனிகளை உடைய ஒரு தனியன்: குறியீடு ♂.

**ஆண்குறி,** (penis). ஆணிலிருந்து வரும் விந்தைப் பெண்ணுக்குட் புகுத்துவதற்குப் பயன்படும் அங்கம்; இது விதையிலிருந்து வரும் கானோடு தொடர்புடையது.

**ஆண்டுக்குரிய,** (annual). ஆண்டுதோறும் தோன்றுகின்ற அல்லது பூத்தியாகின்ற அமைப்புக்களையோ இயல்புகளையோ குறிக்கும்; ஓர் ஆண்டு மட்டுமே வாழ்கின்ற.

**ஆர்த்திரோப்பொட்டு,** (arthropod). மூட்டுக்காலகளையுடைய; குறுஸ்ரசெயா, மிறியப்போடா, இன்செக்று, அறக்னெயிடெயா ஆகிய வகுப்புகளை உள்ளடக்கும் ஆர்த்திரோப்போடா வகுணத்தைச் சார்ந்த விலங்கு.

**ஆதிக்கருக்குடல்,** (archenteron). இது முளையத்தின் ஆதிக்குடலாக மாறுகின்ற, புன்னுதரனின் குழி.

**ஆப்புருப்போலியென்பு,** (sphenoid bone). முள்ளந்தண்டு விலங்குத் தலையோட்டில் உள்ள ஓர் என்பு.

**ஆரம்பமேலென்பு முளை,** (anapophysis). உயர்வகை முள்ளந்தண்டு விலங்குகளில் பின்னுகவென்பு முளைக்கு நேர் கீழே உள்ள ஒரு சிறிய முளை. இது நாரி முள்ளந்தண்டென்புகளின் மூட்டை வலிமைப்படுத்தும்.

**ஆவரணக் கோடு,** (pallial line). இருவாலவுள்ள பிராணிகளின் ஓட்டுடன் மென்மூடி தொடுக்கப்பட்டிருப்பதைக் காட்டும் கோடு.

**ஆவரணம்,** (pallium). (1) ஒரு மொல்லுஸ்கா பிராணியினது அல்லது பிருக்கியோப்பொட்டுப் பிராணியினது மென்மூடி. (2) மூளையச் சுவரின் பகுதி.

**ஆரைச் சமச்சீர்,** (radial symmetry). ஒரு விலங்கின் உடலின் மையத்துக்கூடாகச் செல்லும் எல்லாச் செங்குத்துத் தளங்களாலும் அவ்வுடல் இரண்டு ஒத்த பாதிகளாகப் பிரிக்கப்படக் கூடிய நிலை. இதை எக்கினோடேர்மாற்றுவிலும் சீலெனரெற்றுவிலும் காணலாம்.

**ஆரைச் சமச்சீரான,** [actinomorphic (actinomorphous)]. ஒன்றிறகுமதிகமான செங்குத்துத் தளங்களால் மையத்தினூடாக இரு சமபகுதிகளாகப் பிரிக்கக்கூடிய.

**ஆரைத்தொடுவை,** (radiale). ஆரையென்போடு அதே வரிசையிலமைந்துள்ள ஓர் மணிக்கட்டென்பு.

**ஆரைப்புள்ளிக்குரிய (வாய்ப்புறமான),** [actinal (oral)]. எக்கினோடேம் உடலில் குழாயக்கால்களுள்ள பிரதேசத்தைக்குறிக்கும்; அகிறுறியாவில பரிசக்கொம்புகள் உள்ள வாய்ப் பிரதேசத்தைக் குறிக்கும்.

**ஆரைமுழங்கையென்பு,** (radio ulna). சில அம்பீபியாக்களின் முன்னங்கையிலுள்ள தனியென்பு. இதில் இரண்டு என்புகள் இணைந்துள்ளன.

**ஆரைமுன்னங்கையென்பு,** (radius bone). நாற்பாதமுள்ள முள்ளந்தண்டு விலங்குகளின் முன்னங்கையிலுள்ள இரண்டு

என்புகளுள் முன்னுறுள்ளது (மற்றையது அரந்தி). இது கையின் பெருவிரல் உள்ள பக்கத்தோடு மூட்டுண்டிருக்கும்.

**ஆரையான,** (radial). ஆரைக்குரிய; எகினோடேர்மின் ஒரு கதிரைக் குறிக்கும்; இறிஞெயிட்டுககளின வாய் வட்டத் தட்டைத் தாங்கியுள்ள தகடுகளைக் குறிககும்; விழித்திரைக்கு ஆதாரமாயுள்ள நார்களைக் குறிககும்; பெயரடியாக வரின், மீன்களின் செட்டையின் அகவன்கூட்டிற்கு ஆதாரமாயுள்ள ஒரு துண்டு.

**ஆரைவாய்,** (actinostome). கடற்பூவின் வாய். நட்சத்திர மீனின் ஐந்து கதிரகளுடைய வாய்த்துவாரம்.

**ஆவேசின் கால்வாய்கள்,** (Haversian-canals). என்பிலுள்ள சிறிய கால்வாய்கள். இவற்றுள் குருதிமயிர்க் குழாய்கள், நரம்புகள், நிணநீரிடைவெளி ஆதியன காணப்படும்.

**ஆற்றுப்புறவோட்டமுள்ள,** (anadromous). உப்பு நீரிலிருந்து நன்னீரை நோக்கி ஆண்டுதோறும் குடிபெயருகின்ற மீன்களை குறிப்பது. எடுத்துக காட்டு, சாமன்.

**ஆனைக்கால் நோய்,** (elephantiasis). முக்கியமாக பீலாறியாப் புழுக்கள் நிண நீர்க்கான்களைத் தடைசெய்வதன் விளைவாகத் தோல் தடிதது நிணநீர் தங்குவதனுல அவயவங்களோ விதைப்பையோ பெருததல்.

# இ

**இச்சையின்றி இயங்குந்தசை,** (involuntary muscle). வரிகொள்ளாத் தசை. இது ஒருவகைச் சுருங்கத்தக்க இழையம். கதிர்வடிவ, சிறுநார்போன்ற, ஒரு கருவுடைய கலங்களை இது உடையதாய் இருக்கும். முக்கியமாக, இது உட்குழிவான உடலகத்தின் சுவர்களிற் காணப்படுகின்றது.

**இச்சையுள் தசை,** (voluntary muscle). வரித்தசை பார்க்கவும்.

**இசைவாக்கம்,** (adaptation). ஓர் அங்கி தனது புறச் சூழலுக்கோ, உட்சூழலுக்கோ, சூழலில் ஏற்படும் மாற்றங்கட்கோ ஏற்பத் தன்னைத் தகுந்ததாக்கிக் கொள்ளும்முறை. இம்முறையின் விளைவாக விருத்தியடைந்த எந்தவமைப்பையும் பழக்கத்தையும் அச்சொல்லால் குறிக்கலாம்.

**இடப்பெயர்ச்சி,** (locomotion). இடத்துக்கிடம் அசைந்து செல்லும் செயல் அல்லது ஆற்றல்.

**இடமாறிப்பிறந்த,** (adventitious). தற்செயலாக நிகழ்ந்த ; வழக்கத்துக்கு மாறான இடத்தில் காணப்படுகின்ற; அசாதாரணமான இடங்களிலிருந்து கிளம்புகின்ற இழையங்கட்கும் அங்கங்கட்கும் பொருந்தும். இதற்கு வழிவந்த என்றும் பொருள்படும். இக்கருத்துப் பண்முதலுக்குப் பொருந்தும்.

**இடுப்பு,** (pelvis). (1) குயிலலகு, திருவெண்பு ஆகியவற்றுடன் இடுப்பு வளையம் சேர்வதால் உண்டான என்புக் குழி. (2) சிறுநீரகத்துடன் சிறுநீர்க்குழாய் சந்திக்கும் இடத்தில் உள்ள விரிவு. (3) கிறினொயிடுக்களின் கிண்ணம்போன்ற அடிப்பகுதி.

**இடுப்புச் செட்டைகள்,** (pelvic fins). மீனில் உள்ள பிறபக்கச் சோடிச் செட்டைகள்.

**இடுப்புவளையம்,** (pelvic girdle). முள்ளந்தண்டு விலங்குகளில், பிற்புறத்துள்ள சோடியான இடப் பெயர்ச்சிக்குரிய தூக்கங்கள் மூட்டுண்டிருக்கும், வன் கூட்டுச் சட்டவமைப்பு.

**இடைச்சந்துக்கான் மூட்டு,** (ischiopodite). சில குறுஸ்தாசெயாப் பிராணிகளின் நடக்கும் கால்களிலோ அனுகால்களிலோ காணப்படும், அண்மையிலுள்ள மூட்டு.

**இடைச்சிறுகுடல்,** (jejunum). முலையூட்டிகளின் சிறுகுடலின் ஒரு பகுதி. இது முன் சிறுகுடலுக்குப் பின்னுலுள்ளதும், சுருட்குடலுக்கு முன்னுலுள்ளதுமான பகுதி. இது பிரதானமான உறிஞ்சற் பிரதேசம். சிறு குடலின் மற்றைய பகுதிகளைப் பார்க்கிலும், இதன் விட்டம் பெரியதாயும் இதிலுள்ள சடைமுளைகள் பெரியவையாயும் காணப்படும்.

**இடைத்தோற்படை,** (mesoderm). ஓர் முளையத்தில், அகத்தோற்படைக்கும் வெளித்தோற்படைக்கும் இடையில் காணப்படும், மூன்றும் மூலவுயிர்ப்படை; இடையரும்பர்.

**இடைநடுவென்பு,** (intermedium). மணிக்கட்டென்பில் ஆரைத்தொடுவைக்கும் அரந்தித் தொடுவைக்கும் இடையிலும், கணுக்காற்றட்டில் கணைக்காலுள்ளெனபுத் தொடுவைக்கும் கணைக்கால் வெளியென்புருவிற்கும் இடையிலும் காணப்படுகின்ற என்பு அல்லது கசியிழையம்.

**இடைப்பசை,** (mesogloea). கடற்பஞ்சுகளிலும் சிலெனரெற்றுக்களிலும் காணப்படும் ஓர் இடைப்பட்ட, கலமில்லாத, ஊன்பசையுள்ள படை.

**இடைமார்பு,** (mesothorax). பூச்சிகளின் மார்புப் பிரதேசத்தின் நடுத்துண்டம்.

**இடைமார்புப் பட்டை,** (mesosternum). (1) முள்ளந்தண்டு விலங்குகளின் மார்புப் பட்டையின் நடுப்பகுதி. (2) பூச்சிகளின் இடைமார்பின் மார்புப்பட்டை.

**இடைமுதுகு,** (mesonotum). பூச்சியின் இடைமார்பின் முதுகுப் புறப பகுதி.

**இடைமூர்த்தம்,** (mesosoma). அறகனிடாவில், வயிற்றின் முற்பக்கப்பிரிவு. உடலின் நடுத தக்குமாவாக அமைநத இது எப்பொழுதும் அதன முதலாம் உடற்றுண்டத்தில உற்பத்தித் துவாரங்களைக கொண்டதாயிருக்கும்.

**இடையாரை,** (inter radius). ஆரைச சமச்சீருடைய விலங்கில், அடுததுள்ள ஊடாரைகள இரண்டிற்கிடையில், இரண்டிற்கும் சமதூரத்தில உள்ள ஆரை.

**இணைதல்,** (conjugation). (1) இரண்டு புணரிகளின் அல்லது தனிககலமுள்ள அங்கிகளின் தறகாலிகச் சேர்க்கை அல்லது முற்றுற இணைபபு. (2) நிறமூர்த்தங்கள சோடியாகுதல.

**இணைந்த சார்பிலி,** (exconjugant). இனனொன்றுடு இணைதலின பின்னர் சுயேச்சையான வாழ்வு நடாததும ஓர் அங்கி.

**இணைப்பு,** (linkage). இரண்டு அல்லது பல எதிருருவல்லாத பரம்பரையலகுகளின் சேர்க்கை ; இதனால் அவை பிரிகக முடியாத ஓா அலகாக சந்ததிக்குச் சந்ததி செலுத்தப்படும். அவை சுயாதீன ஒவ்வினைப்படுதல அடைவதில்லை.

**இணைபடா நாளம்,** (azygous vein). கீழ்பபெருநாளங்களையும் மேறபெருநாளங்களையும தொடுக்கின்ற இரண்டு முக்கியமான நாளங்களுள் ஒன்று. இது இதயம் நெஞ்சில் இடங் கொண்டுள்ள பகுதியில முன் கூறப் பட்டுள்ள நாளங்களின் இடத்தைக கொள்ளும். சிறப்பாக, வலப்பக்கத்தே உள்ளது இணைபடாப் பெருநாளம் என்றும், இடப்பககததே உள்ளது இணைபடாச் சிறு நாளம் என்றும் அறியப்படும்.

**இணையம்,** (ligament). இரண்டு அல்லது இதற்கும் மேற்பட்ட என்புகளையோ கசியிழையங்களையோ இணைக்கின்ற, நாரிழையததாலான ஒரு கறறை.

**இதயக்குடா,** (cardinal sinus). இதய நாளம பார்கக.

**இதயச் சுருக்கம்,** (systole). குருதிச் சுறறோட்டத்தை நிகழ்த்துவதாய அமைந்துள்ள இதயததின் சுருககம் ; யாதுமோா சுருங்கத்தகக குழி சுருஙகல்.

**இதயச் சுற்றுக்குரிய,** (pericardial). (1) இதயச் சுறறுககுழிக்குரிய ; இதயததைச சுறறியுள்ள ; பிரிசுவர், குழி முதலியவற்றைக் குறிக்கும். (2) லமெல்லிபிறுங்குப் பிராணிகளின் சோடிக கழிவஙகத்தைக் குறிககும்.

**இதயச் சோணை,** (auricle). இதயத்தின் கூடம், அதாவது முன்பக் கவறை.

**இதய நாண்கள்,** (chordae tendinae). இதயத்தின சோணையறை வாலவுகளின் ஓரஙகளையும் சிமபித தசைகளையும் தொடுததுள்ள, மென்மையான, சிரையியலபான நாணகள். இவை இதயவறைச் சுருங்கலின போது வால்வுகள் சோணைகருட் தள்ளப்படாதவாறு தடுக்கின்றன.

**இதய நாளங்கள்,** (cardinal veins). மீன்களிலும், நாறபாதமுளிகளின் முளையஙகளிலும், ஒவ்வொரு பக்கததுககும ஒன்றென உள்ளவையும், உடலின பெரும்பகுதியிலிருந்து குருதியைத திருமபக் குவீரியன்கானுக்குக் கொணாந்து, அங்கிருநது இதயத்திற்குக கொண்டு செல்கின்றவையுமான பிரதான நிளபகக நாளங்கள். முன்பக்க இதய நாளஙகள (கழுத்து நாளங்கள்) குவீரியன் கான்

கட்கு முன்னுலும், பினபக்கவிதய நாளங்கள பினனுலும உளளன.

**இதய மேற்சவ்வு,** (epicardium). முள்ளந்தண்டு விலங்குகளில, இதயத்தை மூடியுளள நீரபபாய மென்சவவு. (2) உரெருகோர்டாறருவில் ஓா உடலகச் சுற்றுக் குழியைப போன்று, சமிபாடடு உடல்கத்தைச சூழந்து வளாந்து காணப படுகின்ற, தொணடையின் இிளகுழாய்கள்.

**இதயம்,** (heart). மாறுபடும் எணணிக்கையில் அறைகளையுடைய, உட்குழிவான, தசைப பிடிபபுளள ஓா அங்கம. அது சந்தம் அமைந்த சுருஙகலினுல குருதிச சுற்றேட்டததை நிலை நிறுததுகின்றது.

**இதயவறையகச் சவ்வு,** (endocardium). முளளநதணடு விலஙகுகளில், இதயக் குழிகளைப் படலிட்டிருககும் அகவணிபபடை.

**இதயவிரிவு,** (diastole). இதயததின் சந்த விரிவு.

**இதரவாலுக்குரிய,** (heterocercal). நிறையுடலிச சுறுககள, திருக்கைகள, ஸ்ரேஜன்கள, இனனும் பிற பல ஆதி மீனகள முதலியவற்றில காணப் படும் ஒருவகை வாலைபபறறிக குறிக கின்றது. அவவாலில் மேலே செங்குத்தாகத் திடீரென முளளநதண்டு வளைந்து, கீழ்வாற்சோணையைக காடடினும பெரிதாகக காணபபடும மேல வாற சோணையினுள நுழைகின்றது.

**இயக்கு நரம்பு,** (motor nerve). நரம்பு நார்களை அலலது இயககு நரமபுக கலஙகளை உடைய சுற்றயல நரமபு.

**இயக்கு நரம்புக் கலம்,** (motor neuron). ஒரு நரமபுக கலமானது தனது நரம்பு நாரினுல விளைவு காட்டும அங்கத்தோடு தொடுகையுறறிருப்பின் அதை இயக்கு நரமபுக கலம எனலாம் ; விளைவு காட்டியைத தொழிற்பாடடையத் தூணடும் கணத் தாக்கஙகளை இது மைய நரம்புத்தொகுதியிலிருநது கடததுகிறது.

**இயக்கு நார்,** (motor fibre). ஓா நரமபு நார். இதன் தூணடல தசைச் சுருககத்தை ஏறபடுததும.

**இரன்வியர் கணு,** (node of Ranvier). மயலினேறறப்படட நரம்பு நாா நெடுகிலும ஒழுஙகாகக் காணப்படும் ஒடுஙகலகள.

**இரு காலி,** (biped). இரு பாதமுடைய ஒரு விலஙகு.

**இருகிளைத் தூக்கம்,** (biramous appendage). குறுஸ்ராசெயாவின் கவருடைத் தூககம். இரு கிளைகளுமே ஒரே மாதிரியிருக்கலாம் (எ.கா., கிரே பிஸ்ஸின வயிறறுத் தூக்கங்கள) அல்லது வேறுபாடுடையவையாயிருக்கலாம்.

**இருகூர் வால்வு,** (mitral valve). இதயத்தின இடது சோணையறைத் துவாரததின இரு முனை வால்வு.

**இருகூற்றுப்பிளவு,** (binary fission). கரு இரு மகட் கருககளாகப் பிரிய அதைத தொடாநது அம்மாதிரியே கலவுடலும் பிரிவடைதல இரு கூற்றுப் பிளவு எனபபடும்.

**இரு சொற் பெயரீடு,** (binomial nomenclature). ஓா அஙகியை இரணடு இலததின சொறகளினுல—முதலாவது, சாதியின பெயா, இரண்டாவது, இனத்துக்குரிய பெயர்—குறிபபிடும் முறைமை வழககு (லினனெயசினுல் ஆரம்பிக்கப்பட்டது). இரணடு சொறகளுமே இனத்தின் பெயரை அடக்கும். எடுத்துககாட்டாக, ஹோமோ சப்பியென்ஸ், பெலிஸ பெறெனிஸ.

**இருதலைத்தசை,** (biceps muscle). இரண்டு தலைகளையோ மூலங்களையோ உடைய ஒரு தசை. உதாரணம், தொடையினதும் புயத்தினதும் இரு தலைத்தசைகள்.

**இருதலைத்தவாளிப்பு, (bicipital groove).** புயவென்பின் மேற்பாகத்திலுள்ள ஒரு தவாளிப்பு. இதில் இருதலைத் தசையின் நீண்ட தசை உளது.

**இருபக்கச் சமச்சீர், (bilateral symmetry).** ஓர் அங்கியை இரண்டு ஒரேமாதிரியான பாதிகளாக ஒரு தளத்தால் மட்டுமே பிரிக்கக்கூடிய நிலை இருபக்கச் சமச்சீர் எனப்படும்.

**இருபடையுள்ளமை, (diploblastic).** இரண்டு முதல் மூலவுருப்படைகளை, அதாவது, புறமுதலுருப்படை, அகத்தோறபடை ஆகியவற்றினைக் கொண்டமை.

**இருமடிவால் (வாற்செட்டை), [diphycercal (tail fin.)]** வாலினுள் முள்ளந்தண்டு நேராக நுனிவரை செல்வதனால், சமச்சீராகப் பிரிந்திருக்கும் வால்.

**இருமுனை வால்வு, (bicuspid valve).** இது இதயத்தின் இரு கூர் வாலவு.

**இருமுறை பல் முளைக்கின்ற, (diphiodont).** உதிருகின்ற பற்கள் (அதாவது பாற்பற்கள்), நிலையான பற்கள் ஆகிய இவ்விரண்டு பற்கூட்டங்களையும் உடையது.

**இருமுறைப் பல்லமைப்பு, (diphyodont dentition).** இருமுறை பல் முளைக்கின்ற பற்களின் அமைப்பு.

**இருமுனையுங் கூம்பிய, (fusiform).** கதிர வடிவான; இரு முனைகளிலும் படிப்படியாகக் குறுகுகின்ற; இது மூளைய மேற்பட்டையின் ஆக உள்ளேயுள்ள படையைக் குறிக்கவும் பிரயோகிக்கப்படுகிறது.

**இரு வலுவுள்ள, (bivalent).** ஒடுக்கற்பிரிவின் போது காணப்படுகின்ற அமைப்பொத்த சோடி நிறமூர்த்தங்களுள் ஒன்று.

**இரு வால்வு, (bivalve).** ஓர் ஓட்டினை இரு பகுதிகளில், பிணைப்புற்ற நிலையில கொண்டிருத்தல். எ.கா., லமெல்லிபிறுங்கு (கருநீலச் சிப்பி முதலியன), பிருக்கியோப்போடா என்பன.

**இருவிழிப்பார்வை, (binocular vision).** ஒரே பொருளின் விம்பத்தை இரண்டு விழித்திரைகளினதும் ஒரு தனியிடத்திலே விழும் வணணம் கண்விழிகளைத திருப்பக்கூடிய மாதிரி அமைந்துள்ள பாாவை. இரண்டு கண்களிலும் அக் குறிப்பிட்ட இடத்திற்குப் பொருளொன்றின் விம்பத்தைக் கொணடு வருவதற்குக் கண்களை எவ்வளவு தூரத்துக்கு உட்பக்கமாகத் திருபபல் வேணடும் எனபது தூரத்தை மதிப்பிடும் பொறிமுறைகளுளொன்ருகும். திண்மத்தோற்றப் பாாவையானது (உருவததை ஆழத்திற் காண்டல்) தூரத்தை மதிப்பிடுதலிலும், வெவ்வேறு கோணங்களிலிருநது பார்ப்பதனுல் இரு விழிப்பார்வையில் கண்கள் பெறும் சற்று வெவ்வேறு படஙகளிலும் தங்கியுளளது. இது உயர் விலஙகுகளிலும், பிற முள்ளந்தண்டு விலங்குகள் பலவற்றிலும்—சிறப்பாக, உயிர்ப்புள்ள இரை கௌவிகளில்—காணப்படும்.

**இரெனின், (rennin).** உதரச் சாற்றிலுள்ள, பாலைத் திரையவைக்கும் நொதியம்; இது கேசீனேஜன்னைக் கேசீனுக மாற்றும்.

**இரைப்பை, (stomach).** முள்ளந்தண்டு விலஙகுகளில், அவற்றின் களத்துக்கும் குடலுக்கும் இடையே அமைந்துள்ள, உணவுக்கால்வாயின் பைபோன்ற பகுதி. இப்பதமானது முள்ளந்தண்டில்லா விலங்குகளில், களத்துக்குப் பின்னுல் உள்ள, குடலின் பைபோன்ற விரிவைக் குறிக்கப் பயன்படுகின்றது.

**இரைப்பைப்பாகு, (chyme),** முள்ளந்தண்டு விலங்குகளில், இரைப்பையிலிருந்து சிறு குடலுக்குட் செல்லுகின்ற, பகுதியளவில் சமிபாடடைந்த, ஓரளவு நீர்மயமாயுள்ள உணவுத்திணிவு.

**இலசித்தின், (lecithin).** *கிளிசரோல், கொழுப்பமிலங்கள், கோலின், பொசு போரிக்கமிலம் ஆதியன உடைய கொழுப்புப் பதார்த்தம் (இலேப்பின்); இது எல்லா விலங்கு, தாவரக் கலங்களிலும் உளது.*

**இலமாக்கின் கோட்பாடு, (Lamarkism).** *பிரெஞ்சு அறிவியலறிஞரான ஜீன் பப்திஸ்ற் இலமாக்கு என்பவரால்* 1809 *இல் முதன்முதலில் சேதனக் கூர்ப்புப் பற்றி உரைக்கப்பட்ட ஒரு கொள்கை. இலமார்க்கு இரண்டு தத்துவங்களை உருவாக்கினார். முதலாவது–உபயோகத்தினால் ஓர் அங்கம் வலுவும் விருத்தியும் அடைகின்றது; உபயோகப்படுத்தாவிடின் அது வலுவிழந்து நலிவு அடைகின்றது. இரண்டாவது–உபயோகித்ததன் விளைவுகளும் உபயோகியாததன் விளைவுகளும் தலைமுறையுரிமையாக்கப்பட்டு, அடுத்தடுத்து வரும் சந்ததிகளில் ஒரு புது இனததின் விருத்திக்கு ஏதுவாகின்றன. இத்தத்துவங்களுள் முதலாவது பெரிதும் நிரூபிக்கப்பட்டு விட்டது, அப்படியிருக்க இரண்டாவது, உண்மையெனக் கொள்ளப்படவில்லை.*

**இலற்றேசு, (lactase).** *இலற்றோசை* ($C_{12}H_{22}O_{11}$) *குளுக்கோசாகவும் கிளைக கோசாகவும் மாற்றமுறச் செய்கின்ற ஒரு சிறுகுடல் நொதியம்; சிலதாவரங் களிலும் காணபபடுகின்றது.*

**இலற்றோசு, (lactose).** *பால் வெல்லம. இது எல்லா விலங்குகளினதும பாலிற காணப்படு வது; தாவரங்களில் இல்லை. மானிடப்பாலில்* 6% *உம் பசுமாட்டுப் பாலில்* 4% *உம் காணப்படும்.*

**இலிங்கச் சுரப்பி, (sex gland).** *சனனி பார்க்க.*

**இலிங்கத் தூண்டுமுட்சுரப்புக்கள், (sex hormones).** *சனனி ஓமோன்களும் சனனித்திருப்ப ஓமோன்களும.*

**இலிங்க நிறமூர்த்தம், (sex chromosome).** *தான் உள்ளமையினாலோ, இல்லாமையினாலோ அல்லது குறித்த உருவத்தைக் கொண்டிருத்தலினாலோ இலிங்கம் இன்னதெனத துணியக்கூடிய நிறமூர்த்தம்;* X, Y *அல்லது* W *நிறமூர்த்தம், தனிமூர்த்தம், தன்நிறமூர்த்தம், இதரநிறமூர்த்தம், சிறப்பான அல்லது தனித்துள்ள நிற மூர்த தம் முதலியன.*

**இலிங்கம், (sex).** *பால் பார்க்க.*

**இலிங்கமில் முறையினப்பெருக்கம், (asexual reproduction).** *இலிங்கமுறையிலோ திரிபடைந்த இலிங்க முறையிலோ தங்கியிராது, வேறெந்த வகையிலாவது இனப்பெருக்கம் நிகழ்தல.*

**இலிங்கமிணைந்த இயல்பு, (sex–linked characters).** *இலிஙகம் காட்டும நிறமூர்த்தங்களிற் காணப்படுகின்ற பாரம்பரீய இயல்புகள.*

**இலிங்கமுறை இனம்பெருக்கல், (sexual reproduction).** *ஒரு தனியன் உருவாவதற்கு முன்னதாக நிகழுகின்ற புணரிகளின் அல்லது புணரிக் கருக்களின் சேர்க்கை.*

**இலிங்கவங்கங்கள், (sex organs).** *சனனிகளும் அவற்றின் துணையமைப்புக்களும்; இனம்பெருக்கற்றொகுதி.*

**இலிங்கவிருருவுடைமை, (sexual dimorphism).** *ஒரேயினத்தைச சேர்ந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே வடிவம், பருமன, அமைப்பு, நிறம் முதலானவறறில் காணப்படும் தெளிவான வித்தியாசங்கள.*

**இலிப்பேசு, (lipase).** *கொழுபபுப் பகுபபிற்குரிய ஓா நொதியம்; குருதி, பலவகைத் தாவரங்களினதும் விலங்குகளினதும் அஙகங்கள், பலதிறப்பட்ட விதைகளா என்பவற்றில் காணபபடும்.*

**இழிவனுசேபம், (basal metabolism).** *ஓய்வுநிலை அங்கியொன்றின் நியமவளவு அனுசேபம், இழையத் தொழிற்பாடு அல்லது பௌதிகவிரசாயன மாற்றங் கள்.*

**இழை,** (filament). (1) நூல்போன்ற ஓர் அமைப்பு (2) ஒரு பூஞ்சணவிழை. (3) தூளியின் காம்பு. (4) பூச்சியின் சூலகத்தின் முட்டைக்குழாயில உள்ள மெல்லிய உச்சிமுனை.

**இழையப் பரிசை,** (clypeus). பூச்சிகளின் தலையில் நுதலுக்கு அடுத்தாற்போல் முன்பக்கத்தில் உள்ள ஒரு வன்கோது.

**இழையவியல்,** (histology). நுணுக்குக்காட்டியினால் அறியக்கூடிய, விலங்குகளினதும் தாவரங்களினதும் இழையங்களின் நுண்ணிய அமைப்பைப் பற்றி ஆராய்கின்ற அறிவியற் பிரிவு.

**இழையுருப்பிரிவு,** (mitosis). சாதாரண கலப்பிரிவின் பொழுது கருவானது அடையும் மாற்றத் தொடர். இதன் மூலம் பெற்றோர்க் கலத்தில் உள்ளதை ஒத்த நிறமூர்த்தக் கூட்டமொன்று ஒவ்வொரு மகட்கலத்திற்கும் கிடைக்கிறது.

**இழைச்சிறை,** (filoplume). நீண்ட அச்சையும் உச்சியில் சுயாதீனமான சில இறகிழைகளையும் உடைய ஒரு மெல்லிய மயிர் போன்ற இறக்கை.

**இழையம்,** (tissue). விலங்கினதும் தாவரத்தினதும் அங்கங்களை உருவாக்கும் அடிப்படைக் கட்டமைப்பு; ஒரே மாதிரிக் கலங்களாலான ஓர் அமைப்பு.

**இளங்கொடி,** (afterbirth). எச்சத்தை அடுத்து வெளித்தள்ளப்படுவதாய சூல்வித்தகம், முதிராமூலவுருமென்சவ்வு ஆகியவை.

**இளஞ்சூட்டுக்குருதிநிலையான,** (warm blooded). சூழவுள்ள ஊடகத்தைக் காட்டிலும் ஓரளவு உயர்வானதும் ஒரே நிலையினதும் ஆன வெப்பத்தை உடைய விலங்குகளைக் குறிக்கும் பதமே இது. ஒரு சீர்வெப்பத்துக்குரிய.

**இறக்கித் தசை,** (depressor muscle). தனது தொழிற்பாட்டினால் ஒரு பகுதியை அல்லது அங்கத்தைத் தாழ்த்தும் ஒரு தசை.

**இறக்கைக் கீழ்த்தண்டு,** (calamus). இறக்கையின் காம்பு.

**இறக்கைகள்,** (feathers). பறவைகளின் உடற் போர்வையாக உள்ள மேற்றோல் வெளி வளர்ச்சிகள். இவற்றோடு நெருங்கிய தொடர்பு பூண்டவையாய செதில்கள், மயிர்கள் ஆகியவற்றிலிருந்து இவை இவற்றிலுள்ள சிக்கலமைப்பினாலும், பரப்பிலிருந்து முதலில் கிளம்புகின்ற கலன் நடுப்பகுதியினாலும் வேறு பிரித்தறியப்படுகின்றன.

**இறக்கைப்போலி,** (pterygoid). ஓர் மண்டையோட்டு என்பு; ஆப்புப்போலியென்பு, கால்வாய், பிளவு, சிக்கல், தசைகள் ஆயவற்றின் சிறகுபோன்ற முனைகளைக் குறிக்கும்.

**இறக்கைமேற்றண்டு,** (rachis). ஓர் இறக்கையின் தண்டு.

**இறகிழை,** (barb). ஓர் இறக்கை மேற்றண்டிலிருந்து சரிவாக நீண்டு சென்று இறகுப்பரப்பை ஆக்குகின்ற, மென்மையான, நூல் போன்ற அமைப்புகளுள் ஒன்று.

**இறகுச் சிற்றிழை,** (barbule). இறக்கையில உள்ள இறக்கையிழைகளை அணிகரையிட்டவையாய்க் காணப்படுகின்ற, கொளுக்கியுடைய சிறிய முளைகளுள் ஒன்று.

**இறகுப்பரப்பு,** (vane). இறகிழைகளைக் கொண்ட இறகின் படலம்.

**இறுக்கி,** (sphincter). ஒரு துவாரத்தைச் சுருக்குகின்ற அல்லது மூடுகின்ற தசை. எடுத்துக்காட்டாக, சிறுநீர்ப்பை, வாய், குதம், யோனிமடல் முதலியவற்றில் உள்ள இறுக்கி.

**இன்சூலின்,** (insulin). சதையியிற் காணப்படும், நீரிழிவு எதிரியாகிய அகஞ்சுரப்பு விளைவாகும் ; இலங்க கான்சு சிறு தீவுகளிலுள்ள β- கலங்களில் உண்டாகின்றது.

**இன்வெட்டேசு,** (invertase). ஒரு தாவர நொதியம் ; கரும்பு வெல்லத்தினை தெக்குரோசாகவும் இலேவலோசாகவும் மாற்றுகின்றது ; இன்வேர்ட்டின் ; சுக்கிரேசு.

**இனம்,** (species). கலப்புவழிவிருத்தியடைகின்ற தனியன்களைக் கொண்டதும், தன் போன்ற இன்னொரு கூட்டத்துடன் கலப்புவழி விருத்தியடையாததுமாகிய ஒரு கூட்டமே இனம் எனப்படும். புவியியற் குலங்கள், பேதங்கள் என்பவற்றை அடக்கி நிற்கும் ஓர் தொகுதி அலகு. ஒரு சாதியைச் சேர்ந்ததாய்க் காணப்படும்.

**இனம்பெருக்கல்,** (reproduction). இலிங்கமுறையாலோ, கலப்பிளவினாலோ, கலப்பிரிவினாலோ, அரும்பல் முறையாலோ, வித்தி உண்டாதலினாலோ, இணைதலினாலோ இனம் அல்லது குலம் தொடர்ந்து உண்டாக்கப்படல்.

**இனம்பெருக்கற்றொகுதி,** (reproductive system). இனம்பெருக்கற் கலங்களை உற்பத்தியாக்குவதற்கும், குட்டியை உற்பத்தியாக்குவதில் நேரடியாகத் தொடர்புடைய தொழிற்பாடுகளை ஏதுவாக்குவதற்குமான அங்கத் தொகுதி.

## ஈ

**ஈட்டம்,** (association). சில ஸபோஸெரு சோவாக்களில், கருக்கள் இணையாமல தனியன்கள் ஒட்டிககொளளுதல். ஒரு குறிப்பிடட வாழிடத்தைச் சேர்ந்த ஒரு சிறப்பான விலங்குத் தொகுதி.

**ஈடுசெய்தல்,** (compensation). அதிபர போசணை வளாச்சியினுலோ, பிறிதொரு அஙகம் கூடுதலாகத தொழிற்படுதலி னுலோ, அதே அஙகத்தின கேடுறுத பகுதிகளின தொழிறபாட்டினுலோ ஒரு பழுதடைநத சேதனககுறைபாட்டை அலலது சேதன இழப்பைத திருத்தி யமைததல அல்லது திருததியமைத்தற் கான நாட்டம.

**ஈமொகுளோபின்,** (haemoglobin). முள்ளந்தண்டு விலங்குகளின் குருதி யில் காணப்படும் செஞ்சுவாச நிறப் பசை. இது குளோபினேடிணைந்துளள ஹீமாற்றினை உடையது.

**ஈரல்,** (liver). முள்ளந்தண்டிலி விலங் குகளில காணப்படும் சமிபாட்டுச் சுரப்பி அல்லது ஈரற்சதையி. முள்ளந்தண்டு விலங்குகளில், குடலின் கிளைக்குழாயா கத் தோன்றுகின்ற, சுரப்பியிழையத்தா லான ஒரு பெருந் திணிவு. இது பித்தத் தைச் சுரக்கினறது. கழித்தலிலும் உட லின் பொது அனுசேபததோடு சம்பந் தப்பட்டவறறிலும் இது முககிய பங கெடுத்துக கொள்ளுகின்றது.

**ஈரனுடி,** (hepatic artery). குழிக்குடல் நாடியின கிளை ; இது நாடிக்குருதியை ஈரலுககு வழங்குகின்றது.

**ஈரற் கலம்,** (hepatic cell). ஈரலின் கலங் களுள் ஒன்று ; இது பித்தஞ் சுரக்கின் றது.

**ஈரில்லமுள்ளது,** (dioecious). இலிங்கங் களைத் தனித்தனியாகக் கொண்டுள்ளது.

**ஈரிலிங்கமுள்ளது,** (bisexual). ஆண், பெண் இலிங்கவங்கங்கள் இரண்டினை யும் உடையது.

**ஈருருவுடைமை,** (dimorphism). இலிங் கத்திற்கேற்ப இரண்டு புறம்பான வடி வங்களை உடையதாய் இருக்கும் நிலை : அல்லது ஒரே பாலுடையதாய் இருப்பின் இரண்டு புறம்பான வகை விலங்குருப் போலிகளையோ எச்சங்களையோ உடைய தாயிருக்கும் நிலை. மாறுபட்ட நிலைகளி லை கருக்கள் தமது பருமனிலோ நிறத் திலோ மாறுபட்டுக் காணப்படும் நிலை.

**ஈருடகச் சுவாசப் பிராணி,** [dipnoan (dipneumon)]. பூக்களினுலும் நுரை யீரல்களினுலும் சுவாசிக்கின்ற ஒரு பிராணி.

**ஈற்றவத்தை,** (telophase). குழியமுத லுருப் பிரிவுடன் நிகழுகின்ற, இழை யுருப் பிரிவின் இறுதி அவத்தை.

**ஈனுதல்,** (parturition). பிள்ளை பெறும் செயல் அல்லது முறை.

## உ

**உகிர்,** (claw). கால்விரலில் அல்லது கைவிரலில் உள்ள வளைந்த கூரான நகம்; சிலவகை குறுஸ்ராசெயன்களில் காணப்படுகின்ற சாவணங்கள்; பூச்சியின் அவயவத்திலுள்ள ஒரு வளைந்த முளை.

**உச்சி,** (vertex). தலையின் மேற்பாகம்; தலையோட்டின் உயர்புள்ளி; பூச்சிகளின கூட்டுக்கண்கட்கிடையே உள்ள பிரதேசம்.

**உச்சிக்குழி,** (fontanella). (1) மணடையோட்டு என்புகளிடையே மென்சவ்வினல் மட்டுமே மூடப்பட்டுக் காணப்படும் ஒரு வெளி. (2) கறையானகளின் தலையில் உள்ள பள்ளம.

**உச்சி முடி,** (crest). (1) என்பினுள்ள ஒரு திடல். (2) நியூற்வில் இருபபது போன்ற ஒரு சதைப்பிடிப்பான நீள்பக்கமேடு. (3) பறவைகளின் தலையிலுள்ள முடி அல்லது இறகுக்கொண்டை.

**உச்சிமுளை,** (trochanter). (1) பூச்சிகளிலும் சிலநதிகளிலும் அவற்றின அரைச்சந்துக்கும் தொடைக்கும் இடையில் உள்ள, காலின சிறு துண்டம. (2) முள்ளந்தண்டு விலங்குகளின் தொடையென்பின் தலைக்கு அண்மையில், தசை தொடுத்திருப்பதற்கான ஒரு மேடு.

**உட்காவுகின்ற,** (afferent). நரம்பு மையங்களிலிருந்து கணத்தாக்கங்களைக் காவிச் செல்லும் நரம்புகட்குப் பொருந்தும். ஓர் அங்கத்துக்கோ அங்கக் கூட்டத்துக்கோ குருதியைக கொண்டு செல்லும் குருதிக் கலன்கட்குப் பொருந்தும்.

**உட்காவுநரம்புமுளை,** (dendron). நரம்புக்கலத்தின் முதலுரு முளை. இது கலவுடலுக்குக் கணத்தாக்கங்களைக் கடத்திச் செலலும்.

**உட்காவு நரம்பு முளைகள்,** (dendrites). மற்றைய நரம்புக்கலங்களின் வெளிககாவு நரம்பு முளைகளோடு நரம்பிணைப்புப் பூண்டனவும் அவற்றிலிருந்து கணத்தாக்கங்களை வாங்குவனவுமான, நரம்புக்கலத்தின இளைகொள்ளும் குழியமுதலுரு எறியங்கள்.

**உட்காற்முட்டு,** (endopodite). ஆத்திரோப்பொட்டுப் பிராணியின் இருகிளைத் தூக்கமொன்றின உட்கிளை.

**உட்குடை,** (sub umbrella). மணி வடிவ மெதுசாப்போலியின குழிவான உட்பரப்பு.

**உட்சுவாசம்,** (inspiration). நுரையீரலகளினுள் வளியை இழுக்கும் செயல்.

**உட்செலுத்தல்,** (ingestion). உணவுத் திரவியம் உடலினுட் செல்லும்வண்ணம் அதை விழுங்கும் செயல்.

**தலைமுறையுரிமை,** (inheritance). வழிவநத இயல்புக் கடத்தில் மூலம் உடல், உளப் பண்புகளை எறறுக் கொளளும் அல்லது பெறுவிக்கும் செயல அல்லது நிலை.

**உட்டோல் (உட்சருமம்),** [dermis (corium)]. முளளந்தண்டு விலஙகுகளின் தோலின் இரு படைகளுள் அகத்தே காணப்படுவது (புறத்தே காணப்படுவது வெளித்தோலாகும்). இது வெளிததோலைக் காட்டிலும் மிகவும் தடிப்பானது. இது, பரப்பிற்கு முககியமாகச் சமாந்தரமாக உளள கொலாசின நாரகளைப் பெருநதொகையாக உடைய தொடுப்பிழையம்; அங்குமிங்குமாக உள்ள கலங்கள், குருதிக்கலனகள், நிணநீர்க் கலன்கள், உணர்ச்சி நரம்புகள் ஆகியவற்றின உடையது. வியர்வைச் சுரப்பிகளும மயிர்ப்புடைப்புக்களும மேற்றோலிலிருந்து உட்டோலுக்குள் தள்ளிககொணடிருப்பன. உட்டோல் தோலின இழுவிசை வலுவை உண்டாக்குகின்றது. இது செதில்களையோ என்புகளையோ கொணடிருக்கலாம்.

**உட்டோலென்பு,** (dermal bone). கசியிழைய முன்னோடி இல்லாது இடைக் கலவிழையஙகளின் செறிவால் முளையத்தின் (அது பினனல் ஆழமாக உள்ளே செலலக்கூடியதாய் இருந்த போதிலும்) பரப்பிற்கு அண்மையில்

எழும் என்பு உட்டோலென்பெனப்படும். இது அனேக முள்ளந்தண்டு விலங்கு களின் தலையோட்டிலும் தோள் வளை யத்திலும் காணப்படும் ; உ–ம்., தலை யோட்டின் கூரையென்புகள், பலலென் புகள், சிறுசாவி எனபன. அது, சில ஆரம்ப முள்ளந்தண்டு விலங்குகளில் பரந்த மேற்பரப்புக் கவசத்தை ஆக் கிறது. எ. கா., ஒஸ்திரகொடேர்மி.

**உடலகப்பிளவுகள்,** (visceral clefts). கழுத்துப் பிரதேசத்தில் அடுத்தடுத் துள்ள விற்களுக்கிடையே உள்ள ஓர் பிளவுத் தொடர்.

**உடலகவிற்கள்,** (visceral arches). வாய், தொண்டை என்பவற்றின் தொடர்பாக விருத்தியடைந்துள்ள, விற் களாலான ஒரு தொடர்.

**உடலமைப்பியல்,** (anatomy). வெட்டிச் சோதித்துத் துணியப்பட்ட விலங்குகளி னதும் தாவரங்களினதும் அமைப்பைப் பற்றிச் சொல்லும் அறிவியல்.

**உடலறை,** (body cavity). உடலகம் அமைந்துள்ளதாகிய உடலகச் சுற்று வெளி அல்லது குழி. இப்பதம் தெளிவில்லாத காரணத்தால் சிலவேளை களில் பிழையாக உடற் குழியைக் குறிக் கப் பயன்படுத்தப்படுகின்றது.

**உடற்குழி,** (coelom). முப்படை விலங்குகளின் முக்கிய உடலறை. இதில் குடல் தொங்கிக் கிடக்கும். இது மேலணியால் படலிடப்பட்டு இடைத்தோற் படையினுள் உள்ளது. இதில் உள்ள பாய்பொருள், குருதியைப் போல தசைப் பிடிப்பான சுவர்களினல் (சில அட்டை கள் இதற்கு விதிவிலக்கு) சுற்றோட்டப் படுவதில்லை. உடற்குழியின் சுவர்களிலோ அதன் சிறப்படைந்த ஒரு பகுதியிலோ (சனனிகள்) மூலவுயிர்க் கலங்கள் விரு த்தியடையும். இவை முதிர்ச்சியடைந்த தும் உடற்குழியினுள் சிந்தப்பட்டுப் பின் னர் வழக்கமாக வெளியே உடற்குழிக் கானல (உதாரணமாக, முள்ளந்தண்டு விலங்குகளின் சூலகக் கானல்) எடுத்துச் செல்லப்படும். பலவகை விலங்குகளில் உடற்குழியானது கழித்தல்களைச் சேகரிப் பதில் ஒரு முக்கிய பங்கு எடுக்கின்றது. இவ்வாறு சேகரிக்கப்பட்ட கழித்தல்கள் அதிலிருந்து கழிநீரகங்களினல் அல் லது உடற்குழிக்கான்களினல் அகற்றப் படும். உடற்குழியானது வேர்றறி பிருற்ரு, எக்கினேடேர் மாற்ரு, பொ லிக்கீற்ரு, ஒலிகோகீற்ரு (ஹிருடி னெயாவில் இல்லை) ஆகியவற்றில் பரந்துகாணப்படும். இவற்றில் அது உடலகச்சுற்றுக்குழியை ஆக்குகின்றது. அது ஆர்த்திரோப்போடாவிலும், மொல் லுஸ்காவிலும் குருதிக் குழிவாக உள்ள உடலகச் சுற்றுக குழியை ஆக்காது சனனிகளினதும் கழிவங்கங்களினதும் குழியை மட்டுமே ஆக்குகின்றது.

**உடற்குழிக்கான்,** (coelomoduct). நடுத் தோற்படையிலிருந்து உற்பத்தியாகி, ஒரு முனை உடற்குழிக்குள்ளும், மற் றைய முனை புறத்தேயும் திறக்கின்ற ஒரு கான்.

**உடற்குழியில்லாத,** (acoelomate). ஓர் உண்மையான உடற்குழியைக் கொண் டிராத விலங்குகள் (உ–ம்., சீலென் ரெருற்ரு, பிளாற்றிஹெல்மின்தெஸ், நெமொர்ற்ரெயா, நெமற்ரேடா).

**உடற்கலம்,** (body cell). மூலவுயிர்க் கலத்திலிருந்து பிறிதானதாய உடலுக் குரிய கலம்.

**உடற்சுவர்,** (body wall). தோலை யும் தசைப்படைகளையும் உடைய உடலகச் சுற்றுக் குழியின் சுவர்.

**உடற்றுண்டம்,** (somite). அனு பாத்து விலங்கினது உடலில் உள்ள துண்டங்கள் அல்லது பிரிவுகளுள் ஒன்று ; விருத்தியடைந்து வரும் முளை யத்தின் இடையரும்பர்த் துண்டம்.

**உடற்றெழிலியல்,** (physiology). அங் கிகளின் தொழில்களையும் செயற் பாடுகளையும் விளக்குவதாய் அமைந்த உயிரியற் பகுதி.

**உடன்முட்டுத் தொடர்,** (strobila). (1) சில ஸ்கிபொசோவாப் பிராணி களின் விருத்திப் பருவம். இங்கு அடுத்

தடுத்தமைந்த கங்கணவட்டத்தட்டுகளி லிருந்து முளையங்களானவை வட்டத் தட்டுக்களாலாய ஓர் அடுக்கு வடிவத் தைப் பெற்றுப் பின் வரிசைக் கிரமத்தில பிரிந்து செல்லும். (2) நாடாப் புழுக் களின் விருத்தி உடன் மூட்டுத் தொடர்.

**உடன்முட்டுத் தொடராதல்,** (strobilation). உடல் துண்டுபடுதலினலே இனப்பெருக்கம் நிகழ்தல. எடுத்துக காட்டாக, சீலென்ரெருற்றுககளில விலங் குருப் போலி உண்டாதலும் நாடாப் புழுக்களில் விருத்தி உடன்மூட்டுக்கள் உணடாதலும்.

**உடுவுரு,** (stellate). நட்சத்திரவடிவ: கதிர்விடுகின்ற; விண்மீன் வடிவ. கடற்பஞ்சுச் சிற்றூசி, திரட்டு முதலி யவற்றிற்குப் பொருந்தும்.

**உண்ணுக்கு,** (uvula). (1) மூளி யின் கீழ்ப் புழுவுருவின் பகுதி. (2) மெல்லண்ணத்தில் இருந்து எழுகின்ற, கூம்புருவத் தொங்குமூளை. (3) புரெஸ் தேற்றின் விளைவாகச் சிறு நீர்ப்பையின் சீதமென்சவ்வில் ஏற்பட்டுள்ள சிறிய மேடு.

**உண்முகமடிதல்,** (invagination). உட சுருளல்; அகமுகத்திருப்பம்; சிற் றரும்பர்ச் சுவர் உண்மடிதலினுல் புன் னுதரன் உண்டாதல்; தற்காலிகமாக மாற்றமடைந்த சுற்றுருவம் போன்ற புறக்கலவுருவினுல் உட்செலுத்தல் — இது சில புரோற்றெருசோவாககளில நிகழ்வது.

**உணர்கொம்பு,** (antenna). இன் செக்ற்றுவினதும் மிறியப்போடாவினதும் தலையிலுள்ள முதலாவது தூக்கம் (சோடியானது); குறுஸ்ராசெயாவின இரண்டாவது தூக்கம்: வழக்கமாக அதிகம் மூட்டுடையதாய், சவுக்குப் போன்று அசையக்கூடியதாய் உள்ளது. உணர்தொழில் (தொடுகை, மணம், இன்னபிற) உடையது. ஆனல் சில குறுஸ ராசெயன்களில் அது நீந்துதற்கோ ஒட்டிக்கொண்டிருப்பதற்கோ பயன்படும்.

**உணர்ச்சி நரம்பு,** (pathetic nerve). முள்ளந்தண்டு விலங்குகளின் நான் காவது மண்டையோட்டு நரம்பு. இது உயர்சரிவுத் தசைக்குச் செல்கிறது.

**உணரடி,** (pedipalp). அறக்னிட் டுககளின் இரண்டாம் தலைத்தூக் கம். இது இடபபெயாச்சிக்குரியதாய் இருக்கலாம் (இராச நண்டு); உகிருடைய தாய் இரையைப் பற்றிப் பிடிப்பதற்குப பயன்படலாம் (தேள், கொடுக்கன்); உணர்ச்சிக்குரியதாய் இருக்கலாம்; அல்லது கருக்கட்டுதலுக்காக ஆணில் திரிபடைநதுளளதாய் இருக்கலாம் (சில ந்திகள்).

**உணவு,** (food). ஓா அங்கியினுல அதனுடலினுள உறிஞ்சப்படுகின்ற அல் லது உடகொள்ளப்படுகின்ற போசணை த திரவியம். இது வளர்ச்சி, வேலை, பழுது பார்த்தல், உயிர்த் தொழில்களை நிலைப் படுதது வைததல ஆதியனவற்றிற்குப் பயன்படுகிறது.

**உணவுக் கால்வாய்,** (alimentary canal). இது வாயிலிருநது குதம் வரையும உளள பாதை. உணவுப பொருட்களைப பெறுவதும், சமிககச்செய் வதும், தன்மயமாக்குவதும் இதுவே. இதைச் சமிபாட்டுச் சுவடு என்றும் குடல் என்றும் அழைககலாம்.

**உணவுக் கால்வாய்த் தொகுதி,** (alimentary system). சீரணித்தல், உறிஞ் சல், போசணை ஆகிய தொழில களோடு சம்பநதப்பட்ட எலலா அங்கங் களும் இததொகுதியில் அடங்கும். இது சமிபாட்டுச சுவட்டையும், இதைச் சேர்ந்த சுரப்பிகளையும், மெல்லும் பொறியமைப்பையும் கொண்டதாகும.

**உணவுக் குழாய்,** (gullet). (1) களம்: வாய்க்குழியிலிருந்து இரைப்பைவரை நீண்டு செல்கினற ஓர் தசைபபிடிப்பான கால்வாய். (2) சிலியாற்றுவில் குழிய வுடலுக்கும் அகக்கலவுருவுக்கும் இடையே உள்ள காலவாய்.

**உணவுச்சிறுவெற்றிடம்,** (food vacuole). சிலவகைப புரோற்றெருசோ வாக்களின் குழியமுதலுருவிலே உண



3—RR 10772 (12/66)

வுச சிறுதுணிக்கைகளைச் சுற்றிப் பாய் பொருளால் நிரம்பலுற்றுக் காணப்படும் ஒரு வெளி.

**உணவுச்சுவடு,** (enteron). இது சீலெண்ரெறுறுப் பிராணிகளிலுள்ள தனி உடற்குழி. புன்னுதாரனின் ஆதிக்குடலை இது ஒத்தது. இது உயாவகை விலங்கு உணவுக் கால்வாயாகும்.

**உணவுத்தொடர்,** (food chain). இலையுண்ணும் இனங்களை அடிப்படையாகக் கொண்டு தம் உணவிற்கு ஒன்றில் மற்றொன்று முறையே தங்கிக்கிடக்கின்ற, ஒரு சமுதாயத்தில் உள்ள விலங்குத் தொடரே உணவுத் தொடரெனப்படும்.

**உதடு,** (lip). ஒரு குழியின் வெளித் துவாரத்தில் உள்ள ஒரு சதைப்பிடிப்பான மடிப்பு. சிறப்பாக, முள்ளந்தண்டு விலங்குகளின் வாயைச் சுற்றியுள்ளவை.

**உதரச்சாறு,** (gastric juice). இது வயிற்றின் சீதமென்சவ்வில் காணப்படும் சுரப்பிகளால் சுரக்கப்படும் சமிபாட்டுப் பாய்பொருள். இது ஒரு மெல்லிய, நீர் போன்ற பாய்பொருள். சுயாதீன ஐதரோகுளோரிக்கமிலம் 0.2%–0.4% இருத்தலால் இது அமிலத்தாக்கமுடையது. இது பல நொதியங்களைக் கொண்டிருக்கும்– சிறப்பாகப் பெப்சினையும் இரெனினையும் உடையது. முன்னையது புரதங்களைச் சமிக்கச் செய்யும்; பின்னையது பாலை உறையவைக்கும்.

**உதரச் சுரப்பிகள்,** (gastric glands). வயிற்றுச் சுவர்களிற் காணப்படுகின்ற, உதரச் சாறறைச் சுரக்கின்ற சுரப்பிகள். மனிதனின் வயிற்றில் அவை சீதமுளியின் முழுத் தடித்த பகுதியிலும் அடங்கும்.

**உதரத்திரிகை,** (gastric mill). மலகொஸ்திருக்காவில் உள்ள புரோதரம். இது உணவைப் பொடியாக்கலுக்காகத் தசைகளையும் சிற்றென்புகளையும் கொண்டுள்ளது.

**உதரவிழைகள்,** (gastric filaments). சில சீலெண்ரெறுற்றுக்களில் உணவுச் சுவட்டினுள் தள்ளிக் கொண்டிருக்கும் அகத்தோற்படையிழைகள். வயிற்றினுட் செல்லும் எந்த உயிருள்ள இரையைத் தன்னும் கொல்லும் தன்மைத்த அழன் மொட்டுகளை இவை உடையவை.

**உதிர்பற்கள்,** (deciduous teeth). பாற் பற்கள். அனேகமான முலையூட்டிகளில் காணப்படுகின்ற இரண்டு பற்கூட்டங்களுள் முதலாவது. இதை மாற்றீடு செய்யும் இரண்டாவது கூட்டத்தை (நிரந்தரப்பற்கூட்டம்) இது ஒத்தது. ஆனால் இதில் அரைக்கும் பற்கள் யாவும், இரண்டாவதின் கடைவாய்ப் பற்களை ஒத்தனவாக இல்லாது அதன் முன்கடைவாய்ப்பற்களை மட்டுமே ஒத்தனவாய் உள்ளன.

**உபயவாழ்வுக்குரிய,** (amphibious). நீரிலாவது நிலத்திலாவது வாழ்வதற்கு இசைவாக்கமுள்ள.

**உபயவாழ்வுழி,** (amphibian). அம்பீபியா வகுப்பைச் சேர்ந்த விலங்கு.

**உபவென்புமுளை,** (hypapophysis). முள்ளந்தண்டென்பின் வயிற்றுப்புறத்தே உள்ள ஒரு முளை. உ–ம்., (a) குருதிமுள் (b) கீழ்மையததி.

**உமிழ்நீர்,** (saliva). உமிழ்நீர்ச்சுரப்பிகளினால் சுரக்கப்பட்ட சுரப்பு; இது உணவை விழுங்க வசதியளிப்பதுடன் சிலவேளைகளில் சமிபாட்டு நொதியங்களையும் உடையதாய்க் காணப்படும். முலையூட்டிகளில் உள்ள உமிழ்நீரானது ஓர் ஐதான, மியூசீனும் நொதியத்தாலும் (தயலின்) ஆன நீர்க்கரைசலை உடையதாய்க் காணப்படும்.

**உமிழ்நீருக்குரிய,** (salivary). உமிழ் நீரைச்சார்ந்த; சுரப்பிகள், கான்கள் முதலியவற்றிற்குப் பொருந்தும்: டிப்டெரா குடம்பியின் உமிழ்நீர்ச் சுரப்பிகலங்களில் பகட்டாகத் தெரிகின்ற நிறமூர்த்தத்திற்கும் பொருந்தும்: இராட்சச நிறமூர்த்தங்கள்.

**உயர்விலங்குகள், (primates).** மம மாலியாவின் அதி உயர்வான வருணம். இவ்வருணத்தைச் சேர்ந்தவை வழக்கமாக ஐவிரலுள்ளவையாயும் முழுமையான பல்லமைப்புடையவையாயும் (ஒவ்வொரு தாடையிலும் இரண்டுசோடி வெட்டும்பற்கள் உட்பட) காணப்படும். நுதலென்பும் யுகவென்பும் இணைதவிலால் கட்குழியானது பின்னால் மூடப்பட்டிருக்கும்; காறையென்புகள் எப்பொழுதும் உண்டு. மூளையானது மிகச சிறப்பாக விருத்தியடைந்துள்ளது. உ-ம்., லெமூர், குரங்கு, வாலில்லாக் குரங்கு, மனிதன் முதலியவை.

**உயிர்ச்சுவடு, (fossil).** கடந்த புவிச சரித காலங்களின் மேற்படிவுகளில் புதைந்து கிடக்கின்ற அல்லது அவற்றிலிருந்து கிண்டியெடுக்கப்பட்ட சில முன்னைய உயிர் வாழ்ந்த தாவரத்தினதோ விலங்கினதோ மிஞ்சியுள்ள எச்சம். வழக்கமாக, அங்கிகளின் வன்பகுதிகளாகவும் (உ-ம்., எனபுகள், ஓடுகள் ஆதியன), வார்ப்படங்கள், வார்ப்புக்கள், பாறைகளில் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ள அடையாளங்கள் என்பனவாகவும் உயிர்ச் சுவடுகள் காணப்படுகின்றன. அருமையாக, வன்பகுதிகளற்ற பிராணிகள் (உ-ம்., சொறிமுட்டைகள், கடலட்டைகள் முதலியன) கம்பிறியன் காலத்துப் பாறைகள் போன்ற ஆதி காலத்துப் பாறைகளில் அவதானிக்கப பட்டுள்ளன. இவற்றிற்கு எதிரிடையாக சைபீரியாவில் பிளைஸ்தோசீன் காலதது பருக்கைக் கற்களிடையே மம்மத்துகள் உட்பட முற்றாய் இனமழிந்த பல முலையூட்டிகள் உறைநது காணபபடுகின்றன.

**உயிர்ப்பிறப்பு, (biogenesis).** உயிருள்ள சடப்பொருட்களிலிருந்தே உயிருள்ள சடப்பொருட்கள் தோன்றின என்பது பற்றிய கொள்கை.

**உயிர்ப்பிறப்புத் தத்துவம், (principle of biogenesis).** முற்றிலுமே தன்னையொத்த ஒரு பெற்றாரிலிருந்தோ பெற்றார்களிலிருந்தோதான ஓர் உயிர்ப் பொருள் உற்பத்தியாக முடியும் என்பது பற்றிய உயிரியல் விதி. இஃது தன்னிச்சைச் சந்ததி பற்றிய நம்பிக்கை, பாணுகளிகளிலிருந்துதான் வாத்துக்கள் உற்பத்தியாகியிருத்தல் வேண்டும் என்பதுபோன்று 300 ஆண்டுகட்கு முன்னர் நிலவிவந்த கற்பனைக் கருத்துக்கள்—இவ்விரண்டையும் மறுப்பதாக அமைந்துள்ளது. நாம் சந்ததிப் பரிவிருததிகள், சிக்கல வாழ்க்கைச் சக்கரங கள். இலிங்கவிருருவுடைமை, சாதிகள, கலப்புப் பிறப்பாக்கல் ஆயவற்றைக கணக்குக்கெடாவிடில் இதுவுண்மையாம். கலத்தின சாதாரண கூறுகளிலிருந்து தோன்றுவன என்று சொல்லப்படுகின்ற எளிய வைரசுகளைப் பொறுத்தமட்டில், அவற்றின் உற்பத்தியை விளக்க உயிர்ப் பிறப்புத் தத்துவத்துக்கு தகுதி காணுது.

**உயிரியல், (biology).** உயிர்பற்றிய அறிவியற் கல்வி. இதில் உயிரிரசாயனவியல், தாவரவியல், விலங்கியல, கூர்ப்பு, பாரம்பரியம முதலிய பாடஙகள் அடங்கும்.

**உயிரியலாட்சி, (biological control).** பிற அஙகிகளைப் பயன்படுததி நோய்களையும் ஒட்டுண்ணிகளையும் (pests), கட்டுப்படுத்தல். உ-ம்., மீன்களாலோ பூச்சியுண்ணுகினற தாவரங்களாலோ குடம்பிகளை உண்பித்து நுளம்புகளைக் கடடுப்படுத்தல. அவுஸ்திரேலியாவில் ஒட்டுண்ணிப் பூச்சிகளினால நாகதாளியைக கட்டுப்படுத்தல்.

**உயிரிரசாயனவியல், (biochemistry).** உயிர்வாழ்வனவற்றைப பற்றிய இரசாயனவியல் ; உடற்றொழிலுக்குரிய இரசாயனவியல்.

**உயிரினப்புள்ளி விவரவியல், (biometry).** உயிரியற் பிரசசினைகட்குக் கையாளப்படுகின்ற புள்ளிவிவரமுறையே உயிரினப் புள்ளி விவரவியல் எனப் படும்.

**உயிரினப் பௌதிகவியல், (biophysics).** பௌதிகத் தத்துவங்கள் மூலம விளக்கந்தந்து உயிரியற தோற்றப பாடுகளைப் படித்தல். உயிரியலுக்குப் பிரயோகிக்கப்படுகின்ற பௌதிகவியல்.

**உயிரினவொளியாக்கம்,** (bioluminescence). உயிரங்கிகளினால் ஒளி உண்டாதல் ; எடுத்துக்காட்டாக, மின்மினிப் பூச்சிகள், எண்ணிறந்த கடல்வாழ் விலங்குகள், அனேக பற்றீரியாக்கள், பங்கசுக்கள் ஆகிய அங்கிகள் ஒளி உண்டாக்க வல்லன. நொதியமொன்றால் ஊக்கப்பட்ட இரசாயனத் தாக்கத்தின் காரணமாகவே ஒளியுண்டாகின்றது. அவ்விரசாயனத் தாக்கத்தின்போது மிகவுஞ் சிறிதளவு வெப்பமே உண்டாகின்றது. அது பலவகை நிறங்களைக் கொண்டதாயிருக்கும். அது விலங்குகளைப் பொறுத்தமட்டில் நரம்பாட்சிக்குட்பட்டிருக்கும்.

**உருமணி,** (plastids). தாவரக்கலங்களின் குழிய முதலுருவில் காணப்படுகின்ற, சிறிய, பலவகை வடிவிலமைந்த, தாமாக இனம் பெருக்கக்கூடிய பொருட்கள்.

**உருமாற்றம்,** (metamorphosis). ஒப்பீட்டளவில் குறுகிய காலத்தில் உருவிலும் அமைப்பிலும் ஏற்படும் தெளிவான மாற்றம். உதாரணமாக, குடம்பிப் பருவத்திலிருந்து நிறையுடலிப் பருவத்திற்குச் செல்கையில் ஒரு விலங்கில் உண்டாகும் மாற்றங்கள்.

**உருவவியல்,** (morphology). விலங்குகளின் உருவத்தையும் அமைப்பையும் பற்றிய அறிவியல். இது அவற்றின் தொழிலைப் பற்றிய அறிவியலில் இருந்து வேறுபட்டது.

**உலோரரின் கால்வாய்,** (Laurer's canal). திரெமற்றோட்டுப் பிராணிகளில், சூலகக்கானும் கருவூண் கானும் சந்திக்கும் இடத்திலிருந்து, முதுகு மேற்பரப்பிலுள்ள துவாரம்வரையும் இட்டுச் செல்லும் ஒரு கால்வாய்.

**உவையுரு,** (hyoid). (1) மூளையத்தின் உவையுருவில்லிலிருந்து விருத்தியடைந்ததும், நாவின் அடியின் கீழே இருப்பதுமான ஓர் என்பையோ என்புத் தொடரையோ குறிக்கும். (2) சில பூச்சிகளின் தொண்டையை மூடியிருக்கும் வன்கோதைக் குறிக்கப் பிரயோகிக்கப்படுகிறது. (3) உவையுருவென்பு.

**உவையுரு வில்,** (hyoid arch). தாழ்ந்த முள்ளந்தண்டு விலங்குகளிலும், உயர்வகை முள்ளந்தண்டு விலங்குகளின் மூளையங்களிலும், சிபுகவில், முதற்பூவில என்பனவற்றிற்கிடையில் உள்ள இரண்டாம் சோடி உடலகவிற்கள்.

**உள்வாங்கி,** (abductor). அவயவத்தையோ பகுதியையோ உட்பக்கமாக அல்லது வேறொரு பகுதியின் பக்கமாக இழுக்கும் ஒரு தசை. உ-ம்., அம்பீபியாவில் தாடைகள் மூடிக்கொள்வதற்கு உதவியாயுள்ள வெளிவாங்கி மன்டிபியுலே என்னும் தசை.

**உள்ளாப்பென்பு,** (entocuneiform). சேய்மையிலுள்ள கணுக்காலென்புகளுள் ஆக உட்பக்கமாக உள்ளது.

**உற்சேபம்,** (anabolism). எளிய பதார்த்தங்களிலிருந்து சிக்கற்பதார்த்தங்கள் உயிர்வாழ் அங்கிகளில் உண்டாவதற்கான இரசாயன மாற்றங்கள். இம்மாற்றங்களின்போது இரசாயனச் சத்திச் சேமிப்பும் நடைபெறுகிறது.

**உற்பத்திக் கூடம்,** (genital atrium). பிளாற்றிஹெல்மின்தெஸிலும், சில மொல்லுஸ்காக்களிலும், ஆண் பெண் உற்பத்திக் கான்கள் திறந்திருக்கும் ஒரு குழி.

**உற்பத்தியங்கங்கள்,** (genitalia). இனப்பெருக்கத்துக்குரிய அங்கங்கள். சிறப்பாக வெளியங்கங்கள்.

**உறங்கு நிலை, (dormant).** உயிர்ப்பு நிறுத்தப்பட்ட நிலையில் உள்ளதாகக் காணப்படல் அல்லது உயிர்ப்பு நிறுத்தப் பட்ட நிலையிலுள்ளமை. உ-ம்., உறங்கு நிலையிலுள்ள ஒரு விலங்கு.

**உறங்கும் வியாதி, (sleeping sickness).** செற்சி ஈயினால் செலுத்தப்பட்ட திறிப்பனோசோம்கள் தொற்றுதலின் விளைவாக உண்டான வியாதி. இந் நோய்க்கான அறிகுறிகளாவன : ஒழுங் கற்ற காய்ச்சல், தோற்றடிப்புச் சொறி, சுரப்பிகளும் மண்ணீரலும் பெருத்தல் முதலியனவும் தலையிடி, உணர்ச்சி யின்மை, வழக்கத்துக்கு மாறான தூக்க நிலை, மெலிதல், பலயீனம், மயக்க நிலை முதலியனவுமாம்.

**உறிஞ்சி, (sucker).** வெற்றிடமொன் றினைத் தோற்றுவித்தற்கு இயைபாக்க மடைந்து காணப்படும் ஓர் அங்கம். இது சில விலங்குகளில் உட்கொள்ளும் தேவைகட்காகவும், மற்றைய விலங் குகளில் இடப்பெயர்ச்சிக்கோ பற்றிப் பிடித்தற்கோ உதவியாகவும் அமைந் துளது.

**உறுத்துணர்ச்சி, (irritability).** உயிர் வாழ் சடப்பொருள்களின சிறப்பியல் புகளுள் ஒன்று. அதாவது, வெளித் தூண்டல்களைப் பெற்றுத் தூண்டற்-பேறடையும் ஆற்றல்.

**உறை, (capsule).** சிலவகைப் பற்றீ ரியாக்களில் கலமென்சவ்வைச சூழ்ந் துள்ள ஊன்பசைப் போர்வை ; ஓர் அங் கத்துக்குப் பொறிமுறை ஆதாரத்தை நல்கும் தொகுப்பிழையப் போர்வை.

## ஊ

**ஊக்கி,** (catalyst). தோற்றத்தில் ஒரு மாற்றமும் அடையாதிருந்து, ஒரு தாக்கத்தின் வேகத்தை வளர்ச்சியுறவோ, தேய்வுறவோ, தாக்கத்தைத் தொடக்கிவைக்கவோ வல்ல ஒரு கருவி. உதா: ஒரு நொதியம்.

**ஊக்கிளினுவசைவு,** (euglenoid movement). எயுக்கிளெனுவிற்கே சிறப்பாக அமைந்துள்ள அசைவு.

**ஊடாரை,** (per radius). சீலென்ரெருற்றுக்களில் உள்ள நான்கு முதலாரைகளுள் ஒன்று.

**ஊத்தேக்கியோவின் குழாய்,** (eustachian tube). நிலம்வாழ் முள்ளந்தண்டு விலங்குகளில், செவிப்பறைக்குழியைத் தொண்டையோடு தொடுக்கும் ஒரு மெல்லிய கான்.

**ஊனுண்ணி,** (carnivore). சதையுண்ணி. குறுகிய கருத்தின்படி, கார்ணிவோரா வருணத்தைச் சேர்ந்த ஒரு விலங்கு.

## எ

**எக்கினோடேர்ம், (echinoderm).** *எக்கினோடேர்மாற்றுப் பிராணிகளில் ஒன்று.*

**எச்சக்கம்பம், (pygostyle).** *பறவைகளின் முள்ளந்தண்டின் முனையில், மேல்நோக்கி வளைந்துள்ள அமுக்கப்பட்ட ஒரென்பு. இது மிகப் பின்னுளுள்ள முள்ளந்தண்டென்புகளின் இணைதலினால் உண்டானது.*

**" எசு " உருவான, (sigmoid).** *சிக்குமா போன்று வளைந்துள்ள ; இரு திசைகளில் வளைவுடைய ; நாடிகள், குழிகள், வால்வுகள் எனபவற்றைக் குறிக்கும்.*

**எசுமாப்போலி, (sigmoid).** *" எசு " உருவான பார்க்க.*

**எதிர்ப்பு, பகை, (antagonism).** (1) *பிறிதோர் அங்கியினால் ஓர் உயிர்வாழும் அங்கியின் வளர்ச்சியில் தலையீடு ஏற்படுதல் அல்லது அதன் வளர்ச்சி தடைக்கட்டுப்படுதல். இதறகாக அவ்வங்கி தவிர்க்க முடியாத சூழ்நிலைகளை (உ-ம்., உணவு தீர்ந்துபோதல்) உரு வாக்கும் அல்லது தன் இனத்துக்குரிய நுண்ணுயிர் கொல்லியை (உ-ம்., பெனிசிலின்) உண்டாக்கும.*

(2) *எதிர்விளைவுகளைத் தரும் ஓமோன்கள், மருந்துகள் முதலியவற்றினது எதிர்ப்பு. இதில்* **அயன் எதிர்ப்பு** *அடங்கும்—தனியயனகளின விளைவுகளை அங்குள்ள மற்றைய அயனகள் தடுத்தல். இதற்கு உதாரணமாக, மகனீசியம ஓர் உணர்ச்சிகொல்லி ; ஆனால் கல்சியம் இதன் தாக்கத்தை எதிர்க்கின்றது.*

(3) *ஒரு தசை சுருங்க, மற்றையது தளர்ச்சியடையும் வண்ணம் (வழககமாகத் தெறிப்புக்கள் இஃதை உறுதிப்படுத்தும்), எதிர அசைவுகள் தசைகளில் உண்டாதல்.*

**எண்ணெய்ச் சுரப்பி, (oil gland).** *பறவைகளின் கோதுதற்கான சுரப்பி அல்லது வாற்புச்சச் சுரப்பி. இறக்கைகளைக் கோதுவதற்காக எண்ணெய்ச் சுரப்பைச் சுரக்கும் ஒரு தோற் சுரப்பி.*

**ஹெமிகோர்டாற்று (அரைநாண் விலங்கு), (hemichordate).** *விருத்தியில்லாத முதுகு நாணை உடைய விலங்கு.*

**எலும்பு மச்சை, (marrow).** *முள்ளந் தண்டு விலங்குகளின் நீண்ட வென்புகளில் உள்ள மையக் குழிகளுட் காணபபடும் கலன்றெடுப்பிழையம். அறை கொண்டுள்ள என்புகளிற் சிலவற்றில் உள்ள வெளிகளையும் மச்சை எனலாம்.*

**எள்ளுப்போலியென்பு, (sesamoid bone).** *வழக்கமாக ஒரு மூட்டிலோ அதற்கு அண்மையிலோ, சிரையின் ஒரு பகுதியாகவுள்ள ஒரு சிறிய உருண்டை வடிவான என்பாக்கம், எள்ளுப்போலி யென்பெனப்படும். எ. கா., மூட்டுச்சில்.*

**எற்புத்தகட்டுக்கச்சு, (cuirass).** *உடற் கவசம் போனறு அடுககப்பட்டுள்ள என்புத்தகடுகள அல்லது செதிலகள்.*

**எறிதடக்கலங்கள், (lasso cells).** *இழையுடைய, அரைககோளவடிவ, ஒட்டிப் பிடிக்கக்கூடிய கலங்கள். இவை தெனோபொறுவின் பரிசக கொம்புகளிற் காணப்படும்.*

**என்பிணைப்பு, (symphysis).** *பகுதிகள் ஒருங்கிணைதல் ; வாழ்க்கைத் தொடக்கத்தில் வெவ்வேறாகக் காணப்பட்ட, இரண்டு என்புகளின சந்திப்பை உணாத்தும் கோடு—எடுத்துக்காட்டு, பூபபென் பொட்டு ; என்புப் பரப்புகள் நாரக்கசியிழையததினால தொடுக்கப்பட்டிருப்பதனால் ஏற்பட்டுள்ள அருகலாக அசையக் கூடிய மூட்டு.*

**என்புக்கலம், (bone cell).** என்பின் கலனிடைக் குழிகளில் காணப்படுகின்ற கலங்களுள் யாதாயினுமொன்று. ஓர் என்பாக்குமரும்பர்.

**என்பு, (bone).** ஒரு வகைத் தொடுப்பிழையம். இதன தாயமானது சுண்ணும்பு உப்புக்களினுல், முக்கியமாகப் பொசுபேற்றுக்களாலும் காபனேற்றுலும், நிரப்பப்பட்டுக் காணப்படும்.

**என்புச் சிறுதுணிக்கை, (bone corpuscle).** ஓர் என்புக்கலம்.

**என்புசுற்றி, (periosteum).** முள்ளந்தண்டு விலங்குகளின என்புகளை இறுக்கமாக மூடியுள்ள தொடுப்பிழையப்படை. இதனேடு தசைகளும் சிரைகளும் தொடுக்கப்பட்டிருக்கும். இது உயிர்ப்புள்ள அல்லது (நிறையுடலியில்) சத்திவாய்ந்த என்பாக்குமரும்பர்களைக் கொண்டிருக்கும். முளையங்களிலும் நிறையுடலிகளிலும் என்புமுறிதலின் பின் என்பாக்கத்திற்கு இது முக்கியமானது.

**என்புமுளை, (apophysis).** முள்ளந்தண்டு விலங்குகளில் வழக்கமாகத் தசைத் தொடுப்பிற்காக என்பிலிருந்து கிளம்பும் ஒரு முளை. இன்செக்றுவில் தசைச் செருகலுக்காக உண்டான, கைறிறுலான, நெஞ்சறையின் வயிற்றுப் புற உள்வளர்ச்சி.

**என்பொன்றுதல், (anchylosis).** இரண்டு அல்லது பல என்புகளோ, வன்பகுதிகளோ சேர்ந்து ஒரு பகுதியாதல். உ-ம்., என்போடு என்பு ஒன்றுதல் அல்லது என்போடு பல் ஒன்றுதல்.

## ஏ

**ஏகர், (agar).** *ஏகர்–ஏகர் எனப்படும் ஊன்பசைப் பதார்த்தத்திலிருந்து தயாரிக்கப்பட்ட ஒரு பதார்த்தம்; பற்றீரியா வளர்ப்புக்களுக்கும் பிற வளர்ப்புக்களுக்கும் ஓர் ஊடகமாகப் பயன்படுவது. செவ்வல்காககளிலிருந்து பெறப்படும் ஏகர் உணவாகப் பயன்படுகின்றது.*

**ஏட்டு நுரையீரல், (lung-book).** *இஃது ஒட்டுப்பூவையொத்திருக்கும். ஆனால் காற்றைச் சுவாசித்தற்பொருட்டு திரிபடைந்து, ஒரேயொரு சிறிய துவாரத்தினால் வெளிப்புறத்தே திறக்கும். தேளில், இதைக் காணலாம்.*

**ஏட்டுப் பூ, (gill-book).** *ஒன்றின் மீது ஒன்று அடுக்கப்பட்டிருத்தலினால், புத்தகத்தின் ஒற்றைகள் போன்று காட்சி தரும் மெல்லிய இலைபோன்ற மென்றட்டுக்களை உடைய ஒரு பூ, ஏட்டுப்பூ எனப்படும். இதை விழுதுவலில் காணலாம்.*

**ஏந்தி, (thalamus).** *மூளையின் மூன்றுமறையின் இருபக்கங்களிலும் உள்ள முட்டைவடிவத்திரட்டுத் திணிவு.*

**ஏந்தியுரு, (stapes).** *நடுச்செவியில் ஆக உள்ளே உள்ள, அங்கவடி வடிவான என்பு; அம்பீபியன்களில் காணப்படுகின்ற நீள்வளையப் பலகணியிற் பொருந்தி அதை நிரப்புகின்ற, செவிச்சிறுகம்பத்தின் உளமூனை அல்லது முடியுரு.*

**ஏர்க்காலென்பு, (vomer).** *மூக்குப் பிரதேசத்திலுள்ள ஓர் என்பு.*

**ஏரா, (carina).** *(1) சில என்புகளில், கப்பலின அடிமரம் போன்ற வடிவத்தை உடைய முகடு ஏரா எனப்படும். உதா: பறவைகளின் மார்பென்பு. (2) பாணுக்கிளின் நடுக்கோட்டு முதுகுப்புறத் தகடு.*

**ஏற்றுந்தசை, (elevator muscle).** *உடலின் ஒரு பகுதியைத் தனது சுருங்குதலினால் உயர்த்த வல்ல ஒரு தசை.*

**ஐவிரலுள்ள, (pentadactyl).** *வழக்கமாக ஐந்து விரல்களில் முடிவடைகின்ற தான நாலு அவயவங்களைக்கொண்ட.*

# ஒ

**ஒட்டற்கலம், (adhesive cell).** ஒட்டுதற் பொருட்டு பிசினுள்ள சுரப்பைச் சுரக்கின்ற சுரப்பிக் கலங்கள் அல்லது சிறப்பான கலங்கள். எடுத்துக்காட்டாக, ஹீட்ருவின் பாதச சுரப்பி, தெனொபோர்களின் பரிசக கொம்புகள், துர்பெலலாறியாவின் மேற்றேல் ஆகியவற்றில் உள்ள கலங்கள்.

**ஒடுக்கவெச்சம், (pygidium).** (1) சில ஆாத்திறேப்பொட்டு விலங்குகளின் வயிற்றை மூடிக் காணப்படும் ஒரு வாறபரிசை ; (2) வண்டின் முனைவிலுள்ள மூடப்பெருத வயிற்றுத் துண்டம ; (3) செதிற்பூச்சியொன்றின் கூடடு முனைவுத் துண்டம் ; (4) தெள்ளுககளினது ஒன்பதாம் வயிற்றுத் துண்டத்தின் உணர்ச்சிக்குரிய முதுகுப்புறத்தகடு; (5) அன்னெலிட்டுக்களின் குதத்துண்டம்.

**ஒடுக்கற்பிரிவு, (meiosis).** மூலவுயிர்க் கல நிறமூர்த்தங்கள், முதிர்வினபோது இருமடியான தொகையிலிருந்து ஒரு மடியான தொகைக்கு ஒடுங்கும் பிரிவு முறை.

**ஒட்டுண்ணி, (parasite).** பிறிதோர் அங்கியின் உடலில் அகத்தேயோ புறத்தேயோ வாழ்ந்து, அதனிலிருந்து வாழ்வுத்தேவை பெற்று, அதற்குப் பதிற் சேவை யாதும் புரியாது வாழ்வு நடத்தும் ஓர் அங்கி. ஒட்டுண்ணியாகவோ ஒட்டுண்ணியாய் இல்லாமலோ வாழக்கூடிய ஓர் அங்கி அமையத்திற்கேற்ற ஒட்டுண்ணி எனப்படும். ஒட்டுண்ணியாய் மட்டுமே வாழக்கூடிய ஓர் அங்கி கட்டுப்பட்ட ஒட்டுண்ணி எனப்படும். விருந்துவழங்கிக்கு ஒட்டுண்ணிகளால் தீமைகள் ஏற்படுவதும் உண்டு ; தீமைகள் ஏற்படாதிருப்பதுவும் உண்டு.

**ஒட்டுண்ணியில்பு, (parasitism).** இரு அங்கிகட்கிடையே அகத்தேயோ புறத்தேயோ உள்ள நெருங்கிய கூட்டுப் பங்காண்மை. இது ஒன்றுக்கு (விருந்துவழங்கிக்கு) தீமை பயப்பதாயும் மற்றதுககு (ஒட்டுண்ணிக்கு) நன்மை பயபபதாயும் அமைந்துள்ளது. பின்னையது தனது போசணையை விருநதுவழங்கியின் போசணைப் பாய்பொருட்களிலிருந பெறும்.

**ஒத்த புணரி, (isogamete).** வியத்தமடையாத சோடிப்புணரிகளுள் ஒனறு.

**ஒருங்கமைந்த, (collateral).** அருகருகேயுள்ள : நரம்புக் கலத்தின் வெளிக்காவு நரம்பு முனையிலிருந்து வருகின்ற நுண்ணிய பக்கக் கிளைகளைக் குறிக்க இப்பதம் பிரயோகிக்கப்படுகின்றது ; பரிவு நரம்புத் தொகுதியின் முள்ளந்தண்டுககு முன்னுள்ள திரட்டுக்களைக் குறிக்கவும் பிரயோகிக்கப்படுகின்றது ; வழி மரபுத் தொடர்பறற தனியன்கள் ஒரு பொது மூதாதையிலிருந்து இயல்புகளைத் தலைமுறையுரிமையாகப் பெறுதலைக் குறிக்கவும் பிரயோகிக்கப்படுவது ; முக்கியமான நாளத்தில் சுற்றோட்டம் தடைப்படும்பொழுது நிலைச் சங்கமத்தினுல் சுற்றோட்டம் பிற பகுதிகளோடு நிறுவப்படுதலைக் குறிக்கவும பிரயோகிக்கப்படும்.

**ஒருங்குதல், (convergence).** வெவ வேறு கூட்டங்களைச் சார்ந்த அங்கிகளில் ஒரே மாதிரி இயல்புகள் விருத்தியடைதல் ; பல்லின உருவொப்பு உரு விருத்தி ; ஒத்தவுருநிலையுள்ளது.

**ஒருங்குமுறைக் கூர்ப்பு, (convergent evolution).** மரபு எவ்வாறிருந்தபோதிலும், பல்வேறு திறப்பட்ட வாழிடங்கள் அல்லது தோற்றங்கள் பெறுவதற்கு சந்தர்ப்பம் இன்மையால், எளிய, ஒரே மாதிரியான சூழலில் வாழும் விலங்குகளால் ஒரே மாதிரியான இயலபுகளை விருத்தி செய்வதற்காக, அவற்றில் உண்டாகும் நாட்டம்.

**ஒருசீர்வெப்பத்துக்குரிய (இளஞ்சூட்டுக் குருதிநிலையான), [homoiothermic (warm blooded)].** சூழல் வெப்பத்தினின்றும் கட்டற்று, வழக்கமாக அதற்கும் மேலாக ஒரு புள்ளியில் ஒரே நிலையில் தமது உடல் வெப்பத்தை

உடையதாய்க் காணப்படும் விலங்குகளைக் குறிக்கின்றது இப்பதம் ; ஆள் வெப்பத்துக்குரிய (idiothermous).

**ஒருமுறை உற்பத்தித் தந்தமுள்ள,** (monophyodont). ஒரே யொரு பற்கூட்டத்தை மட்டுமே உடைய ; பாற்பல் லமைப்பானது முதிர்மூலவுரு வாழ்வில் அகத்துறிஞ்சப்பட்டுவிடும் அல்லது முற்றுகவே இல்லாது காணப்படும்.

**ஒளிவாங்கி,** (photoreceptor). ஒளித் தூண்டலைப் பெறுகின்ற ஓர் உணர்ச்சியுள்ள நரம்பு முளை.

**ஒற்றப்போடு,** (octopod). எட்டுப் பாதங்களை அல்லது கைகளை உடையவிலங்கு.

**ஒன்றியகுழியம்,** (syncytium). கலங்களாக வியத்தமடையாது பலகருக்களை உடையதாய்க் காணப்படும் மூலவுருத் திணிவு. உ–ம்., முளையூட்டியின் சூலில உள்ள போசணையரும்பரின் (ஒன்றிய குழியப் போசணையரும்பர்) புறப்படை, பிளாஸ்மோடியும். பொதுமைக் குழியம்.

**ஒன்றிய புணர்ச்சி,** (syngamy). இலிங்கமுறை இனப்பெருக்கம் ; புணரிகள் இணைதல்.

**ஒன்றிய வாழ்வு,** (symbiosis). இரு விலங்குகள் அல்லது இரு தாவரங்கள் அல்லது தாவரமும் விலங்கும் அல்லது ஒன்றிய வாழ்வுளிகள் ஒன்றுக்கொன்று நன்மை பயக்கும் வகையில் கூட்டாளித் தன்மையுடன் வாழ்ந்து வரும் நிலை ; ஓர் இனத்தை அல்லாது பலவினங்களைச் சேர்ந்த அங்கிகள் ஒன்றாய் வாழுதல்.

**ஒன்றிய வாழ்வுளி,** (symbiont). ஒன்றிய வாழ்வில பங்கு கொள்ளும கூட்டாளிகளுள் ஒன்று.

## ஓ

**ஒட்டு குழாய், (siphon).** *பாய்பொருளை உள்ளிழுப்பதற்கோ வெளியேற்றுவதற்கோ உதவியாய் உள்ள ஒரு குழாய் வடிவ அங்கம். எடுத்துக்காட்டாக, இரு வால்வுடைய மொல்லுஸ்காப் பிராணிகளிற் காணப்படும் ஆவரண ஒட்டு குழாய்கள்.*

**ஒட்டுக்குழாய்த் தவாளிப்பு, (siphonoglyph).** *கடல் அனிமொனிகளின தொண்டையில் உள்ள இரண்டு நீள் பககத் தவாளிப்புகள் அல்லது சிறுதவாளிப்புகளுள் ஒன்று.*

**ஒட்டுச்சுற்றி, (peristracum).** *மொல்லுஸ்களிப் பிராணியின் ஒட்டில் உள்ள கொம்பாலான வெளிப்படை.*

**ஒடத்தாடை, (scaphognathite).** *தசக்காலிக் குறுஸ்ராசெயாவில் உள்ள இரண்டாம் அனுவின் வெளிக்கான்முட்டு. இதன் அசைவினுல் பூ அறையினூடாக நீர் செல்லுகின்றது.*

**ஓடு, (shell).** *கைற்றின், சுண்ணும்பு, சிலிக்கா முதலிய அசேதனவுறுப்புப் பதார்த்தங்களாலாய ஒரு வன்மையான வெளிக்கவசம் அல்லது வெளிவன்கூடு.*

**ஓட்டுச்சுரப்பி, (shell gland).** *தனது சுவர்களிலிருந்து ஓடு உண்டாவதற்கான பதார்த்தத்தைச் சுரப்பதாய் அமைந்துள்ள ஓர் அங்கம்.*

**ஓமோன்கள், (hormones).** *வழக்கமாகக் கலங்களில் உற்பத்தியாகித் தூரத்தே உள்ள பிற கலங்கட்கும் உடல் முழுவதற்குமே கொண்டு செல்லப்பட்டு, அவற்றின் சீரான தொழிற்பாட்டிற்கு இன்றியமையாதவையாய்க் காணப்படுகின்ற பதார்த்தங்கள்; பிரசாரணத்திஞல் குருதிக் கலன்களுட் செல்கின்ற, கானிலிச் சுரப்பிகளின் சுரப்புக்கள்; அருட்டும் கருவிகள்.*

**ஓரினத் தந்தமுள்ள, (homodont).** *வியத்தமடையாது, எல்லாம் ஒரேமாதிரியான பற்களை உடைய.*

## க

**கங்கணம், (annulus).** வளையவடிவான யாதுமோர் அமைப்பு; ஐவிரல் அமைப்பையுடைய முன்னவயவத்தின் நான்காவது விரல்; ஆர்த்திரேப்போடாவில், சிறு மூட்டுகளாலாகும் ஒரு மூட்டின் உப பிரிவு; ஹிறுடினெயாவில், உடற்றுண்டத்தைப் புறத்தே பிரிவுபடுத்தும் ஒரு குறுக்கு வளையம்.

**கசியிழையம், (cartilage).** முள்ளந்தண்டு விலங்குகளின் வனகூட்டிழையம். இது மீளசத்தியுடையதும் காபோவைதரேற்றுக் கொண்டதும் எண்ணற்ற கோலாசின் நார்களை உடையதுமான, தயாத்தில் சிதறபபட்டுக் காணப்படும் வட்டமான கலங்களை உடையது. நிறையுடலிகளின் கசியிழையத்தில் குருதிக கலன்கள் காணப்படமாட்டா. செபலொப்போடோப் பிராணிகளில் (ஒக்ற்றேப்புஸ, கணவாய், ஆதியன) கசியிழையததைப் போன்ற பொருள் ஒன்று உண்டு. இது மூளைக்கு ஆதாரமாய் அமைந்துளது.

**கசியிழைய மண்டை, (chondrocranium).** முளையங்களிலுள்ளதுபோல் தற்காலிகமாகவோ, சில மீன்களிலுள்ளதுபோல நிலையாகவோ, காணப்படுகின்ற கசியிழைய நிலையிலுள்ள தலையோடு.

**கசியிழையவென்புகள், (cartilage bones).** கசியிழையம் என்பாக்கப்புட்டு உண்டான என்புகள.

**கட்கொம்பு, (ommatophore).** ஒரு கண்ணைக் கொண்டிருக்கும் அசையககூடிய காம்பு.

**கட்டுச்சேணம், (clitellum).** இது ஒலிகோகீற்றுவின் மேற்றோலிலுள்ள ஒரு சிறப்பான சுரப்பிப் பிரதேசம். இது முளையத்துக்கு உணவாக அமையும் அல்புமினையிட்டுத் திரவியத்தையும் புழுக்கூட்டையும் சுரக்கும்.

**கட்புருவம், (eye brow).** (1) கண்ணிறகு மேலே காணப்படுகின்ற வில், அதாவது முகடு. (2) இம்முகட்டில் வளர்ந்து அதை மூடிக்கிடக்கும் மென்மையான மயிரும் கட்புருவம் எனப்படும்.

**கட்புள்ளி, (eye spot).** சில கீழ்வகை விலங்குகளில் காணப்படுகின்ற ஒளி உணர்வுடைய ஒரு சிறு நிறப்பொருட் துணிவு.

**கடந்து கருக்கட்டல், (cross fertilization).** ஒரு தனியனின் பெண்புணரிகளை இன்னோர் தனியனின் ஆண்புணரிகள் கருக்கட்டல்.

**கடற்பஞ்சுகள், (sponges).** பலகலங்களாலான அசைவற்ற விலங்குகள். ஆனால் இவை மெற்றுசோவாவைக் காட்டிலும் விதசியாசமான ஒழுங்கில் அமைந்தவை. இதனால் ஏனைய எல்லாப பல்கலமுளள விலங்குகளிலிருந்தும் வேறுபடுத்தி பரசோவா எனும் கூட்டத்துள் கொண்டுவரப்பட்டுள. எடுத்துககாட்டாக, அவை நரம்புத் தொகுதியொன்று இல்லாதவை; காறைக் கலங்களை உடையவை. இக்காறைக்கலங்கள், சவுககுள்ள விலங்குகளின் ஒரு வகைக் கூட்டமாகிய கொயனெபிலாஜெல்லாற்றுக்களில் மட்டுமே காணககிடப்பதால கடற்பஞ்சுகள அவற்றிலிருந்தே கூர்ப படைந்திருககவேணடும். சிறிய இல்லிகளினூடாக நீரோட்டம் இழுக்கபபட்டுப் பெரிய இல்லிகளினூடாக வெளியேற்றப் படுகையில், வழியில் உணவுத் துணிக்கைகள் சேகரிக்கப்படுகின்றன. அனேகமான கடற்பஞ்சுகளின் உடலுக்கு ஆதாரமாயமைநதுளள வன்கூடானது சுண்ணும்பாலோ, சிலிக்காவினுலோ இசுப்பொஞ்சினுலோ (ஒரு பட்டுப் போன்ற புரதத்திரவியம்) ஆனதாய்க் காணப் படும்.

**(கடற்) பாதாளத்துக்குரிய, (abyssal).** ஆழமான நீரில் (எறத்தாழ 1,000 மீறறருக்கும் கீழே) குடி கொண்டுள்ள: இஃது அங்கு வழககமாகக் காணப்படும் அங்கிகளையோ திரவியங்களையோ குறிக்க வழங்குஞ் சொல்.

**கடற்புறவோட்டமுள்ள, (catadromous).** (மீன் சம்பந்தப்பட்டது.) சாதாரண வாழிடத்தை விடுத்து முட்டையிடும் பொருட்டு அடர்த்தி கூடிய நீர் நிலையை நாடிக் குடிபெயர்தல். உதாரணம்,

நன்னீரில் வாழும் விலாங்கு நன்னீரை விடுத்து முட்டையிடும் பொருட்டு உப்பு நீர் நிலையை நாடிக் குடிபெயர்தல்.

**கடற்றளவுயிர்,** (benthos). கடலடியிலுள்ள விலங்கினமும் தாவரவினமும்.

**கடைநுதலென்பு,** (temporal bone). செதிலென்புடன் கல்லுருவென்பானது இணைதலினால் முலையூட்டிகளின் தலையோட்டில் உண்டான ஒரு கசியிழையவென்பு.

**கடைவாய்ப் பற்கள்,** (molar teeth). முலையூட்டிகளிற் காணப்படும் அரைகரும் பற்கள் அல்லது கொடுப்புப் பறகள்; இவை பாற் பல்லமைப்பில் காணப்படமாட்டா.

**கண்டப்பை (பறவையினது),** [crop (of birds)]. பறவையின் உணவுக்குழாயின் பைபோன்ற விரிவு.

**கண்டமாலை,** (exophthalmic goitre). பாவிடோவின் நோய். கேடயச் போலிச் சுரப்பியின் மிகைப்பட்ட தொழிற்பாட்டினால் ஏற்பட்ட ஒரு நிலை. கேடயப் போலிச சுரப்பி பருத்தல், விழிகள் வெளித்தள்ளல், விரைவான நாடித் துடிப்பு, நடுக்கம், மனவுறுதியின்மை ஆகியன இந்நோயின் அறிகுறிகளாகும்.

**கண்ணாடியுடநீர்,** (vitreous humour). முள்ளந்தண்டு விலங்கின் கண்ணில், வில்லைக்கும் விழித்திரைக்கும் இடையே, பிற்பக்க அறையில் நிரம்பியுள்ள பாகுபோன்ற பதார்த்தம்.

**கண்ணாடியுரு,** (vitreous). பளிங்குக்குரிய; ஒளிபுகவிடுமியல்புள்ள; கண்ணின் உள்ளறையில் காணப்படும் தெளிவான பாகுபோன்ற பதார்த்தமாகிய உடநீருக்கு அல்லது உடலுக்குப் பொருந்தும்.

**கண்ணின்றன்னமைவு,** [accomodation (of the eye)]. மாறுபடும் தூரங்களிலுள்ள பொருட்களைத் தெளிவாகப் பார்ப்பதற்காகக் கண்கள் தமது பயன்படு குவியத்தை மாற்றும் திறமை. சாதாரண கண்ணுக்குப் பார்வை வீச்சு 10 அங்குலந் தொடக்கமாக முடிவிலிவரை உள்ளது. கண்ணின்றன்னமைவுச் சக்தி வயது போகப் போக வழக்கமாகக் குறைந்து கொண்டேயிருக்கும்.

**கண்ணீருக்குரிய,** (lachrymal). கண்ணீர் சுரக்கின்ற அல்லது கண்ணீர சம்பந்தப்பட்ட; கண்ணீரங்கத்துக்கு அண்மையிலமைந்த அல்லது அதற்குரிய; நாடி, என்பு, கான், சுரப்பிகள், பை என்பவற்றிற்கு பிரயோகிக்கப்படுகிறது.

**கண் மடல்,** (eye–lid). கண்ணின் மூடி. ஒரு விலங்கு அதன் கண் விழியை மூடுவதற்கோ திறப்பதற்கோ உதவியாக உள்ள அசையக்கூடிய தோற பகுதி. மீன்களை அடுத்துள்ள அனேகமான முள்ளந்தண்டு விலங்குகளில், மேல், கீழ் கண்மடல்கள் என்ற இரண்டு மடல்களும்—பலவற்றில், மற்றைய மடல்களுக்கு கீழே, சிமிட்டும் மென்சவ்வு எனப்படும் மூன்றுவது கண் மடலும் உள்ளதைக் காணலாம்.

**கண்மணி,** (pupil). விழித்திரைக்கு ஒளிக்கதிர்கள் செல்வதற்காக கதிராளியிற் காணப்படும் துவாரம்; ஓர் சிறு கண்ணின் மையப் புள்ளி.

**கண்மூலகம்,** (ommatidium). ஆர்த்திரேப்பொட்டுக்களின் கூட்டுக் கணணினது அமைப்பலகு.

**கண் விழி,** (eye–ball). முள்ளந்தண்டு விலங்குகளில், இட்டத்தட்ட கோளவுருவாய் அமைந்துள்ள கண்ணுறையும் (இது வல்லுறை, விழி வெண்படலம் ஆகியவற்றால் ஆனது) அதனுள்ளடங்கிய அமைப்புகளும் ஒருங்கே கண்விழி எனப்படும். முழு நிறைவான கண்.

**கணத்தாக்கம்,** (impulse). அருட்டலினால் தூண்டப்பெற்றுத் தானகப் பரப்புதலடைந்த குழப்பம். நரம்புநார் வழியாகக் கடத்தப்படும் "செய்தி". இது, குறிப்பாக நாரின் மேற்பரப்பு

மென்சவ்வை ஆட்படுத்தி நிகழுகின்ற இரசாயன பௌதிக நிகழ்ச்சிகளின் தொடர்ச்சியான அலே. கணத்தாக்கத் திற்கான சத்தியானது கணத்தாக்கத்தை நடாத்திச் செல்லும் தூண்டலினுற் கொடுபடாது, நரம்பு நாரின் வழிநெடுக நல்கப்படுகின்றது. அதன் விளைவாக கணத்தாக்கத்தினியல்புகள் தூண்டற பேற்றின் தன்மையாலோ அதன் செறி வினுலோ பாதிக்கப்படாது இருக்கும்.

**கண வரலாறு, (phylogeny).** ஓா குலத தின் விருத்தி வரலாறு.

**கணுக்காலனுவென்பு, (tarso meta-tarsus).** பறவைகளின காலில் கணுககாலென்புகளின் சேய்மை வரிசை யானது இரண்டாவதிலிருந்து ஐந தாவது வரை உள்ள அனுககணுக காலென்புகளுடன இணைதலினுல உண் டான ஒரு குறுகிய நேரான என்பு.

**கணுக்காலென்புகள், (tarsal bones).** இவை நாற்பாதமுளி முள்ளந்தண்டு விலங்குகளின் பின்னவயவப் பாதத் தின் (எறக்குறையக காறகணுவின்) அணமைப்பகுதியில உளள என்புகள். இவை ஆதியில் 10-12 என்புகளை யுடைய நெருக்கமான கூட்டங் களாயிருநதன. எழு கணுக்காலென்பு கள மனிதனில் காணப்படும். இவறறு ளொன்று (குதிக்காலெனபு) குதியி லுள்ளது. இவை கணைககாலென்பு, கணைககால் வெளியென்பு ஆகியவற் றுடன் அண்மைப் பகுதியிலும, அனுக் கணுககாலென்புகளுடன் சேய்மைப் பகுதியிலும் மூட்டப்பட்டிருக்கும.

**கணைக்கணுக்காலென்பு, (tibiotarsus).** பறவைகளில் அண்மைக கணுக்காலென புகளுடன் கணைக்காலெனபு இணைத லினுல் உணடான என்பு.

**கணைக்கால், (tibia).** பூச்சிகளின தும் அறக்னிட்டுக்களினதும நாலாம் மூட்டு.

**கணைக்கால் வெளியென்பு, (fibula).** நாற்பாதமுளி முள்ளந்தண்டு விலங்கு களின பின்னவயத்தின் கீழ்க்காலில (முழந்தாளுக்குக் கீழே) உள்ள இரண்டு என்புகளிலும் பின்பக்கமாக உள்ளதே இது (மற்றையது கணைக்காலுள்ளெ ன்பு).

**கணைக்கால் வெளியென்புரு, (fibulare).** கணைக்கால் வெளியென்போடு வரிசை யில உள்ள, கணுக்காற்றட்டின அண்மை நிரலில் உள்ள ஓர் என்பே இது.

**கணைக்காலுள்ளென்பு, (tibia).** கீழ்க் கால் முற்புற என்பு; முழங்காலுக்கும் கணுக்காலுக்கும் இடையே உட்பக்கமாக உள்ள பெரிய என்பு.

**கணைக்காலுள்ளென்புத் தொடுவை, (tibiale).** முளையத்திலுள்ள இவ் வென்பு நிறையுடலியில பாடடென்பின ஒரு பகுதியாக உள்ளது. பின்பககக கணுக்காற தசையின சிரையில் உளள ஓர் என்ருப்போலி யென்பு.

**கணைக்காலென்பு, (tibiofibula).** கணைக காலுளளென்பும் கணைககால வெளி யென்பும் இணைந்து உண்டான என்பு.

**கணைக்காற்பெருந்தொகை, (gastrocne-mius).** தரைவாழ் முள்ளந்தண்டு விலங்குகளில, கீழ்க்காலிலுள்ள ஒரு தசை.

**கதிர், (spindle).** கதிா வடிவமான யாதுமோரமைப்பு; சிறப்பாக, ஒடுக்கற் பிரிவினுல அல்லது இழையுருப்பிரிவி னுல் கரு பிரிவடையும பொழுது புன் மையத்திகடிடையே உண்டாகியிருக்கும் எக்குரோமாறறின் நார்களாலான சட்ட வமைப்பு.

**கதிராளி, (iris).** கண்ணில உள்ள ஒரு மெல்லிய, வடடவடிவமான, சுருங்கத தக்க, கலனுள்ள தடடு. இது விழி வெண்படலத்துக்கும விலலைக்கும இடை யேயும், கண்மணியைச் சுற்றியும், காணப்படும்.

**கதுப்பு, (gena).** சொககை அல்லது தலையின பககப் பகுதி. பூச்சித்தலையின முன்புறப், பக்கப பகுதி.

**கதுப்பென்பு, (molar bone).** யுகவென்பு அல்லது நுகவுருவென்பு.

**கப்பியுரு, (trochlea).** சிரை ஊடு செல்வதற்காக உள்ள கபபிபோன்ற ஓர் அமைபபு. எடுத்துக்காட்டாகப் புய வென்பு, தொடையெலும்பு, கட்குழி ஆகியவற்றில காணப்படுவது.

**கபச்சுரப்பி, (pituitary).** மூளையின பரிவககக்கீழின கீழுள்ள வளரியை (உடல்) குறிக்கும். கீழுள்ள வளரியானது முற்பககப் பிற்பக்கச் சோணைகளும நரம்புககாம்பும் (புனலுரு) அடங்கிய ஓர் அகஞ்சுரக்குஞ் சுரபபியாகும்.

**கம்பம், (column).** இறிஞெயிடெயாவில, காம்பு. முள்ளநதணடு விலங்குகளில், முணஞணில் நீள்பக்கமாக ஓடுகினற நரமபு நார்க்கற்றை; மூகசுப் பிரிசுவரின விளிம்பு. பொதுபபடச சொல்லப்புகில இது ஏதாகிலுமொரு கம்பம் போனற அமைப்பு. எ. கா. முணஞணை.

**கம்பமேலணி, (columnar epithelium).** அடித்தள மெனசவ்வில் வழககமாக ஒரு தனிப்படையாக, நெருக்கமாக அருகருகே, அடுக்கப்பட்டுளள அரியவுருவான கம்பக்கலங்களைக் கொண்ட ஒரு வகை மேலணி.

**கம்பளிச் சிறு கற்றை, (flocculus).** (1) மூளியின பககச்சோணை ஒவ்வொன்றிலும் உள்ள சிறிய துணைச்சோணை. (2) சில ஹிமெனொப்ரெருக்களில் காணப் படுகின்ற ஒரு பின்பக்க மயிர்த்திரள்.

**கரு, (nucleus).** (1) இது கலத்தின பிரதான அங்கம. கருமெனசவ்வினாற சூழப்பட்டுக் கலமுதலுருவினுள் வழக்கமாகக் கோளவுருவானதாய்க் காணப்படும் ஒருகுழியைக் கொண்டிருக்கும். இக்குழியினுள் உள்ள கருச் சாற்றினுள் ஓய்வு அவத்தையில் வலை வடிவத்தில உள்ள சிக்கலான புரதத் தொகுதியை அல்லது வட்டமானபுன் கருக்களை அல்லது இரண்டையும் இது கொண்டுள்ளது. புரதங்களாலான இத் தொகுதியானது கலத்தின் தொழில்களைக் கட்டுப்படுத்துவதுடன், கரு பிரிவடையும்பொழுது தலைமுறை யுரிமையான இயல்புகளின் கடதத லைத் துணிகின்றதாயும் அமைந்துளது. கலப பிரிவின பொழுது கருவில நூல் போன்ற உருவுடைய நிறமூர்த்தங்கள தெளிவாக தோற்றம் தருகின்றன. (2) யாதுமோர் விதை போனற அமைப்பு. (3) மூளையிலுள்ள ஓர் நரம்பு மையம். (4) சில ஹெமிமியாறியாவில், உடலின் பிறபக்க முனையில் உளள ஓரளவு சிறிய கருமையான திணிவு; இது களம், இரைப்பை, குடல் ஆகியவற்றை நிகர்க்கும். (5) ஒரு நரம்பு செலலும வழியிலோ நரம்பு நார்ச சுவட்டிலோ உள்ள நரம்பு நார்த் திரட்டு.

**கருக்கட்டல், (fertilization).** இலிங கவியததமடைந்துள்ள இரணடு புணரிகள் புணர்நது நுகமாதல் கருக கட்டல் எனபபடும்.

**கருக் குழியம் அல்லது கருவறை, (brood cavity or chamber)** ஒரு கருமடி.

**கருப்பை, (uterus).** பெண் முலையூட்டிகளில முளையம் விருததியடைவதற்காகவும் அம்முளையம் பிறப்பதற்கு முனனர் போசாக்கு ஊட்டத்திற்காகவும் அமைநதுள்ள அங்கம்; குட்டியோ முட்டைகளோ விருத்தியடைவதற்கென உளள சூலகக் கானின் விரிவடைந்த பகுதி.

**கருமடி, (brood pouch).** இழையங்களோ முட்டைகளோ வைக்கப்பட்டிருக்கும் ஒரு பைபோன்ற குழி; சில குறுஸ்ராசெயாக்களின் மார்பவயவங்களினடியில் தொடுக்கப்பட்டுள்ள தகடுகள ஒன்றின் மேலொன்று படிந்திருத்தலினால் உண்டான ஒரு வெளி.

**கருமுதலுரு, (nucleoplasm).** கலத்தின கருவில் உள்ள அடர்த்தியான முதலுரு.

**கருமென்சவ்வு, (nuclear membrane).** கருவைச்சுற்றியுள்ள மெல்லிய மென்சவ்வு. இது சூழவுள்ள குழிய முதலுருவால் ஆக்கப்பட்டது.

**கருவூண்,** (yolk). (1) சூலில் உள்ள சடத்துவமான, ஆக்கத்தில் ஈடுபடாத, போசணைப் பதார்த்தம். (2) ஆட்டுமயிரில் உள்ள கொழுப்புப் போன்ற பதார்த்தம்.

**கருவூண் மென்சவ்வு,** (vitelline membrane). கருக்கட்டிய சூலகத்தினுள் மேலும் விந்துக்கள் உட்புகாவண்ணம் அதைச் சுற்றி உண்டாகியுள்ள ஓர் பாதுகாப்பான மென்சவ்வு. இது சூலினுற் சுரக்கப்படுகின்றது. உ-ம்., கோழிமுட்டையின் கருவூணை மூடியுள்ள மென்சவ்வு.

**கருவூணாக்கி,** (vitellarium). தட்டைப் புழுக்களிலும் றொற்றிபெராகளிலும் காணப்படும் ஓர் கருவூண் சுரப்பி; சூலகக் காலின் ஓர் பகுதி.

**கருவூணுக்குரிய,** (vitelline). கருவூணைச் சார்ந்த அல்லது கருவூணை உற்பத்தியாக்கும் அங்கம்: நாடி, நாளம், கான், சுரப்பி, மென்சவ்வு முதலியவற்றைக் குறிக்கும்.

**கலக்கொள்கை,** (Cell Theory). இக்கொள்கை 1838-9 ஆண்டில் சிலேடென், இசுவான் என்போரால் தொடக்கிவைக்கப்பட்டது. இக்கொள்கை விலங்குகள், தாவரங்கள், ஆகியவை கலங்களையும் கலங்களின் விளைவுகளையும் கொண்டவை என்றும், வளர்ச்சியும் இனப்பெருக்கமும், அடிப்படையில், கலங்கள் (முதலுருவங்கள்) பிரிதலினால் நிகழ்வன என்றும் கூறும்.

**கலச்சாறு,** (cell sap). ஒரு கலத்தின் பாய்பொருட்கள்.

**கலச்சுவர்,** (cell wall). ஒரு கலத்தின் உள்ளுடனைச் சுற்றியுள்ள மென்சவ்வு அல்லது பிற தனிற்பிறந்த அமைப்பு.

**கலப்பிரிவு,** (cell division). ஒருகலம் மகட்கலங்களாகப் பிளவுபடுதல்.

**கலப்புப் பிறப்பு,** (hybrid). (1) இனங் கலந்த எதுவோரு விலங்கு அல்லது தாவரம். (2) பலவினநுகம்.

**கலம்,** (cell). ஒரு சிறிய குழி அல்லது உட்குழிவு; ஒரு சிறறறை. வழக்கமாக ஒரு கருவையோ கருத்திரவியத்தையோ உடைய முதலுருவின் அலகுத்திணிவு; தொடக்கத்தில் கலச்சுவரைக் குறித்தது. பூச்சியிறகுகளின நரம்புகட்கிடையே காணப்படுகின்ற இடைவெளிகள்.

**கலமென்சவ்வு,** (cell membrane). முதலுரு மென்சவ்வு.

**கலவடுக்கு,** (battery). சிலெனெ ரெருற்றுக்களின் பரிசகொம்புகளில் மிகநெருக்கமாக அடுக்கப்பட்டுக் கூட்டங் கூட்டமாகக் காணப்படும் அழனமொட்டுச் சிறைப்பைகள்.

**கலவிப் பறப்பு,** (nuptial flight). கருக்கட்டல் நிகழ்வுறும் காலத்தே இராணித் தேனீயினால் மேற்கொள்ளப்படும் பறப்பு. இப்பறப்பின்போது எண்ணற்ற ஆணீக்கள் கன்னி இராணியைத் தொடர்ந்து செல்லும். கருக்கட்டல் ஆகாயத்தே நிகழும்.

**கலவுடல்,** (cell body). நரம்புக் கலத்தின் கிளைகள் எழுகின்ற, கருவோடு கூடிய குழியமுதலுரு.

**கலன்,** (vessel). தெளிவாகவரையறுத்த சுவர்களை உடையதும், குருதி, நிணநீர், முதலியன சுற்றோடுகின்றதுமான யாதுமோர் குழாய் அல்லது கால்வாய்; எண்ணற்ற கலங்கள் மேற்பொருந்தியதன் பயனாக உண்டான தொடர்ச்சியான குழாய்.

**கலன்கோளம்,** (glomerulus). (1) ஹெமிகோர்டாவில, தும்பிக்கையில் இருக்கும் குருதிச்சிக்கல் உடைய ஓர் அங்கம்: கழிவகற்றுவது என நம்பப்படுகின்றது. (2) மூளையின் மணநுகர்ச்சிச் சோணையில் நரம்புச் சிறுநார்கள் ஒன்றோடொன்று பின்னப்பட்டுக்கிடக்கும் ஒரு கூடுபோன்ற திணிவு. (3) மயிர்குழாய்க் குருதிக்கலன்களாலான வலையுரு. போமானின் உறையின் உட்டிரும்பிய பகுதி. பரிவுத் திரட்டுக்களில் விலலையகத்துள்ள

உட்காவு நரம்பு முனைகள் ஒன்றோடொன்று பின்னப்பட்டுள்ள ஒரு திணிவு.

**கலன்றொகுதி,** (vascular system). குருதியையும் நிணநீரையும் சேர்ந்தாற்போல் சுற்றோட்டத்தில வைத்திருக்கப் பொறுப்பாயுள்ள அங்கங்கள்.

**கலனிடைக்குழி,** (lacuna). ஒரு சிறிய குழி அல்லது இடம்; உதாரணமாக, என்பில் கலங்களை உடைய குழிகளுள் ஒன்று.

“**கலோரி**” (**கிலோகலோரி**), [Calorie (kilocalorie)]. இது ஒரு கில்லோகிராம் நீரை 15° ச. இருந்து 16° ச. வரைக்கும் ஏற்றுவதற்குத் தேவையான வெப்பவளவு. பௌதிகவியலில் வழங்கப்பட்டுவரும் சாதாரண கலோரியைக் காட்டிலும் இது ஓராயிரந் தடவை பெரியது. இது விலங்குகளில் சத்தித் தொகையை அளந்தறியப் பயன படுகின்றது.

**கவசங் கழற்றல்,** (moulting). வெளிப் போர்வையை, உதாரணமாக இறக்கைகள், மயிர், தோல், கொம்புகள் ஆகியவற்றைக் காலத்துக்குக் காலம் உதிர்த்தல் அல்லது கழற்றல்.

**கவசம்,** (integument). யாதுமோர் உறையிடத்தக்கபடை, மென்சவ்வு, அல்லது அமைப்பு. உ-ம்., தோல், ஓர் பூச்சியின் உடற்சுவர் முதலியன.

**கவடு,** (groin) வயிற்றின் கீழ்ப் பகுதிக்கும் தொடைக்கும் இடையே உள்ள கோட்டைக் குறிக்கும் மடிப்பு, அல்லது பள்ளம், அல்லது இக்கோட்டுப் பிரதேசம்.

**கவர்,** (furca or fúrcula). யாதுமோர் கிளைவிட்ட அமைப்பு. இன்செக்றவில், ஒரு தனி அடியையும் இரு புயங்களையும் உடைய ஒரு நடுக் கோட்டு, மார்பு அக முனையம். டிப்செறவில் தும்பிக்கையின் வாய்ச்சோணைகளின் வன்கூடாய், அமைந்துள்ள, இரு புயங்களோடு கூடிய ஒரு கட்டைக் கோல். வோர்ற்றிபிறற்றவில், நரம்பு நார்களின் ஒரு விரிவு. குறுஸ்ராசெயாவில் வயிறறு முனையிலுள்ள ஒரு சோடி விரிவுடை முனைகள.

**கவரில்வால்,** (**ஓரினப் பகுதிவால்**), [homocercal]. சமனுன அல்லது கிட்டத்தட்டச் சமனுன சோணைகளை உடையதும் அச்சு அடியின் நடுவிற்குக் கிட்ட முடிவுறுகின்றதுமான ஒரு வாலினை உடைய.

**கழலை,** (tuberosity). வழக்கமாகத் தசை இணைப்பிற்காக என்பில காணப்படும் உருண்டையான மேடு.

**கழித்தல்,** (excretion). கழிவுபபொருட்களை அகற்றுதல்; கழிவுப்பொருள்.

**கழிநீரக நுண்டுளை,** (nephridiopore). கழிநீரகத்தின் புறத்துவாரம்.

**கழிநீரகம்,** (nephridium). முள்ளந்தண்டில்லா விலங்குகளிலும், தாழ்ந்த கோர்டாற்றுக்களிலும், புறத் தோற்படையிலிருந்து உற்பத்தியான கலவிடைக் கானுள்ள, துண்டத்தமைந்த கழிவங்கம்; இது, மாதிரியாக அதன உள் முனையில் இரு குழாய்க் குழியத்தில் அல்லது சுவாலைக் கலத்தில் முடிவடையும். மிகப் பொதுப்படையாகக் கூறின் ஒரு கழிவுச் சிறுகுழாய்.

**கழியறை,** (cloaca). பொதுவாகக் குதம், உற்பத்திக் கான்கள், சிறுநீர்க் கானகள் ஆகியன திறக்கின்ற ஒரு பின்பக்க உண்முகமடிதல் அல்லது அறை. உறெகோர்டாவில், கூடத்தின நடுக்கோட்டு முதுகுப்புறப் பகுதி. ஹொலொத்துறெயிடெயாவில், சுவாச மரங்கள் திறக்கின்ற சமிபாட்டுக் கால்வாயின் அகன்ற பின்பக்கமுள்ள முனைப்பகுதி.

**களம்,** (oesophagus). (1) முளளந்தண்டு விலங்குகளில், தொண்டையிலிருந்து இரைப்பை வரைக்கும் இட்டுச் செல்லுகின்ற உணவுக் கால்வாய்ப்பகுதி. இப்பகுதி வழக்கமாக நீர்ப்பாயக் கவசத்தையும் சமிபாட்டுச் சுரப்பிகளையும்.

உடையதாயிராது. (2) முள்ளந்தண்டில்லா விலங்குகளின் உணவுக் கால்வாயிலுள்ள இறையொத்த பகுதி.

**கற்கால்வாய்** (stone canal). எகிநோடேர்மாற்றுவின் தாய்க்கற்றகட்டிலிருந்து மேற்பக்கமாகவோ அல்லது கீழ்ப்பக்கமாகவோ இட்டுச் செல்லுகின்ற, கல்சியமேறிய சுவர்களையுடைய, திரவக் கலன்றொகுதியின் பகுதியாயமைந்த, ஒரு நிலைக்குத்தான குழாய் வடிவ அங்கம்.

**கற்பை,** (lithocyst). கற்களைக் கொண்டுள்ள ஒரு பை. இது மெதுசாக்களிலும் பிற முள்ளந்தண்டு விலங்குகளிலும் காணப்படும்; செவியங்கம் எனக் கருதப்படுகின்றது.

**கற்றலேசு,** (catalase). தாவர, விலங்கு இழையங்களிற் காணப்படுகின்ற ஒரு நொதியம். இது ஐதரசன் பரவொட்சைட்டை நீராகவும் ஒட்சிசனாகவும் பிரிக்கின்றது.

**கன்னவுமிழ்நீர்ச் சுரப்பி,** (parotid glands). (1) முலையூட்டிகளின் வாய்க்குழிக்குட்திறக்கின்ற சோடியாய் உள்ள உமிழ்நீர்ச் சுரப்பிகள். (2) சில அம்பீபியன்களின் தலைக்குப்பக்கத்தே காணப்படும் பெரும்வீக்கம்; இது திரண்ட தோற்சுரப்பிகளினால் ஆனது; சில வேளைகளில் நச்சுத்தன்மையது.

**கன்னவெலும்பு,** (cheek bone). (1) கண்ணுக்குக் கீழே, நுகவுருவென்பினால் ஆன என்பு முனைப்பு. (2) நுகவுருவென்பு.

**கன்னிப்பிறப்பு,** (parthenogenesis). கருக்கட்டல் இன்றியே முட்டையானது ஒரு புதுத் தனியனாக விருத்தியடைதல். இம்முறையினால் விருத்தியாகும் முட்டைகள் இருமடியானவையாகக் காணப்படும். ஆகையால் எச்சங்கள் யாவும் பிறப்புரிமையியலைப் பொறுத்த மட்டில் பெற்றாரை ஒத்தவையாய்க் காணப்படும். இப்படிப்பட்ட விலங்குகளில் இடையிடையே சாதாரண இலிங்கமுறையினப் பெருக்கம் நிகழ்ந்து பிறப்புரிமை மீளச் சேர்தலானது நிகழும். அத்துடன் ஆண்களும் இவ்விடயத்தில் ஆட்படுத்தப்படுகின்றன.

**கனிப்பொருளுப்பு,** (mineral salt). (1) கனிப்பொருளமிலத்தின் (அசேதனவுறுப்பமிலத்தின்) உப்பு. (2) கனிப்பொருளாய்க் கிடைக்கும் உப்பு.

**காக்கையலகுரு முளை,** (coracoid process). முலையூட்டிகளில் குறுக்கமடைந்த காகையலகுரு என்பு. இது தோட்பட்டையின் வயிற்றுப் புற முனையோடு இணைந்து சிறிய முளையாகவே இருக்கும்.

**காக்கையலகுருமேலென்பு** (epicoracoid). முள்ளந்தண்டு விலங்குகளில், காக்கையலகுருவென்பினதும் முனைகாக்கையலகுருப்போலியென்பினதும் கீழ் முனைகளை இணைக்கின்ற ஓர் என்பு அல்லது கசியிழையக் கூறு.

**காக்கையலகுரு வெலும்பு,** (coracoid). (1) இப்பதம், தோட்பட்டையெனப்படும் மார்புப்பட்டைக்கும் இடையே உள்ள மார்புவளையத்தின் எலும்பை அல்லது அதன் பகுதியைக் குறிக்கப் பிரயோகிக்கப்படும். (2) மேற்றோட்பட்டையென்பின் முளியின் மேல் பொருந்தியுள்ள இணையத்தைக் குறிக்கப் பிரயோகிக்கப்படும்.

**கஸ்திரோப்பொட்டு,** (gastropod). ஊர்வதற்கென இசைவாக்கப்பட்ட வயிற்றுப்புறத் தசைவட்டத்தட்டை உடைய ஒரு மொல்லுஸ்காப் பிராணி. உ-ம்., நத்தை.

**காதுமுதலென்பு,** (pro–otic). முள்ளந்தண்டு விலங்குகளின் செவியுறையின் முற்பக்க வென்பு.

**காபன் சக்கரம்,** (carbon cycle). காபனணுக்களை உலகம் முழுமையும் சுற்றோடச் செய்வது உயிருள்ள பொருட்களேயாகும். முக்கியமாகக் காபனீரொட்சைட்டிலுள்ள காபன் தாவரங்களின் ஒளிச்சேர்க்கையின்பொழுது சிக்கலான அசேதனச் சேர்வைகளாக ஆக்கப்படுகின்றது. இச் சேர்வைகள் பின்னர் சுவாசித்தலின்

பொழுதும், தாவரங்கள் இறந்து அழுகு கின்றபொழுதும், சிதைவுற்று காபனீ ரொட்சைட்டாய் மாறும். அன்றியும், தாவரங்கள் இலையுண்ணுகின்ற விலங்கு களினால் உண்ணப்பட்டு, பின்னர் இலை யுண்ணும் அவ்விலங்குகள் ஊனுண் ணும் விலங்குகளால் உண்ணப்படுவன. பிந்தியவற்றில் உளள காபன் சேர்வை கள் சுவாசத்தின் போது அல்லது அவை இறந்து அழுகப்பெறுதலின் பொழுது காபனீரொட்சைட்டாகச் சிதைவுறும்.

**காபனிபெரசு, (carboniferous).** நிலக் கரிப் படுக்கைகள் உண்டான காலம் உட்பட பிந்திய பலியோசோயிக் காலத் தைக் குறிக்கும்.

**காபோவைதரேற்றுக்கள், (carbohydrates).** இவை $C_x(H_2O)_y$ எனும் பொதுவான சூத்திரத்தினால் குறிக்கப்படுகின்ற சேர்வைகள் இங்கு $x$ ஆனது 6 ஐ அல்லது 6 இன பெருக்கத்தைக் குறித்து நிற்கும். இவை தாவரங்களிலும விலங்குகளி லும் பரந்து காணப்படுகின்றன. உ-ம்., வெல்லங்கள், மாப் பொருள், செலு லோசு. வித்தியாசமான பொதுச் சூத் திரத்தையுடைய காபோவைதரேற்றுக் களும் உண்டு. ஆனால் அவை மேற்கண்ட பதார்த்தங்களுடன் நெருங் கிய தொடர்புடையனவாய் இருக்கும். உ-ம்., இறும்ரேஸ், $C_6H_{12}O_5$. காபோவைதரேற்றுக்கள் ஒரு சக்கரோ சுக்கள், இரு சக்கரோசுக்கள், முச்சக்க ரோசுக்கள், பல்சக்கரோசுக்கள் அதா வது பொலியோசஸ் என்றவாறு பிரிக் கப்பட்டிருக்கும். உணவிலுள்ள காபோ வைதரேற்று மூலக்கூறு அதன மூல கங்களின ஒட்சியேற்றத்தினால் சத்தியை வழங்கும்.

**காம்பிறக்கை, (quill feather).** பறவை யின் சிறகுகளிலும் (சிறகுக் காம் புகள) வாலிலும் (மூடல்கள்) காணப் படும் இறக்கைகள்.

**காம வெப்பச் சக்கரம், (oestrous cycle).** பல முலையூட்டி இனங்களில், இலிங்க முதிர்ச்சியடைந்த பெண்களில், கருவுற் றிராத காலத்தே (விருத்திக் காலம் உண்டாயின் அக்காலத்தே மட்டும்) நிக ழும் குறுகிய கால (இனங்களுக்கேற்ப ஐந்து நாட்களுக்கும் அறுபது நாட் களுக்கும் இடைப்பட்டுக் காணப்படும்) இனப்பெருக்கச் சக்கரம்.

**காரணி, (factor).** ஒரு பிரதிபலனை அடைவதற்காக உதவியாக உள்ள ஏதே னுமொரு கருவி (வாழ்க்கைக்குரிய, காலநிலைக்குரிய, போசணைக்குரிய கருவி கள் போன்றவை). மெண்டற் காரணி அல்லது பரம்பரையலகு.

**கால்வாய், (canal).** (1) ஒரு கான். (2) ஒரு குழாயுருவான வழி அல்லது பாதை. இது என்பில் ஹவேசியன் கான்களாகவோ சமிபாட்டுக் கால்வாய், கவட்டுக் கால்வாய் போன்றவற்றில் மென் இழையங்களால் ஆன கால்வாய் களாகவோ இருக்கும். (3) சிறப்பாக ஊனுண்ணும் பல கடல்வாழ் கஸ்தி ரோப்பொட்டுக்களின் ஓட்டின் வாயில் உள்ள ஒரு தவாளிப்பு. இது பெரும் பாலும் ஒரு தெளிவான சொண்டாக நீட்டப்பட்டு, அங்கு ஓட்டுகுழாய் வந் தடையப் பயன்படுகின்றது.

**கால்வாய்த் தொகுதி, (canal system).** விலங்குடலின் பல்வகைக் குழிகளைத் தொடுக்கும் பாதைகளையுடைய, யாது மோர் தொகுதி. உ-ம்., முருகைக் கல், கடற் பஞ்சு ஆகியவற்றிலுள்ள பாதைத் தொகுதி.

**காலநிலையிணக்கம், (acclamatisation).** (1) ஓர் இனமானது வேறுபட்ட கால நிலைக்கேற்பவோ சூழலுக்கேற்பவோ தன்னைப் பழக்கப்படுத்திக் கொள்ளல். (2) மனிதனின் கண்காணிப்பின் கீழ் காலநிலையிணக்கம்.

**காலுரு மூளைத்திணிவுகள், (crura cerebri).** நடு மூளையின் வயிற் றுப்புறப் பக்கப் பகுதியை ஆக்கு கின்ற, இரண்டு உருளையுருவத் திணிவு களாகிய மூளையத் தண்டடிகள்.

**காவி, (vector).** அநேக முள்ளந்தண் டில்லா விலங்குகளைப்போன்று, நோய் விளைவிக்கும் அங்கியினுடைய விருந்து

வழுங்கியாக இருந்து அதனை இடம்கடத்தும் விலங்கு. உ—ம்:—மலேரியா ஒட்டுண்ணியின் காவியாகிய நுளம்பு.

**காளானுருவச் சுரப்பி,** (mushroom-shaped gland). ஆண் ஒர்தொப்ெ ரூவில் காணப்படுகின்ற பெரிய, அடக்கமான, காளான் வடிவ, துணை உற்பத்தித் சுரப்பிகளாலான திணிவு.

**காற்கணு,** (ankle). காலுக்கும் பாதத்துக்கும் இடையே உள்ள மூட்டு. இஃது கையிலுள்ள மணிககட்டு, குதிரையின் கணுககால் மூட்டு, பெரும்பாலும் தவருக அழைக்கப்படும் பறவையின முழங்கால் ஆகியவற்றை ஒத்தது.

**காற்பெருவிரல்,** (hallux). தரைவாழ் முள்ளந்தண்டு விலங்குகளில், பின்னவயவத்தின் முதலாவது காலவிரல்.

**காற்பெருவிரலின் முன்முளை,** (pre-hallux). அம்பீபியாவிலும், மம்மாலியாவிலும், பின்னவயவத்தில் உள்ள விருத்தியடையாத மேலதிக விரல்.

**காற்றின்றி வாழுமுயிர்,** (anaerobe). சுயாதீன ஒட்சிசன் இல்லாத நிலையிலே உயிர்வாழக்கூடிய ஒரு அங்கி. காற்றுவாழ் அங்கிக்கு எதிரானது.

**காற்றுத் தோற்பை,** (air bladder). மீன்களிலே குடலின் கிளைக்குழாயாக விருத்தியடைந்து வாயுவைக் கொண்டிருக்கின்ற பையே இஃது. வாழ்வின் பிற்காலத்தே இஃது வாயுக்கானுல் குடலோடு தொடர்பு பூணும். வழக்கமாக இது நீர் நிலையியக்கத் தொழிலுடையது. ஆனால், சிலவற்றில் சுவாசித்தலில் அல்லது கேட்டலில் அல்லது ஒலித்தலில் உதவும் தொழிலினை உடையதாயிருக்கும்.

**காற்றுப் பைகள்,** (air sacs). பறவைகளிலே, காற்றால் நிரம்பலுற்று நுரையீரலோடு தொடுகைபூண்டுள்ள வெளி. பல பூச்சி வகைகளிலே வாதனுளிகளின் விரிவுகள். சில பூச்சிக் குடம்பிகளிலே நீர் நிலையியக்கத் தொழிலையுடையதும் வாதனுளித் தொகுதியைக் குறித்து நிற்பதுமான பைகள்.

**காறை,** (collar). புனற் குழியத்தின் விளிம்பு; ஹெமிகோர்டாற்றுவில் தும்பிக்கைக்குப் பின்னுல் உள்ள ஒரு காறை போன்ற வரம்பு; சுருளிபோன்ற ஓடுடைய கஸ்திரோப்போடாவில், ஓட்டினை, சொண்டிற்கு அப்பால் தள்ளிக்கொண்டிருக்கும் காறை போன்ற சதைப்பிடிப்பான மென்மூடி விளிம்பு; பொதுப் படையாகச் சொல்லப்போனுல், காறை போன்ற யாதுமோர் அமைப்பு.

**காறைக்கலம்,** (collar cell). ஒரு புனற்குழியம்.

**காறையென்பின் கீழுள்ள,** (subclavian). சிறுசாவியென்புக்கு கீழுள்ள; நாடி நாளம், நரம்பு, தசை முதலியனவற்றைக் குறிக்கும்.

**காறையென்பு,** (collar bone). சிறுசாவியென்பு.

**கானில் சுரப்பிகள்,** (ductless glands). கானற்றவையாயும் தமது சுரப்புக்களை நேரே குருதிக்குள் வெளித்தள்ளுகின்றவையாயும் உள்ள சுரப்பிழையத் திணிவுகள். உ-ம்., நிணநீர்ச் சுரப்பிகள், அகஞ்சுரக்குஞ் சுரப்பிகள் முதலியன.

**கிண்ணக்குழி,** (glenoid cavity). நாற்பாத முள்ளந்தண்டு விலங்குகளில், மார்புப் பட்டையின (தோட்பட்டையென்பின மேலும், காக்கையலகுரு என்பு உள்ள போது அதன் வெளியிலும்) இருமருங்கிலுமுள்ள கிண்ணம் போன்ற குழி. இதனுள் புயவென்பு பொருந்தித் தோள் மூட்டாகின்றது.

**கிண்ணவுருவான,** (cotyloid). கிண்ண வடிவான; அசற்றபுலக் குழிக்குரியது.

**கியூற்றின் அல்லது தோலகம்,** (cutin). தடித்த மேற்றோற் கலங்களின் வெளிப் படைகளிற் காணப்படுகின்ற செலுலோசை ஒத்த ஒரு பதார்த்தம்.

**கிராபின்புடைப்பு** (graffian follicle). முலையூட்டியின் சூலகத்தில் காணப்படுகின்ற கோளவுருவான புடகம். இதன்

சுவரோடு முட்டைக்குழியம் தொடுக்கப் பட்டு பாய்பொருளால் நிரம்பலுற்றிருக்கும். மற்றைய முள்ளந்தண்டு விலங்குக்களின் சூலப்புடைப்புக்களிலிருந்தும் இது வேறுபடுவதற்குக் காரணம குழியுடையமையேயாம்.

**கிளைக்குழாய்,** (diverticulum). ஒரு கால்வாயிலிருந்தோ குழியிலிருநதோ கிளைத்தெழுந்து, சேய்மைப் பக்கத்தில் மொட்டையாக உள்ள ஒரு குழாய அல்லது பை.

**கிளைக்கோசன்,** (glycogen). " விலங்கு மாப்பொருள் ". எனைவிறந்த குளுக கோசு மூலக்கூறுகளினால் உண்டான கரையத்தக்க ஒரு பல்சக்கரைட்டு. விலங்குகளிலும் பங்கசுக்களிலும், காபோவைத ரேற்று கிளைக்கோசன் வடிவில் சேமித்து வைக்கப்படுகிறது. இது, முள்ளந்தண்டு விலங்குகளில் சிறப்பாக ஈரலிலும் தசைகளிலும் காணபபடுகின்றது.

**கிறேனியாற்று,** (craniate). மண்டையோடுள்ள விலங்கு.

**ஹீட்ருருவுரு,** (hydroid). ஹீட்ருேசோவாவின் பொலிப்பு.

**கீடகச்சென்னி,** (scolex). நாடாப புழுவின் தலை அல்லது முற்பக்க முனை.

**கீழ்க்கழுத்துச் சுரப்பி,** (thymus gland). கழுத்தின் கீழ் முற்பக்கப் பகுதியிலோ இதயத்தைச் சுற்றியோ காணப்படும் ஓர் அகஞ்சுரக்குஞ் சுரப்பி ; இது மனிதனில் பூப்பின் போது உயர் வளர்ச்சியடைநது பின்னர் குன்றுகிறது.

**கீழ்க்காலென்பு,** (cannon bone). (1) விரல்கள் எண்ணிககையில் குறைந்து காணப்படுகின்ற முலையூட்டிகளில், உ-ம். குதிரையில், நிலையாயுள்ள அனுமணிக் கட்டென்புகளோ அனுக்கனுக்காலென் புகளோ இணைநது உண்டான ஓர் என்பு (இங்கு இது விரல் தொடங்குமிடந தொடக்கம் கணுக்கால் வரையுமுள்ள அவயவத்தைத் தாங்கிநிற்கும்). (2) பறவைகளில் கணுக்காலனு வென்பு.

**கீழுள்ள வளரி,** (hypophysis). (1) கபச் சுரப்பியுடல். (2) லான ஸ்லெற்றில் உளள மணநுகர்ச்சிக் குழி.

**குடம்பி,** (larva). சில விலங்குகள் பொரிக்கும்போது இருக்கும் நிறையுடலிக்கு முன்னைய பருவம். வழக்கமாக நிறையுடலியினின்றும் வித்தியாசமான முறையில் தன்னைத்தானே பாதுகாப்புச செய்யவல்லது ; வழக்கமாக இலிங்க முறை இனவிருத்தி செய்யு வல்லமையற்றது ; வடிவத்தில் இலிஙக முதிர்ச்சியடைந்த நிறையுடலியைக் காட்டிலும் முறறும் வித்தியாசமானது. வழக்கமாக விரைவான உருவமாற்றத்தால் நிறையுடலியாக மாற்றமடைகின்றது. உ-ம்., தவளையின் வாற்பேய், வண்ணாத்திப்பூச்சியின் மயிர் கொட்டி முதலியனவும் கடல்வாழ் முள்ளந்தணடுலி விலங்குகள பலவற்றின் (எக்கினோடேர்மாற்று, மொலுஸ்கா, அனெலிடா) பிளாந்தனுககுரிய ஒளிபுக விடுகின்ற, பிசிருடைய, நிறையுடலிகளிலிருந்தும் முற்றிலும் வேறுபட்ட குடமபிகளும்.

**குடல்,** (intestine). உணவுக்கால்வாயில், குடல்வாய் தொடங்கிக் குதம் வரையும் உள்ள பகுதி அல்லது இதையொத்த பகுதி.

**குடல்வளரி,** [appendix (vermiform)]. பெருங்குடலும் சிறு குடலும் சந்திக்குமிடத்தில் குடலின் வலப்பக்கத திலிருந்து வளருகின்றதாய ஒரு நுனி மூடபபட்ட சிறுகுழாய்.

**குடல்வாய்க்குரிய,** (pyloric). குடல்வாய் சம்பநதப்பட்ட அல்லது குடல்வாயின் பிரதேசத்திலுளள ; நாடி, குழி, சுரப்பிகள், துவாரம், வால்வு, நாளம் எனபவற்றைக் குறிககும். பூச்சிகளின் நடுக்குடலுக்கும் பிற்குடலுக்கும் இடையே உள்ள இறுககியையும் குறிக்கும்.

**குடல்வாய்ச் சுருக்கி,** (pylorus). முள்ளந்தண்டு விலங்குகளின் இரைப்பைக்கும் முன்சிறுகுடலுக்கும் இடையேயுள்ள சந்திப்பு. இது சீதமென்சவ்வு

மடிப்பொன்றினுள் ஓர் இறுக்கித்த சையை உடையதாய்க் காணப்படும். இவ் விறுக்கித தசையானது இரைப்பை யினுள் உணவு சமிபாடடைந்து கொண் டிருக்கும் பொழுது சந்தியை மூடுவதாய அமைநதுளது.

**குடற்குழியம்,** (enterocoel). ஆதிக் குடற் குழியிலிருந்து ஒரு பைபோன்ற வெளிவளரிபோன்றோ அது போன்ற வெளிவளரித் தொடராகவோ எழும் ஓர் உடற்குழி.

**குடற்குறை,** (colon). இது முள்ளந் தண்டு விலங்குகளின் ஒடுக்கமானதும குடலின முடிவிலுள்ளதுமான நேர குடல் தவிர்ந்த பெருங்குடல். இது மீனகளைவிடுத்து அமனியோற்றுக் களிலும் சில அம்பீபியாக்களிலும், சிறு குடலிலிருந்து ஒரு வால்விஞல தெளிவு படுத்தப்பட்டிருக்கின்றது. இது மலங் களிலிருந்து நீரை உறிஞ்சும் தொழிலில பெரிதும் ஈடுபட்டிருக்கும்.

**குடற்சாறு,** (succus entericus). முள்ளநதணடு விலஙகுகளின் குடற சுரப்பிகளிஞல் சுரககபபடுகினற சமிபாட்டுச் சாறு.

**குடற்பால்,** (chyle). குழம்பாககபபடட கொழுப்புச சிறு கோளங்களையுடைய நிணநீர். இது சமிபாடடின போது நிணநீர்க்கானகளில காணப்படும்.

**குடா,** (sinus). ஒரு குழி, பள்ளம, ஒதுககிடம் அலலது அகலுகை; தவாளிபபு அல்லது சிறு பினவு.

**குடாப்போலி,** (sinusoid). அகத்தோ றபடைக் கலங்களும் கலன் அகவணி யும் ஊடுவளாவதஞல ஓா அஙக இழையத்தில் ஏற்பட்ட ஒரு நுணணிய குருதிவெளி. உ–ம்., ஈரலில் உள்ள, நாடி மயிர்க்குழாய்களையும் நாள மயிா க்குழாய்களையும் தொடுககினற, ஒழுங கற்ற உள்ளிடத்தை உடைய குருதி வெளி.

**குடிபெயர்தல்,** (migration). (1) பறவை கள், துருவமான், வௌவால்கள், சில வகை மீனகள, பூச்சிகள ஆகியன தமது வாழிடத்தைப் பருவம், கால நிலை, உணவு இருப்பு என்பவற்றிற் கேற்ப மாற்றிக் கொள்ளல். (2) ஓர் அகவொட்டுண்ணி அல்லது தின்குழி யககலம் உடலின் ஒரு பகுதியிலிருநது இன்னொரு பகுதிக்குச் செலலுதல்.

**குடும்பம்,** (family). தொடர்புடைய சாதிகளின் கூட்டத்தைக குறிப்பதற காக பாகுபாடடில் பயன்படுத்தப்பட் டுவரும் பதம. குடும்பங்கள் மேலும் வருணங்களாகத் தொகுக்கப்பட்டுள ளன.

**குடுவையுரு, (குழாயின்) விரிமுனை,** (ampulla). யாதாயினுமொரு சிறிய மென்சவவுப் புடகம். முள்ளந்தணடு விலங்குகளில், செவியின அரைவட்டக் கால்வாயின் ஒரு நுனியில உணர்சசி மேலணியைக கொணடுள்ள விரிவு. மமமாலியாவில, முலைச்சுரப்பியிலுள்ள விரிநத சிறுகுழாய் ஒனறின ஒரு பகுதி. மீனில், நரம்புததிடரஙகததின் முனைவுப்புடகம். எக்கிஞேடோமாற றுவில்—(1) குழாய்க்காலின உளவிரிவு; (2) தாய்க்கறறகட்டுக்குக் கீழே உளள அசசுக்குடாவின விரிவு.

**குடையம்,** (foramen). இது கைற றினுள்ள, கசியிழைததாலான அல் லது என்பிஞலான வன்கூட்டமைப் பில் சிறப்பாகக் காணபபடும் ஒரு திறபபு அலலது துவாரம.

**குதத்திற்குரிய,** (anal). குததனைதச சார்நத அல்லது அதறகு அண்மை யிலோ அஃதிலோ உள்ள. மீன்களின பினபுற, நடுக்கோட்டு வயிறறுபபுறச செட்டை, பூச்சிச சிறகின் ஓரமும் நரம்பும, நகருயிாகளின பின்புற வயிறறுப்பக்கப் பரிசை ஆகியவறறையும இன்னபிறவற்றையும் குறிக்கும்.

**குதம்,** (anus). சமிபடாத மீதிகள் வெளியேறுவதற்குச் சமிபாட்டுக கால்வா யில, பொதுவாகப் பினபுறமாக, அமைந் துள்ள திறவு.

**குதிக்காலெலும்பு,** (calcaneum). (1) இஃது சில முளளநதணடு விலங குகளில், வராவை ஆக்குகினற கணைக

கால வெளியென்பு: அதாவது பெரிய கணுக்காலென்பு. (2) பொதுவழக்கில் எராவையே இப்பதம் குறித்து நிற்கும். (3) பறவைகளில் அனுக்கணுககாலென் பின் ஒரு முனை.

**குமிழ்முனைப்பு,** (bulla). செவியென் புகளினாலான உருண்டை முனைப்பை, அதாவது செவிபபறைக் குமிழ் முனைப்பைக் குறிக்கப் பிரயோகிக்கப்படும் சொல்; இது நடு நெய்யரியென்புவளிக் கலங்களின் முனைபபைக் குறிக்கவும் பிரயோகப்படும்.

**குயிலலகு,** (coccyx). இது திரு வெனபிற்கு அப்பாலுள்ள முள்ளந் தண்டின பகுதி.

**குரல் நாண்கள்,** (vocal cords). குரல் வளையினுள் தள்ளிக்கொண்டிருக் கும் சீதமென்சவ்வு மடிப்புக்கள்.

**குரல்வளை,** (larynx). குரல்வளையானது கழுத்தின முற்பகக மேற்பகுதியிலும் தொணடையின் கீழ்ப்பகுதிக்கு முனனாலும் வாதனளிக்குச் சறறு மேலேயும உளது. ஒலிப்பு முறைக்காக இயைபாக்கமடைநத கசியிழைய வரிசை ஒன்றினை இது உடையதாய்க்காணப படும்.

**குருட்டிடம்,** (blind spot). முள்ளந் தண்டு விலங்குகளில், விழித்திரையில் பார்வைக்கலன்களற்ற (கண்நரம்பு வெளிச்செல்வதனால்) ஓர் பகுதியாகும். இதன்மேல் புறவிம்பங்களெதுவும் விழமாட்டா.

**குருட்டுக் குடல்,** (caecum). இது, குடலின் அல்லது பிற உட்குழிவான அங்கத்தின் மொட்டையாக முடிவடை கின்ற கிளை. அமினியன் முள்ளந் தண்டு விலங்குகளிலும் சில மீன் களிலும் சிறுகுடல, பெருங்குடல ஆகியவை சந்திக்குமிடத்தில் ஓர் அல்லது இரு குருட்டுக்குடல்கள் இருக்கும. இது சில முலையூட்டிகளில் (எ.கா., முயல்) மிகப் பெரிதாகவும் சமிபாட் டிற்கு முககியமானதாயும் உளது. இது மனிதனில் பதாங்கமடைந்துளது.

**குருட்டுமடி,** (typhlosole). சில முள்ளநதண்டு விலங்குகளின் குடலின் உள்ளிடத்தினுள் தள்ளிக்கொண்டிருக் கும், குடலின் நடுக்கோட்டமைந்த, முதுகுப்புற நீள்பக்கமடிப்பு.

**குருதி,** (blood). புறவணிச் சுவர்கள் கொண்ட கலன்களினுள் அல்லது இடைவெளிகளினுள் உள்ள, விலங் குகளின் ஒரு பாய்பொருள். இது கலனகளின அல்லது இவற்றின விசேடிப்படைந்த பாகங்களின் (இதயத் தின்) தசைச் செயலினால் சுற்றியோட்டப் படுகிறது. இது வழக்கமாகச் சுவாச நிறப்பொருளைக் கொண்டிருப்பதுடன் உடலுக்கூடாக, ஒட்சிசன், உணவுப் பொருட்கள், கழிவுகள் ஆகியவற்றைக் கொண்டு செல்லும். நெமெர்ற்ரியா, அன்னெலிடா, ஆர்த்திரோப்போடா, மொலலுஸ்கா, பிறக்கியோப்போடா, போரொனிடெயா, கோர்டாற்ரு ஆகிய வற்றில் உளது.

**குருதிக்கலன்,** (blood vessel). நன்கு வரையறுக்கப்பட்ட சுவர்களாற் சூழப் பட்ட, ஒரு மூடுண்ட வெளி. இதற் கூடாகக குருதி ஓடும்.

**குருதிக்குழியம்,** (thrombocyte). குருதிச் சிறு தட்டு; முலையூட்டிகளல் லாத முள்ளந்தண்டு விலங்குகளில், குருதி உறைதலோடு சம்பந்தப்பட்ட கருவுள்ள கதிர்வடிவக் கலங்கள்.

**குருதிக்குழிவு,** (haemocoel). குருதித் தொகுதியின் ஓர் விரிந்த பகுதி: உண்மையான உடற் குழிக்கு ஈடாய அமைந்துளது.

**குருதிச் சிறுதட்டுகள்** (blood platelets). முலையூட்டிகளின் குருதியிலே காணப் படுகினற நுண்ணிய உடல்கள். இவை ஒருவேளை கலங்களின் துண்டுகளாயிருக் கலாம். மனிதக் குருதியில், ஒரு கன மி. மீட்டரில் கிட்டத்தட்ட 250,000 குருதிச்சிறு தட்டுகள் இருக்கும். இவை திரளுக்கு மிகவும் இனறியமையா தவை.

**குருதிச் சிறுதுணிக்கை,** (**blood corpuscle**). குருதியில் வழக்கமாகத் தொங்கலாகக் காணப்படும் ஒரு கலம்.

**குருதிச் சுற்றோட்டம்,** (**circulation of blood**). இதயத் துடிப்பின் காரணமாக உடலினுள்ள கலன்களில் குருதி ஓடல். குருதிச் சுற்றோட்டத்தினால் போசணைப் பொருட்களும் ஒட்சிசனும் உடலிலுள்ள எல்லாப் பாகங்கட்கும் எடுத்துச் சென்று வழங்கப்படுகின்றன ; கழிவுப் பொருட்கள் கழிவகங்கட்கு எடுத்துச் செல்லப்படுகின்றன.

**குருதித்தட்டையன்,** (**blood fluke**). பில்ஹார்ஸியா இனத்தையோ இதற்கு உறவான இனத்தையோ சார்ந்த யாதுமோர் திறெமற்றோடாப்புழு.

**குருதித் திரவவிழையம்,** (**blood plasma**). சாதாரண நிலைகளில் குருதியிலுள்ள பாய்பொருட் பகுதி.

**குருதிநீர்ப்பாயம்,** (**blood serum**). பைபிரினையும் சிறு துணிக்கைகளையும் அகற்றிய பின் குருதியில் எஞ்சி நிற்கும் பாய்பொருட் பகுதி.

**குருதிப் படலம்,** (**blood film (smear)**]. வழுக்கியொன்றில் பூசப்பட்டு, காயவிடப்பட்டு, நிலைநிறுத்தப்பட்டு, சாயமூட்டப்பட்டுள்ளதாகிய மெல்லியகுருதிப பூச்சு. சிறுதுணிக்கைகளையும் குருதியொட்டுண்ணிகளையும் பரிசோதிக்க, இது பயன்படுத்தப்படுகின்றது.

**குருதி மயிர்த்துளைக்குழாய்,** (**blood capillary**). சிறிய நாடி ஒன்றிலிருந்து (முள்ளந்தண்டு விலங்குகளில் புன்னாடி) பெற்ற குருதியைக் கொண்டு சென்று ஒரு சிறு நாளத்திற்குள் விடுகின்ற நுண்ணிய குழாய (இதன் உள் விட்டம் கிட்டத்தட்ட 5–20 மைக்கிரன்களாகும்) ; இது சில நுண்ணிய தொடுப்பிழைய நார்களினால் தாங்கப்பட்டுள்ள தட்டையான கலங்களால் (அகவணி) ஆன ஒரு தனிப் படையை உடைய சுவரினைக் கொண்டிருக்கும். மயிர்த்துளைக் குழாய்கள் ஏறக்குறைய எல்லா இழையங்களுள்ளும் பெரும் எண்ணிக்கையில் உட்புகுகின்றன. சிறு மூலக்கூறுகளை (ஒட்சிசன், குளுக்கோசு, அமைனோவமிலங்கள் போன்ற, குருதியிலிருந்து இழையங்கட்குச் செல்லும மூலக்கூறுகளையும காபனீரொட்சைட்டுப் போன்ற, இழையங்களிலிருந்து குருதிக்குச் செல்லும் மூலக்கூறுகளையும்) உட்புகவிடககூடிய மயிர்த்துளைச் சிறு குழாய்களின் சுவர்களினூடாக குருதிக்கும் இழையங்கட்கும் இடையே முக்கியமான பதார்த்தப் பரிமாறல் நிகழும். சுவர்களும் நீர, உப்புக்கள் ஆகியவற்றைக் கட்டற்று உட்புகுவிக்கும் இயல்பின. குருதியிலுள்ள திரவப்பகுதி, மயிர்த்துளைச் சிறு குழாய்களிலிருந்து வெளியே கசியாததற்குக காரணம் என்னவெனில், பெரும் மூலக்கூறுகள் சிறப்பாக முதலுருப புரதங்கள் மயிர்த்துளைச் சிறு குழாய்களின் சுவர்களினால் வைததிருககப்பட்டு நீரைப் பிரசாரணத்தினால் பின் தங்கவைத்தலினால் என்க. ஆர்த்திரோப்போடாப் பிராணிகளினதும் மொல்லுஸ்காப் பிராணிகளினதும் மயிர்த்துளைச் சிறு குழாய்கள், உடறெருழில் முறையில் குருதிக் குழியினால் பெரிதும் ஈடுசெய்யப்பட்டிருக்கும்.

**குருதியமுக்கம்,** (**blood pressure**). முககிய நாடிகளில் உள்ள குருதியின அமுக்கத்தை வழக்கமாக இது குறித்து நிறகும். இது "சாதாரண" மனிதர்களில் இதயத் துடிப்பைப் பொறுத்தது (இதயச் சுருக்கத்தின போது ஆகக் கூடியதாயும் இதய விரிவின்போது ஆகக் குறைந்ததாயும் இருக்கும்). 120 மி.மீ. பாதரசத்திற்கும் 80 மி.மீ. பாதரசத்திற்கும் இடையே கூடிக் குறைந்து காணப்படும். முழுச் சுறறோட்டம் நெடுகிலும் உள்ள அமுக்கங்கள் இதயத்தை அடுத்துள்ள நாடிகளிலிருந்து இதயத்தை அடுத்துள்ள நாளங்களைச் சுற்றிக் குறைந்து செல்லும். முலையூட்டிகளிலே பெரு நாளங்களில் இது வளியமுக்கம் வரையும் அல்லது அதற்குக் குறைவாகவும் செல்லக்கூடியது.

**குருதியருவி,** (**blood stream**). சுறறோட்டத் தொகுதியிலுள்ள குருதியின் அருவி.

**குருதியினங்கள்,** (blood groups). வெவ்வேறு வகையான குருதிகள். செஞ்சிறு துணிக்கைகளில் A, B ஆகிய இரு அகுளுத்திஞேசன்களும் நீர்ப்பாயத்தில் அதாவது திரவவிழையத்தில், α அதாவது A யின் எதிரி, β அதாவது B யின் எதிரி ஆகிய இரு அகுளுத்தின்களும் இருப்பதை அல்லது இல்லாததைப் பொறுத்து, இக்குருதி வகைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. A கலங்கள் B வகை நீர்ப்பாயத்துடன் ஒருங்கொட்டும் ; B, A வகையுடன் ஒருங்கொட்டும் ; AB, A வகையுடனும் B வகையுடனும் ஒருங்கொட்டும் ; A உடனும் B உடனும் 0 ஒருங்கொட்டாது.

**குருதியுறையாநோய்,** (haemophilia). குருதியுறைதல் தாமதமாகின்ற காரணத்தால் காயமடைந்த பின்னரும் இரத்தப் பெருக்கு நிலைத்திருக்கின்ற ஒரு வகைப் பரம்பரை வியாதி.

**குருதிவில்,** (haemal arch). விலாவென்புகளால் ஆனதைப் போன்று முள்ளந்தண்டிலிருந்து வயிற்றுப் புறமாக நீண்டு செல்லும் என்பாலான அல்லது கசியிழையத்தாலான ஒருவில். சிறப்பாகப் பல மீன்கள், நகருயிர்கள் முதலியவற்றின் வால் முள்ளந்தண்டென்புகளால் தாங்கப்பட்டுள்ள, வயிற்றுப் புறமாக நீண்டுள்ள என்புகள் வரிசை. Y அல்லது V வடிவமுடையவையாதலால் அப்பெயர் பெற்றன. பிணைச்சலென்புகள்.

**குருதிவெல்லம்,** (blood sugar). குருதியில் சுற்றியோடும் குளுக்கோசு. முள்ளந்தண்டு விலங்குகளில், குருதி வெல்லம் ஈரலிலிருந்து (ஈரலில் அது கிளைக்கோசனுகச் சேமித்து வைக்கப்படும) குருதிக்கு வழங்கப்பட்டுப் பின் அங்கிருந்து உணவாக எல்லா உடற்கலங்களிலும் எடுக்கப்படுகின்றது. முலையூட்டிகளில், அஃது ஓரளவு மாறிலி நிலையில் இருக்கும் (100 க. ச. மீ. மனிதக்குருதிக்கு 80–180 மி. கி. என்றவாறு). இந்நிலை முக்கியமாக ஓமோன்களினால் (இன்சுலின், அதிரீனலின், முன்கபச் சுரப்பியிலிருந்து வரும் ஓமோன் என்பன) கட்டுப்படுத்தப்படுகின்றது. குருதிவெல்லமட்டம் குறைவுபடின் (குறை வெல்ல முண்மை) கலங்கள் பட்டினியுறும். இதன் காரணமாக மூளைக்கலங்கள் பழுதடையும். குருதி வெல்ல மட்டம் அதிகவுயர்வாகவிருந்தால் (வெல்லநீரழிவிலுள்ளதைப்போல அதிபர வெல்ல முண்மை) குளுக்கோசு சிறுநீரகத்தால் கழிக்கப்படும்.

**குவீரியர்க் கான்,** (Cuvierian duct). கீழ்வகை முள்ளந்தண்டு விலங்குகளில் பக்கங்களிலிருந்து இதயத்துக்குச் செல்லுகின்ற ஒரு சோடிப் பெரிய நாள மூலங்கள்.

**குழாய்க் கால்கள்,** (tube feet). எக்கிஞேடேர்மாறருவில் திரவக் கலன்ருெகுதியோடு சம்பந்தப்பட்ட, குழிவுள்ள, நீளத்தக்க தூக்கங்கள். சில கூட்டங்களில் (நடசத்திரமீன், கடன்முள்ளி முதலியவற்றில்) அவை உறிஞ்சிகளில் முடிவடைந்து இடப்பெயர்ச்சிக்கு உதவுவனவாய்க் காணப்படுகின்றன. பிறவற்றில் (ஒடியதத்தக்க நட்சத்திரமீன்கள், கிறிஞெயிட்டுக்கள் முதலியவற்றில) உறிஞ்சிகள் இல்லை. வாயைச் சூழ உள்ளவை ஊட்டலுக்கு (கடலட்டைகள், ஒடியத்தக்க நட்சத்திரமீனகள முதலியவறறில்) பயனுடையன. கிறிஞெயிட்டுக்களில் இவை பிசிருடையவையாயும், உணவு சேகரிப்புச் செய்யும் பொறிமுறையின பகுதியாயும உள்ளன.

**குழாய்க்காற்ருெகுதி,** (ambulacral system). எக்கிஞேடேர்ம்களின் திரவக கலன் ருெகுதி.

**குழிக்குடல்,** (coelenteron). சீலென்ரெறற்றின் உடலினுள்ளே காணப்படுகின்ற தனிக்குழி. இது குடலாகப் பயன்படுகின்றது. சில விலங்குக் கூடடங்களில், இதனுள் முட்டைகளும விந்தும் வெளித்தளளப்படும். இது ஒரு தனிவாயிலை உடையது.

**குழிக்குடலுக்குரிய,** (coeliac). இப்பதம் வயிற்றுக்குழியைக் குறித்து நிற்கும். இது நாடிகள், நாளங்கள், நரம்புகள், பின்னல் ஆகியவற்றைக் குறிக்கப் பிரயோகிக்கப்படும்.

**குழியப் பகுப்பு, (cytolysis).** கலங்களின் சிதைவு. குறிப்பாக கலங்களின பரப்பிலுள்ள மென்சவ்வுகள் சிதைவு படுதலில் உண்டாகும் கலச்சிதைவு.

**குழிய முதலுரு, (cytoplasm).** கலவுடலில் கருத்தவிர்நத மறறைய பதார்த தங்கள் குழியமுதலுரு வெனப்படும்.

**குழியவியல், (cytology).** கலங்களின அமைப்பு, தொழில்கள், வாழ்க்கை வரலாறு ஆகியவற்றை ஆராயும் விஞ்ஞானம்.

**குழியில்லாத, (acoelous).** உணமையான உடறகுழியில்லாத ; தட்டையான மையத்தியையுடைய முள்ளந்தண்டென புகள்.

**குழியுடலி, (coelomate).** உடற்குழியுடையது.

**குழிவு, (fossa).** இடங்கு போன்ற ஒரு பள்ளம். உதாரணம், கன்னக்குழி.

**குளம்புச்சாரி, (unguligrade).** குளம புகளில் நடக்கின்றவிலங்கு.

**குறள்நிலைமை, (cretinism).** கேடயப் போலிச் சுரப்பியின் சுரப்பு இல்லாத காரணத்தினாலோ போதாக குறையினாலோ உளம், உடல ஆதியன பிறப்பிலேயே விருத்தியடையாது இருக்கும் ஒரு நிலை.

**குறி, (stigma).** (1) சில புரோற்றெசோவாக்களிற் காணப்படும கட்புள்ளிகள் ; (2) ஆர்த்திரோப்பொட்டின் சுவாசத்துவாரம் ; (3) பூசசிகளின் வாத நாளிகைகளுடன தொடுகையுற்றுள்ள துவாரங்கள் ; (4) சில வண்ணாத்திப பூச்சிகளினதும் பிற பூச்சிகளினதும் நிறமான செட்டைப் புள்ளி ; (5) தூனிக காற்றுக்களின பூப்பிளவு ; (6) மயிர்க குழாய்களின் சுவர்களில் செயற்கைத தோற்றங்களாய் அமைந்த புள்ளிகள அல்லது வாய்கள்.

**குறுவிரலுள்ளமை, (brachydactyly).** இது குறுகியவிரலை உடைய நிலை. அதாவது, விரல்கள் அசாதாரணமாகக் கடடையாக இருத்தல்.

**கூட்டுக்கண், (compound eye).** பல ஆர்த்திரோப்போடாப் பிராணிகளில் சிறப பாகப் பூச்சிகள், குறுஸ்ராசெயன்கள் ஆகியவற்றில் காணப்படுகின்ற ஒருவகைக் கண். இது, பெரும் எண்ணிக்கையில் (சிலவற்றில் ஆயிரக்கணக்கில்) ஒன்றோடொன்று மிக நெருக்கமாக அமைந்த கருமையான நிறப்பசைக கலங்களினால் ஒளியைப் பொறுத்தமட்டில் பிரிககப் பட்டுள்ள கண்மூலகம் எனப்படும் நுண்ணிய தனிக்கண்களைக் கொண்டிருக்கும். ஒவ்வொரு கண்மூலகமும் ஒடுங்கியதாயும் ஆழமானதாயும் உணர்ச்சியுள்ள உட்பக்கம் ஒன்றையும், அதாவது புன விழித்திரை ஒன்றையும், ஒரு வெளிமுறி பகுதியையும் உடையதாகவும் காணப் படும். இவை குவிந்த அடிமென் சவ்வொன்றில் அடுககப்பட்டு வெளியிலகைற்றினாலான விழிவெண்படலத் தால் மூடப்பட்டிருக்கும்.

**கூட்டுப்புழு, (pupa).** பூச்சியொன்றின் வாழ்க்கை வரலாற்றிலே காணப்படும ஓர் உயிர்ப்பற்ற பருவம். இப்பருவத்தின் பொழுது அது உண்ணாதிருக்கும் ; குடம்பியுடல் விம்பவுடலாக மாற்றமடையும் பொருட்டு மீட்டமைப்பு நடந்தேறும்.

**கூடம், (atrium).** பிளாற்றிஹெல்மின் தெலில், ஆண் உற்பத்தியங்கங்களிலிருந்தும் பெண் உற்பத்தியங்கங்களிலிருந்தும் வருகின்ற கான்கள் திறக் கின்ற ஒரு வெளி. நீர்வாழ் ஒலிகோகீற்றாவில், முன்னிறகுஞ் சுரப்பியின் கலங்களினால படலிடப்பட்டுள்ள வெளி ; இதனுள் ஆண்கான்கள் வெளித்தள்ளும். சுவாசப்பையுள்ள மொல்லுஸ காக்களில், யோனிமடலும் ஆண்குறியும் திறக்கின்ற ஒரு குழி ; இக்குழி வெளியே திறக்கும். எக்ரொப்புரெக்ருப் பொலிசோவாவில, பரிசக்கொம்புக் கவசத்தின் குழி. சிபொனலூரெஸ், குடம்பிகளில், மெனமூடியால் சூழப் பட்டுள்ள வெளி. விருத்தியடைந்துவருகின்ற என்ரொப்புரெக்ருப் பொலிசோவாவில், மைய உணமுகமடிதல். இதன சுவர்களிலிருந்து பின்னர் நரம்புத தொகுதி உண்டாகும். சில மொல்லுஸ் காக் குடம்பிகளில், வெளிவாய்வழி. உருமாறும் ஒறிக்கியூலேறியாவில், குடம்

பியின் வாய் திறக்கின்ற குழி. புரோ கோர்டாற்றுவில் தொண்டையின் சுவா சப் பகுதியைச் சுற்றியுள்ள குழி. வேர்ற்றிபிருற்றுவில், நாசிச் சுவட்டின் முன்பகுதி. றெப்ரீலியாவிலும் ஆவேவலி லும் நுரையீரலறைகளைச் சுவாசப்பைக் குழாயோடு தொடுக்கின்ற குழி. விருத்தி யடைந்து வருகின்ற முள்ளந்தண்டு விலங்குகளின் இதயத்தில், நாளக் குடாவிற்கும் இதயவறைகரும் இடையே உள்ள பிரிவு ; இதிலிருந்து பின்னர் சோணைகள் உற்பத்தியாகும்.

**கூப்பரின் சுரப்பிகள், (Cowper's glands).** முலையூட்டிகளில் சிறுநீர்ச்சனணிக் கால வாய்க்கு இருமருங்கிலும் உள்ள சோடி யான சுரப்பித திணிவுகள்.

**கூம்பு நாடி, (conus arteriosus).** சில கீழ்வகை முள்ளந்தண்டு விலங்கு களில், இதயத்துக்கு அருகாமையில் உள்ள மூல நாடியின் வால்வுள்ள ஒரு பிரதேசம்.

**கூம்புருப் பொருள், (pineal body).** மூளை யமேலென்புமூளை. முதலாம் மூளையப் புடகத்திலிருந்து கிளம்பும் ஒரு நடுக் கோட்டு வெளிவளர்ச்சி; இது முதலில் குழாய் வடிவிலிருக்கும் பின்னர் கிளை விடும் ; அகஞ்சுரக்குந் தொழிலுடைய தென நம்பப்படுகிறது ; சுவரங்கத்து டன செய்மையிற் தொடர்புள்ளது. நடுக் கோட்டமைந்த கண்ணுடன் அமைப்பொ புமையுடையது.

**கூர், (cusp).** கூரான முனையை உடைய ஒரு முனைப்பு. எ.கா., பலலின முனைப்பு.

**கூர்ப்பு, (evolution).** எளிய வகை அங் கிகளிலிருந்து படிப்படியாக விருத்திய டைந்து அதிக சிக்கலான அங்கிகள் தோன்றல். பிற அங்கங்களிலிருந்தோ அதேவகையான மிக எளிய அஙகங்களி லிருந்தோ அஙகங்கள் விருத்தியடைதல்.

**கூழ்நிலைப் பொருள், (colloid).** ஒரு விலங்கின் அல்லது தாவரத்தின் மென் சவ்வினூடாக உடனே பரவாத ஊன் பசையுள்ள பதார்த்தம். இது பளிங் குருப் பொருளுக்கு எதிர்மாறுனது. ஒன்றினுள் மற்றையது கலந்துளள தாகிய இரண்டு, ஓரினப்பகுதிகளையோ அவத்தைகளையோ கொண்டுள்ள ஒரு பதார்த்தம்.

**கெண்டிக்கலம், (goblet cell).** சில மேலணிகளிற் காணப்படும் பேரிக்காய் வடிவக்கலம். காலத்துக்குக் காலம், மேற்பரப்பில் சுரக்கப்படும் மியூசினுல் மேலணிப் பரப்பிற்கு அண்மையிலுள்ள பகுதி வீங்கிக் காணப்படும்.

**கெரற்றின், (keratin).** கரையாத வன் புரதம். முள்ளந்தண்டு விலங்குக் கவசத திலுள்ள சிறு மணிப்படையில் உள்ள மேற்பரப்புக் கலங்களிற் காணப்படுகின்ற எலிடின் சிறு மணிகள் (eleidin granules) மாற்றமடைவதால் இது உண் டாகும். குழம்புகள், நகங்கள், மயிர் ஆகியவற்றின கொம்புப் பகுதி இதா லானதே. இது கந்தகத்தை உயர் சத வீதத்திற் கொண்டிருக்கும். இதன் ஒரு பகுதி நீர்ப்பகுப்பினுல் உடன பிளவுற்று $H_2S$ ஆகமாற்றமடைகின்றது.

**கேடயப்போலிக் கசியிழையம், (thyroid cartilage).** குரல்வளைக் கசியிழை யங்களுள் ஒன்று.

**கேடயப் போலி, (thyroid).** (1) கேடய வடிவமான ; (2) கழுத்துக்கு முன்னு லும் பக்கங்களிலுமுள்ள கானற்ற, அதி கக் கலனுடைய சுரப்பி ; (3) நாடிகள், கசியிழையங்கள், நாளங்கள் ஆகியவற் றிற்குப் பொருந்தும்.

**கேடயம், (scutum).** பூச்சிகளில் உள்ள முதுகுப்பகுதியானது மாதிரியாக மூன்று வன்கோதுகளாகப் பிரிந்துள்ள நிலை யில், நடுவே காணப்படும் வன்கோது.

**கைமேரு, (chimaera).** (1) வெவ்வேறு தனியன்களிலிருந்து தோன்றிய இரண்டு விருத்தியிலிகள் இணைவதனுல் விருத்தி யடைந்த அல்லது இரு வெவ்வேறு பிறப்புரிமையமைப்புகளைக் கொண்ட இழையங்களையுடைய ஒரு தனியங்கி. (2) ஒரு மீனின் சாதிப்பெயர்—கிமேரு.

**கைற்றின், (chitin).** பெரும்பான்மையான முள்ளந்தண்டில்லா விலங்குக்கூட்டங்களில், சிறப்பாக ஆர்த்திரோப்போடாவில், வன்கூட்டுப் பதார்த்தமாக அமைந்துள்ள ஒரு நைதரசன் காபோவைதரேற்றுப் பெறுதி. அதன் அனுபவச் சூத்திரம் $C_{15}H_{26}O_{10}N_2$. செறிந்த ஐதரோக்குளோரிக்கு அமிலத்துடன் அதைக் கொதிக்கவைக்க, அது குளுக்கோசமைனும் அசெற்றிக்கமிலமுமாகப் பிரியும்.

**கொங்கியோலின், (conchiolin).** இது மொல்லுஸ்குகளினது ஓடுகளின் அடிப்படைப் பதார்த்தமாய் அமைந்துள்ள சேதனப் பதார்த்தம்.

**கொடுக்கடி, (cheliped).** ஓர் உகிர் உடைய தூக்கம். தசக்காலிக் குறுஸ்ராசெயன்களின் சாவணம்.

**கொடுக்கு, (chela).** (1) குறுஸ்ராசெயாவினதும் அறக்னெயிடெயாவினதும் அவயவங்கள் சிலவற்றில் காணப்படுகின்ற உகிர். (2) ஒரு முனையிலோ இரு முனைகளிலுமோ இரை காவும் பறவைகளின் நகம் போன்ற எறியங்களையுடைய ஒரு சிறிய கடற்பஞ்சு சிற்றூசி.

**கொடுக்குக் கொம்புகள், (chelicerae).** அறக்னெயிடெயாவினது முனபக்கக் கொடுக்குடைய அல்லது உபகொடுக்குடைய தூக்கங்கள்.

**கொப்பூழ் நாண், (umbilical cord).** முளையத்தைச் சூல்வித்தகத்துடன் இணைக்கின்ற கொப்பூழ் நாண்.

**கொம்பாதல், (cornification).** மேற்றோலின் வெளிக்கொம்புப்படை ஆக்கம்.

**கொழுக்கிபோன்ற, (unciform).** கொழுக்கி முள் வடிவம் போன்ற : நெய்யரியென்பின் முனையைக் குறிக்கும்.

**கொழுப்பமிலம், (fatty acid).** $C_nH_{2n}O_2$ என்னும் பொதுச் சூத்திரமுடைய மிகைநிரம்பிய அமில வரிசையில உள்ள ஏதுமோர் அமிலமே இது. உ-ம். போமிக் கமிலம், அசெற்றிக்கமிலம் முதலியன. அப்பெயர் வழங்கப்படுவதற்குக் காரணம் ஸ்தெயறிக்கமிலம், பாமிற்றிக் கமிலம் முதலிய சில உறுப்பினர் (அவற்றின் கிளிசெறைல் எஸ்தர்களாக) இயற்கைக் கொழுப்புக்களில் காணப்படுவனவாய் இருத்தலும், அவை கொழுப்புப்போன்ற பதார்த்தங்களாகையாலுமேயாம்.

**கொழுப்பிழையம், (adipose tissue).** கொழுப்பினால் நிரம்பலுற்றுச் சிறுசோணைகளாக ஒன்று திரண்டு காணப்படுகின்ற, புடக்கலங்களையுடைய தொடுப்பிழையத்தினொருவகை.

**கொழுப்பு, (fat).** கொழுப்பிழையம் : பசபசப்பான அல்லது எண்ணெய்ப்பசையுடைய ஒதுக்கத் திரவியத்தைக் கலங்களிலே கொண்டுள்ள, விலங்கிழையத்தின் ஏதுமொரு பகுதி.

**கொம்புப் பொருட்படை, (stratum corneum).** மேற்றோலில் உள்ள, கொம்புப் பொருளாலாய புறப்படை.

**கொழுப்புப் பொருள், (fat body).** (1) கொழுப்புச் சிறு கோளங்களினால் நிரம்பலுற்று அமபீபியாவின் சனனிகளுடன் சேர்ந்து காணப்படுவதாய, கலன்களால் ஆக்கப்பட்ட இழையவமைப்புகளுள் ஒன்று. (2) லசொற்றீலியாவில் வயிற்றுப் புறப் பக்கஙகள் நெடுகிலும் காணப்படுவதும் விருத்திக் காலங்களில் பெருத்துக் காணப்படுவதுமாகிய, தோற்கீழங்கங்களுள ஒன்று. (3) பூச்சிகளின் உடல் முழுமையும் பரப்பப்பட்டு, போசணை ஒதுக்கமாகத் தொழில் புரிகின்ற இடைநிலைப்பட்ட வகையான இழையமே இது.

**கொறியுயிர், (rodent).** ரோடென்ரியா வருணத்தைச் சேர்ந்த உறுப்பினருள் யாதுமொன்று. உ-ம., எலி, அணில் முதலியன.

**கோடை நெடுந்தூக்கநிலை, (aestivation).** சில பூச்சிகளிற காணப்படுவது போன்று நீடித்த, கோடைகால உணர்ச்சியற்ற நிலை ; வெப்பமான, வறட்சியான காலங்களில் உறங்குதல். குளிர்காலத் தூக்கத்திற்கு எதிர்ப்பதம்.

**கோண என்புக்கு மேலான என்பு, (supra angular).** மீன்கள், நகருயிர்கள், பறவைகள் எனபவற்றின கீழ்த்தாடையிலுள்ள ஓர் என்பு.

**கோப்பு,** (chiasma). (1) *கருப்பிரிவின் போது சோடி நிறமூர்த்தங் களிடையே நிகழும் பொருட் பரிமாற் றம்* ; (2) *மைய நரம்புத் தொகுதியில், நார்கள் வலமிருந்து இடமும், இடமிரு நது வலமும் குறுக்காய் அமைவதனுல் உண்டான ஓர் அமைப்பு.*

**கோரியோன்,** (chorion). *போலியமி னியன் பார்க்க.*

**கோல்களும் கூம்புகளும் (கண்ணிலுள் ளவை),** [rods and cones (of eye)]. *விழித்திரையிற் காணப்படுகின்ற ஒளியு ணர்வுள்ள கலங்கள் ; இக்கலங்களின் உணர்திறனுடைய அமைப்புக்கள்.*

**கோலுருக்கிருமி,** (bacillus). *இது ஒரு தண்டு போன்ற பற்றீரியம் ; ஒரு தனிக்கலமுடைய பங்கசு.*

**கௌவும் நரம்புநார்,** (fasciculus). *ஒரு கூட்டமான அல்லது கற்றையான அல்லது கட்டாயுள்ள நரம்பு நார்கள். முண்ணாண் மைய விழையம்.*

**கௌவும் பல்,** (fang). *ஒரு நீண்ட கூரான பல், சிறப்பாகப் பாம்புகளின் நச்சுப்பல்.*

## ச

**சடப்பிறப்பு, (abiogenesis).** உயிரில்லாச சடப்பொருளிலிருந்து உயிருள்ளவற்றைத் தோற்றுவித்தல். தன்னிச்சைச் சந்ததி உயிர்ப் பிறப்புக்கு எதிர்மாறுயமைந்தது.

**சடைமுளை, (villus).** (1) போசணையிழை, அல்லது சிறு குடலின் படலில காணப்படும் நுண்ணிய கலன் முளைகளுள் ஒன்று. (2) கோரியோனில் உள்ள முளைகளுள் ஒன்று; இதனூடாக முளையத்துக்குப போசாக்குச் செல்லும். (3) அறக்னெயிட்டின பக்கியோனியன் உடல். (4) மூட்டுக் குழிக்குள் உள்ள உண்முகமடிதல், மூட்டு மெனசவ்வு.

**சதபத்திரவுரு, (rosette).** (1) சருமப் போர்வையில் உள்ள மயிராலான சுழி. (2) குருதிக் கலங்களாலான ஒரு சிறு கூட்டம். (3) சில நீர்வாழ் பூச்சிகளின் வெளிப்புறத் தோலினுள்ள சுவாசத் துவாரக் கால்வாய்க் கூட்டம். (4) கிறினெயிட்டுக் குடம்பிகளில் உண்டான ஒரு மெல்லிய தட்டு. (5) மண் புழுவின் விநது தாங்கியின முற்பக்கத்துக்கு இட்டுச் செல்லுகின்ற பிசிருடைய ஒரு பெரிய புனல்.

**சதைக் கம்பம், (columnae carneae).** இதயத்தின் இதயவறைகளின உட்சுவர்களோடு தொடுக்கப்பட்டுள்ள தடித்த தசையிழையப் பட்டிகைகள். இவற்றுட் சில வரம்பு உடையனவாயும், சில, நுனிகள் தவிர்ந்த ஏனைய இடங்களில் கட்டற்றும், மற்றவை சிம்பியுள்ள தசைகளாகவும் காணப்படுகின்றன.

**சதைமுதலுரு, (sarcoplasm).** தசை நார்களினது சிறு நாரிடை முதலுரு.

**சதையி, (pancreas).** தாடைவாயுளி முள்ளந்தண்டு விலஙகுகளின முன் சிறு குடலுக்கு அண்மையிலமைநத நடு மடிப்பில் உள்ள சுரப்பி. இது முன் சிறுகுடலினுள் சதையிககான் வழியே சமிபாட்டு நொதியங்கள் (திரிப்சினோசன், இலேப்பேசு, அமைலேசு மால்த்தேசு முதலியன) அடங்கிய ஓா காரக்கலவையை வெளியேற்றும். இச் சுரத்தலானது ஓமோன் சுரப்பினால், தூண்டப்படுகிறது. சதையியில் முற்றிலும் வேறுபட்ட தொழிலுடைய கலக் கூட்டமும் (இலங்ககான்சு சிறு தீவுகள்) உளது. இது குருதியினுள் இன்சுலின எனப்படும் ஓமோனைச் சுரக்கும். சிக்குளோஸ்ரோம்களில் சதையியின் கூறுகள் காணப்படுவது உண்மையெனினும் அவையிணைந்து ஒரு திட்டமான அங்கமாகக் காணப்படவில்லை.

**சதையிச் சாறு, (pancreatic juice).** இது சதையியின் தெளிவான காரச்சுரப்பு. முன்சிறு குடலினுள் இது ஊற்றப்பட்டு (பித்தத்துடனும் குடற்சாறுடனும் கலந்து), இரைப்பையினுள் ஏற்கனவே உதரச் சாறறினால தாக்க முற்ற உணவைத் தாக்கும். இது ஆகக்குறைந்தது மூன்று வெவ்வேறு நொதியஙகளையோ (திரிப்சின், அமிலொப்சின், இலேப்பேசு) இவற்றின் முனனோடிகளையோ உடையதாய்க் காணப்படும். இவற்றின் உதவியினால் இது முவ்வகையான உணவுப் பாதார்த்தங்களையும் தாக்கும்.

**சந்ததி, (generation).** தோன்றலை ஆக்கம்; ஒரு பொது மூதாதையிலிருந்து நேர்வரிசையில ஒரேயளவு எணணிகையான வருக்கங்களுக்கூடாகத் தோன்றிய தனியன்கள்.

**சந்ததிப்பரிவிருத்தி, (alternation of generations).** ஓர் இனத்தின் மாதிரி வாழ்வுவட்டத்தில, வெவ்வேறுவகையில உண்டான இரண்டு உருவுங்களோ பல உருவங்களோ காணப்படுதல - பொதுவாக, இலிங்க முறையால் உண்டான உருவத்தோடு பரிவிருத்தியடைதல். ஹீட்ரெரசோவனின் இனமாகிய ஒபெலியாவில் காணப்படுவதுபோல.

**சப்பணத்தசை, (sartorius).** நாற்பாதமுளி விலங்குகளின் ஒரு தொடைத் தசை; இது தனது சுருங்குதலினால் காலை உட்பக்கமாக வளைக்கும்.

**சம்மட்டியுருவென்பு,** (malleus). முலை யூட்டிகளின் காதுச் சிற்றென்புகளுள் ஒன்று. ரெற்றிபொாவில், தாடையுரு விலுள்ள மெல்லுதலுக்குரிய சிற்றென் புகளுள் ஒன்று; பொதுப்படையாகக கூறின் சம்மட்டிவடிவுடைய எதாயினு மோர் அமைப்பு.

**சமநிலைப்படுத்திகள்,** (halteres). டிப் ரெருவில, விருத்தியில்லாப் பின்பக்கச் சிறகுகளை உணாத்துகின்ற ஒரு சோடிச் சிறிய தலையுள்ள உடல்கள்.

**சமிக்குமிரைப்பை (4 ஆம் இரைப்பை),** (abomasum). அசைபோடும் விலங் குகளின நான்காவது இரைப்பை; உ-ம், பசு. இதில் சமிபாட்டின் முக்கிய பகுதி பூர்த்தியாகும்.

**சமிபாடு,** (digestion). ஓர் அங்கியி ளுல் உட்கொள்ளப்பட்ட உணவு, நொதி களிளுல் கரையக் கூடியதாயும், தன்மய மாக்கப்படக் கூடியதாயும் ஆக்கப்படும் முறை.

**சமுதாயம்,** (colony). ஒன்ருக வாழ் நது, ஓரளவு ஒன்றிலொன்று தங்கியி ருககும தனியன்களின் கூட்டம். எடுத் துக்காட்டாக, பொலிப்புகளின் சமுதா யம், சமூகப்பூச்சிகளின் சமுதாயம். உண் மையில ஒரு சமுதாயததின் உறுப்பினர் கள் ஒன்ருெடொன்று சேதனத்தொடர்பு பூண்டு காணப்படுதல் வேண்டும்.

**சமுதாய விலங்கு,** (colonial animal). முற்ருகப் பிரிநதிராத தனியன களால ஆக்கப்பட்ட சமுதாயத்தில உள்ள ஒரு விலங்கு சமுதாய விலங்கு எனப் படும். உதாரணம்-பலவகை ஹீட்ரெரு சோவாக்கள், பொலிசோவாக்கள் முத லியன.

**சரிவகப்போலி,** (trapezoid). சரிவக வடிவான ; இணையம், கரு, மேடு, முத லியவற்றைக் குறிக்கும். சிறு பல் கோண வென்பு.

**சரிவகவென்பு,** (trapezium). (1) முதலாம் அனுமணிககட்டென்பின் அடி யில் காணப்படும் முதலாவது மணிக்கட் டென்பு. (2) பெரும் பல்கோண வென்பு. (3) வரேலியின் பாலத்தின் ஒரு பகுதி.

**சருமம்.** 1. (meninges). மூளையையும மூள்ளந்தண்டு நாணையும் சுற்றிக்காண ப்படும் மூன்று மென்சவ்வுகள். இவை வெளியிலிருந்து உள்நொக்கி வன்ருயி, சிலந்திவலையுரு மென்றகடு, மென்ருயி என்ற வரிசையில் அமைந்துள.

2. (pellicle), ஒரு மெல்லிய புறத் தோலால ஆனபோர்வை. உதா., சில புரோற்ருெசோவாவில் உள்ள போர் வை.

**சவுக்குமுளை,** (flagellum). (1) ஒரு கலததின் அல்லது புரோற்ருெசோவ வின் முதலுருவின் நூல்போன்ற நீட்சி. மோதியடித்தலிளுல் ஏற்படும் அசைவு களை உண்டாக்கவல்லது. (2) சில வகை அறக்னிடாவில் கொடுக்குக் கொம் பின் சேய்மைத் துண்டத்தில் உள்ள சிறப்படைந்த சிலிர் முள் கூட்டம்: தொடுகை உணர்வுடையதென நம்பப் படுகின்றது.

**சனனி,** (gonad). ஓர் இலிங்கச்சுரப்பி: சூலகமாகவோ விதைகளாகவோ சூலக விதையாகவோ இருக்கலாம்.

**சனனிக் கான்,** (gonoduct). சனனியி லிருந்து புறத்தே இட்டுச்செல்லும் ஓர் உற்பத்திக் கான.

**சாதாரணத்தசை,** (plain muscle). மழ மழப்பான தசைபார்க்க.

**சாதி,** (genus). நெருங்கிய தொடா புடைய வகைகளின் ஓர் பாகுபாட்டியற் பிரிவு. இது மேலும் இனங்களாகப் பேதப்பிரிவாக்கப்பட்டுளது.

**சாதி,** (caste). சமூகவாழ்க்கைப் பூச்சிகளில, சாகியத்தை ஆக்குகின்ற பலவுருத்தனியன் வகைகளுள் ஒன்று. உதாரணமாக, தேனீக் கூடத்தில் இராணி (கருக்கட்டக் கூடிய பெண்), தொழிலாளிகள் (பெண்கள், வழக்கமாக மலடுகள்), சோம்பிகள்

(ஆண்கள்) எனும் மூன்று சாதிகள் உள. எறும்புகளில், பல வெவ்வேறு வகைப்பட்ட தொழிலாளிகள் (யாவும் மலட்டுப் பெண்கள்) உள. கறையான் களில், சாதிகளிடையே உள்ள வித்தியாசம் பால சம்பந்தப்பட்டதல்ல. (தேனீக்களிலும் எறும்புகளிலும் சாதிகளிடையே உள்ள வித்தியாசம் பால் சம்பந்தப்பட்டது). உதாரணமாக, படைவீரர்கள் மலட்டு ஆண்களாகவோ மலட்டுப் பெண்களாகவோ இருக்கலாம.

**சால் (மூளையின்)**, [sulcus (of brain)]. முலையூட்டிகளின் மூளையத்தின் பரப்பில் உள்ள தவாளிப்புகளுள் ஒன்று.

**சிக்கல் வழி**, (labyrinth). சிக்கலான உட்செவி : என்பாலானதாயோ மென்சவ்வாலானதாயோ காணப்படும: நெய்யரியென்பில வளிககலங்களால் ஆன பக்கதிணிவு: சிறுநீர்தாஙகு குழாய்களை உடைய சிறுநீரக மேற படைப் பகுதிகள: வாதனளிச் செவிப்பறை.

**சித்திரவடிவு**, (mosaic). (1) பெற்றாரின் எதிருருவியல்புகளைக் கலப்பில்லாது கொண்டுள்ள கலப்புப் பிறப்பு. (2) கைமேரா. (3) தாவரஙகளிற் காணப் படும் ஒரு வகை வைரசு நோய். (4) ஆர்த்திரேப்பொட்டுக்களின கூட்டுக் கண்ணில் உள்ள ஒவ்வொரு கண மூலகமும் விம்பத்தின ஒரு பகுதியை மட்டுமே பெறுகின்றதென்றும் மூளையினால் அப்பலபகுதிகள் ஒன் றுக்கப்பட்டு முழுவிம்பமும் அதில் உருவாகின்ற தென்றும் கூறும் கொள் கை.

**சிப்பியகவொளிரி**, (mother of pearl). முத்தாயி பார்க்க.

**சிபுகம்**, (mandible). (1) முள்ளந் தண்டு விலங்குகளில், கீழ்த்தாடை. (2) பூச்சிகள், குறுஸ்தாசெயா, மிறியப் போடா என்பவற்றில் சோடியாயுள்ள வாய்ப் பகுதிகளுள் ஒரு சோடி ; இது வழக்கமாக உணவைக் கடிக்கவும் நசுக்கவும் பெரிதும் பயனுடையது. (3) பொலிக்கீற்றுக்களிலும், செபலொப் பொட்டுக்களிலும், வாய்க்குழிக்குட் காணப்படும் கைற்றினலான ஒரு சோடித்தாடைகளுள் ஒன்று.

**சிம்பிகள்**, (papilla). (1) மேற்றோல் மட்டத்துக்கு மேலே சுரக்குங்கல மொன்றை உடைய ஓர் சூபபிமயிர். (2) சில திறெமற்றேட்டுக்களில் காணப் படுகின்ற, மீளவிழுக்கக் கூடிய நுனியை உடைய ஓர் துணையான ஒட்டும் அங்கம். (3) பறவைகளின் கூம்பு வடிவ உட்டோலமைப்பொன்று. இதுவே இறகையின் ஆரம்பம். (4) நாவின் உட்சருமத்திலுள்ள பல்வேறுபட்ட எறியங்கள், தோலிலுள்ள மேடுகள் ஆகியவற்றுள் ஒன்று. (5) கூம்பு வடிவ அமைப்பு—உ-ம., மூலக்காம்பு, சிறுநீரகக் கூம்பகம், கண்ணீர்ச் சிமபி முதலியன.

**சிமிட்டு மென்சவ்வு**, (nictitating membrane). மூன்றும் கண்மடலாக அமைந்துள்ள, ஒளிபுகவிடுமியல்புள்ள தோன்மடிப்பு. கண் திறந்திருக்கையில இது கண்ணின் உள் (முற்பக்க) மூலையில் அல்லது கீழ்க்கண்மடலுக்குக் கீழே இருக்கும். சிலவகைச் சுறாக்களிலும் அம்பீபியாக்களிலும் இது காணப்படும்; பறவைகளிலும் நகருயிர்களிலும் பரந்து காணப்படும் இது சில முலையூட்டிகளில நன்கு விருத்தியடைந்துளது.

**சிரசுச் சுரப்பி**, (carotid gland). பொதுச் சிரசுநாடி இருகிளைக் கொள்ளும் இடத்தில் உள்ள ஓர் அடர்த்தியான மயிர்க்குழாய் வலைப்பின்னல். இது சுரப்பித் தன்மையது என முன்னர் எண்ணப்பட்டது.

**சிரசுநாடி**, ( carotid artery ). இது முள்ளந்தண்டு விலங்குகளின இதயத்திலிருந்து தலைவரைக்கும் குருதியினை வழங்கும் முக்கியமான நாடி. இது ஒவ்வொரு பக்கத்துக்கும் ஒவ்வொன்றென அமைந்துள்ளது.

**சிரசுநாடிக்கான்**, (ductus caroticus). சில முள்ளந்தண்டு விலங்குகளில், தொகுதி விற்களுக்கும் சிரசுவிற்களுக் கும் இடையே உள்ள ஒரு நிலைத்த தொடுப்பு.



4—R.B. 19772 (12/66)

**சிரை,** (tendon). ஒரு தசையை ஓர் அசையக்கூடிய அமைப்புடன் தொடுக்கின்ற ஒரு வெண்மையான, பளபளப்புடைய நார்.

**சில்வியசின் கால்வாய்,** (aqueduct of Sylvius). மூளையக் கால்வாய்; நடுமூளையின கால்வாய் அல்லது வாயக் கால. இஃது மூன்றும் நாலாம் மூளையறைகளைத் தொடுப்பது. இடைக் குழிவு.

**சில்வியின் பிளவு,** (Sylvian fissure). மூலையூட்டிகளின் மூளையததிற் காணப்படும் ஓர் ஆழமான பககப்பிளவு.

**சிலந்திவலைச் சுரப்பி,** (aracnnidium). சிலந்திகளில், நூறகும் புன்கருவிகளும் பட்டுச் சுரப்பிகளும.

**சிலிர்முள்,** (chaeta). பெரிதும் கைற்றிலான, கட்டையான, தடித்த முளமயிர். இது கிறரெுப்போடாவிறகுச் (சிலிர்முட்புழுககள், நாக்கிளிப்புழுக்கள்) சிறப்பாய் அமைநதுளது. இது கூட்டங் கூட்டமாகத் தோலிலிருநது கிளம்பியநிலையில் துணடவாரியாக அடுக்கப்பட்டிருக்கும். சில விலங்குகளில், உ-ம், மண்புழுவில, இது இடப்பெயர்ச்சிககு உதவுவதாய் உள்ளது. இப்பதம் பிறவிலங்குகளில் காணபபடுகினறு, உதாரணமாக பிருக்கியோப்போடாவில் உள்ள, கட்டையான தடித்த முளமயிர்களையும் குறிக்கப் பயனபடுத்தப்படலாம.

**சிவுகம்,** (mentum). (1) உயர்வகை முள்ளந்தணடு விலஙகுகளில், மோவாய. (2) சில கஸதிரோப்போடாவில், தலைக்கும் பாதத்துக்கும் இடையே உள்ள ஓர் எறியம். (3) பூசசிகளில, பிற்சொண்டின் அடிப்பகுதியாக அமைந்து, சிவுகக் கீழுக்கும் முறசிவுகத்துக்கும் இடையே உள்ள, சேய்மை வனகோது.

**சிற்றடி,** (pedicle). ஒரு குறுகிய துண்டு; பின்னுக்கி எறியமாகியுள்ள முள்ளந்தணடு மூளை; அறக்னிட்டுக்கவில் அவற்றின் தலைநெஞ்சை வயிற்றுடன் இணைக்கும் குறுகிய காம்பு.

**சிற்றறை,** (alveolus). ஓர் அங்கத்தின் பரப்பில் உள்ள குழி அல்லது பள்ளம்; ஒரு சுரப்பியின் குழி; நுரையீரலிலுள்ள ஒரு சிறிய குழி; உயர்வகை முள்ளந்தண்டு விலங்குகளினது தாடையெனபில் உள்ள பற்குழி; எககினோடேர்மாற்றுவில், அரிஸ்ரோற்றிலின் சுண்டுவிளக்கின ஒரு பகுதி-பற்களைக் கவ்விப் பிடிககின்ற ஐநது சோடித தவாளிப்புச் சிற்றென்புகளுள் ஒன்று; கஸதிரோபபோடாவில, சமிபாட்டு நொதியஙகளைச் சுரக்கின்றதாய சமிபாட்டுச் சுரப்பிக் குழலகளின முனைப்பகுதி.

**சிற்றறையிழையம்,** (alveolar tissue). மியூசின் தாயத்தால் பிரிககப்பட்ட கலங்களைக் கொணடுள்ள ஒரு வகைத் தொடுப்பிழையம். இத்தாயததில மஞ்சள், வெள்ளை நார்ககற்றைகள பொதிநதிருக்கும்.

**சிற்றனு,** (maxillula). ஆர்த்திரோப்போடாவில், அனுக்கள் ஒன்றுக்கும் அதிகமான சோடிகள் உளவாயின், முதலாம் சோடியில் ஒன்று.

**சிற்றிசேர்க்கசு,** (cysticercus) - பைவாற் பருவப் புழு பார்க்க.

**சிற்றிடவிழையம்,** (areolar tissue). மியூசின தாயத்தினுல் பிரிக்கப்பட்ட கலங்களைக் கொணட ஒருவகைத் தொடுப்பிழையம். அத்தாயத்துள் வெண்நார், மஞசள் நார்க்கற்றைகள் பதிநதுகிடக்கும்.

**சிற்றுணர்கொம்பு,** (antennule). குறுஸ்ராசெயாவின தலையிலுள்ள முதலாவது தூக்கம் (சோடியானது). இது வழக்கமாக உணர்ச்சியுடையது.

**சிற்றுதடு,** (labellum). பூச்சிகளிலே, முறசொண்டிற்கு அடியிலுள்ள சிறிய சோணை, அல்லது பிற்சொண்டுப் பரிசம்; தும்பிக்கைச் சோணை.

**சிற்றூசி,** (spicule). முள்ளந்தண்டு விலஙகுகளில் காணப்படுகின்ற, சிலிக்காவுள்ள அலலது கல்சியமுள்ள, ஒரு நுண்ணிய, ஊசிபோன்ற பொருள்.

**சிறகு, (wing).** (1) யாதுமோர் பரந்த மென்சவ்வு விரிவு. (2) ஆப்புப்போலி யென்பின பெரும் பக்கமுனை. (3) தெரேடக்ரில்கள், பறவைகள், வௌவால்கள் ஆகியவற்றில் பறப்பிற்காகத் திரிபுற்றுள்ள முன்னவயவம். (4) பூச்சிகளின் பறப்பங்கம்.

**சிறுகண், (ocellus).** (1) பல கீழ்வகை விலங்குகளில் காணப்படும் ஓர் எளிய தனிக்கண் அல்லது கட்புள்ளி. (2) ஒரு கண்போன்ற அடையாளம். உதாரணம், பல பூச்சிகள், பறவைகள முதலியன.

**சிறுகம்பம், (columella).** முலையூட்டிகளில் நத்தைச்சுருளின் மத்திய தூண். கீழ்வகை முள்ளந்தண்டு விலங்குகளில், உட்செவியோடு செவிப்பறையைத் தொடுக்கின்ற செவிச்சிற்றென்பு. சிலவகை நாற்பாதமுளிகளில, மேலிறகையுருவென்பு. சுருளியாகச் சுற்றியுள்ள கஸ்திரோப்பொட்டுக்களில், மத்திய தூண். சில முருகைக் கற்களின் வன்கூட்டில், மத்திய தூண்.

**சிறுகால்வாய், (canaliculus).** ஒரு சிறிய வாய்க்கால்; ஈரலில கலத்திடை காணப்படும் பித்தக்கால்வாய்; என்பில் கலனிடைக் குழிகளை இணைக்கின்ற பாதைகளுளொன்று; நரம்புக் கலங்களில, கலவுடலின குழிய முதலுருவை ஊடுருவிச் செல்கின்ற ஒரு நுண்ணிய கால்வாய்.

**சிறுகுடல் நிணநீர்க் கான்கள், (lacteals).** சிறுகுடலில உள்ள குடற்பாறகலன்கள் அல்லது நிணநீர்க் கலனகள்.

**சிறுகேடயம், (scutellum).** பறவைகளில் உள்ள கணுக்காற்செதில்; பூச்சிகளிற் காணப்படுகின்ற முதுகுப்பகுதியானது, மாதிரியாக மூன்று வனகோதுகளாகப் பிரிநத நிலையில், பிற்பக்கமாக உள்ள வன்கோது.

**சிறுசஞ்சு, (rostellum).** (1) ஒரு சிறிய அலகுருமுனை. (2) நாடாவுருப் புழுவின சென்னியில் கொளுக்கிகளுடன் காணப்படுகின்ற ஓர் உருண்டையான மேடு. (3) சில சிறகிலிப் பூச்சிகளின் குழாயுருவ வாய்ப்பகுதிகள். (4) அலகு வடிவான முனை.

**சிறுசாவியிடையென்பு, (interclavicle).** மேனமாாபென்பு; சிறுசாவியென்புகட்கு இடையிலே நடுககோட்டு வயிறறுப்புறமாய் அமைநதுள்ள ஓர் என்பு.

**சிறுசாவியென்பு, (clavicle).** முள்ளந்தண்டு விலங்குகளில் மார்பு வளையத்தின் முன்பக்க மென்சவ்வெனபாகிய காறையெனபு.

**சிறுதலையுரு (capitellum).** ஓர் என்பானது இன்னோர் என்புடன் மூட்டப்படுவதற்காக அதன் முனையிலே கொண்டுள்ள ஒரு விரிவு அல்லது குமிழ்.

**சிறுதீவு, (islet).** வேறுவகையான ஓர் இழையத்தினுள் காணப்படுகின்ற ஒரே வகைத்த, சிறிய, தனிமையாகப்பட்ட இழையததிணிவு. உ-ம்., இலங்ககான்சு சிறுதீவு.

**சிறுதுண்டு, (pulvillus).** பாதத்திலோ உகிர்கட்கிடையோ காணப்படும் திண்டு முனை அல்லது மென்சவ்வு. இது ஒட்டிப் பிடிக்குமங்கமாய்ச் சிலவேளைகளிற் தொழிலாற்றும்; ஒவ்வோர் உகிருக்கும கீழே உள்ள சோணை.

**சிறுதுணிக்கை, (corpuscle).** (1) தாயத்தில புதைநதோ, பாய்பொருளில் சுயாதீனமாக மிதந்தோ காணப்படும் ஒரு முதலுருக் கலம். (2) ஏதுமொரு நுண்ணிய துணிக்கை. உ-ம்., கலத்திலுள்ள சிறு துணிக்கைகள.

**சிறு நா, (ligula).** நாலாம மூளையறையின் முதுகுபபுறச் சுவரில் உளள வெண்சடப் பொருளின் ஒரு பட்டி; பூசசிகளின் பிற்சொண்டுப் பரிசஙகட்கிடையில நடுக் கோட்டிலமைநத அமைப்பு; சிலவகை அனெலிட்டுக்களில் உளள புரபாத முனையின் சோணை.

**சிறுநீர்ப்பை, (urinary bladder).** இஃது சிறுநீரைச் சேமித்துவைக்கும் பை. சில விலங்குகளில் இஃது சிறுநீரகக் கானிேேனார் விரிவாயிருக்கும்.

எ. கா., குறுஸ்ராசெயா, தெலெயோஸ்ற் மீன்கள். நாற்பாதமுளிகளிலே, இது குடலின் (கழியறை) பின்முனையின், வயிற்றுப்புறக கிளைக்குழாய்; இது, அமினியன விலங்குகளின் முளையத்தில் அலந்தோயிகரு இட்டுச் செல்லும்; நிறையுடலிப் பறவைகளிலும் அனேகமான நகருயிர்களிலும் இது காணப்பட மாட்டாது.

**சிறுநீர்வழி,** (urethra). சிறுநீர்ப்பையிலிருந்து சிறுநீரை இட்டுச் செல்லுவதும், ஆணில் அததோடு விந்தைக் கடததுவதுமான ஒரு கான்.

**சிறுநீரகம்,** (kidney). முள்ளந்தண்டு விலங்குகளிலே கழிவகற்றுவதற்கும் நீரைச் சீராக்குவதறகும் உரிய ஓர் அங்கம். இது எண்ணிறந்த சிறுநீரகததிகளையும் அவற்றிற்கான குருதி வழஙகலையும் உடையதாயிருக்கும்.

**சிறுநீரகவாயிற்றொகுதி,** (renal portal system). சில கீழ்வகை முள்ளந தண்டு விலங்குகளில், உடலின பிற் புறப் பகுதியில் உள்ள மயிர்குழாய்களிலிருந்து குருதியைக் கொணாநது சிறுநீரகங்களின் மயிர்க்குழாயகளினுள் அதைச் செலுத்துவதற்கென அமைநதுள்ள, நாளத்தொகுதியின பகுதி.

**சிறுபை,** (sacculus). (1) ஒரு சிறிய பொக்கணம் போனற அல்லது மடி போன்ற அமைப்பு. (2) காதின தலைவாயிலின் கீழ்ப்பகுதி. (3) குரலவளை அறையின் வளரி.

**சிறுமணிப்படை,** (stratum granulosum). தோலில மேலெழுந்தவாரியாகக் காணப்படுகினற சீதமென்சவ்வு வலைப் படை.

**சிறுபுலனுறுப்பு,** (sensilla). ஒரு சிறிய புலனஙகம்.

**சிறுவலையுருவான,** (reticular). வலை வேலைப்பாடு போன்ற சிற்றிடைவெளிகளை உடைய இழையத்தைக் குறிக்கும்.

**சிறைச்சுவடு,** (pterylae). ஒரு பறவையினது இறக்கைச் சுவடுகள; இறக்கைகள் வளரும் தோற்பிரதேசம்.

**சிறைப்பை,** (cyst). (1) கலத்தையோ கலங்களையோ மூடியிருக்கும் ஓர் உயிரற்ற மென சவ்வு. (2) யாதுமோர் பை போன்ற அமைப்பு. உ-ம்; முள்ளந்தண்டு விலங்குகளின் பித்தப் பை அல்லது சிறுநீர்ப் பை. (3) வீக்கத்தின் விளைவுப் பொருட்களைக் கொண்டிருக்கும் ஒரு பை.

**சிறைப்பையாக்கம்,** (encystation). உறுதியானதும் பாதுகாப்பானதுமான ஓர் உறையை அல்லது கூண்டை ஆக்குதல்.

**சீதத்துக்குரிய,** (mucous). சீதத்தைச் சுரக்கின்ற அல்லது அதைக் கொண்டுளள அல்லது அத்தோடு சம்பந்தப்பட்ட: இப்பதம் சுரப்பிகள், மென்சவ்வுகள், உறைகள், இழையம் என்பவற்றைக் குறிககப் பயன்படும்.

**சீப்பு,** (comb). (1) சீலென்ரெருற்று வில், ஒரு நீந்தும் தகடு. (2) குஞ்சுகளைக் காப்பதற்கோ உணவைச் சேர்த்து வைப்பதற்கோ சமூகத் தேனீக்களால் உண்டாக்கப்பட்ட மெழுகுக் கலங்களால் ஆன சட்டவமைப்பு.

**சீப்புரு,** (pecten). சீப்புப்போன்ற அமைப்பொன்று; சில முள்ளந்தண்டு விலங்குகளில் (நகருயிர்களிலும பறவைகளிலும்), அறியப்படாத தொழிலுடைய, விழித்திரையின் உணமேறபரப்பினது முளை; அறக்னிடாவில் காணப்படும் தாவி நடததற்குரிய அங்கம்.

**சீப்புரு,** (ctenidium or pecten). சீப்புப் போன்ற அமைப்பொன்று. (1) மொல்லுஸ்காப் பிராணிகளில் இறக்கை அலலது சீப்புப் போன்ற வடிவுடைய சுவாச உபகரணம். (2) சில பூச்சியினங்களில் சீப்புப் போன்ற உருவமாய் அமைந்துள்ள ஒரு முள்வரிசை. (3) சீலென்ரெருற்றுவில் ஒரு நீநதும் தகடு.

**சிப்புருச் செதில்,** (ctenoid scale). சீப்புப் போன்ற சுயாதீனக் கரையை உடைய செதில்.

**சீதம்,** (mucus). சீதமென்சவ்வில் உள்ள கெண்டிக்கலங்களாலோ சுரப்பி ஒன்றின் சீதக் கலங்களாலோ சுரக்கப்படும் பாகினியலபுள்ள, பளபளப்பான பதார்த்தம்.

**சீதமென்சவ்வு,** (mucous membrane). (1) உடலின் பலவேறு வகையான குழாய்வடிவ (உதாரணமாகக் குடல், கருப்பை, வாதனளி முதலியன) குழிகளைப் படலிட்டிருக்கும் ஓர் இழையப்படை. இது தனிக்கலத்தாலான சீதச் சுரப்பிகளைக் கொண்ட ஒரு மேலணிப்படையையும் இதற்குக் கீழே சிறறிடவிழையம் நிண நீருருவிழையம் ஆகியவற்றால் ஆன ஒரு படையையும் கொண்டிருக்கும். இவை இரண்டுக்குமிடையே அடித்தள மென்சவ்வு இருக்கும். (2) சீதமுனி.

**சீர்குலைவு,** (degeneration). முன்னையதை விடக் குறைந்த சிறப்புடைய உருவமாக அல்லது தொழிற்பாட்டில உயிர்ப்புக் குறைந்த உருவமாக மாற்றமடைதல் ; பின்னிடைக் கூர்ப்பு.

**சீலோமாற்று,** (coelomata). தமது வாழ்க்கைச் சரித்திரத்தில் ஏதாவது பருவத்தில் ஓர் உடற்குழியை உடைய விலங்குகளை அடக்கி நிற்கும் மெற்றசோவாவின் ஒரு தொகுதி.

**சுக்கிலச் சிறுகுழாய்கள்,** (seminiferous tubules). முள்ளந்தண்டு விலங்கின் விதையில் பல நூற்றுக் கணக்காகக் காணப்படுகின்ற சுருண்ட சிறு குழாய்கள் (ஒவ்வொன்றும் மனிதனில் கிட்டத்தட்ட 50 ச.மீ. நீளமானதாயும் $\frac{1}{5}$ மி.மீ. விட்டமானதாயும் காணப்படும்). இவை மூலவுயிர் மேலணியினால் ஆனவை. இலிங்கத் தொழிற்பாட்டின் பொழுது அவற்றுள் கிட்டத்தட்ட விந்து முதிரும் பருவம் உட்பட விந்தாக்கத்தில் நடைபெறும் பருவங்களைத்தனையும் நடந்தேறும். போசாக்குக்குரியவை எனப்படுகின்ற, விந்தாகு கலங்கள் இணைந்து காணப்படும் சேர்ரோலி கலங்களும் உண்டு. சூலகத்தின் சூலகப்புடைப்பை ஒத்தவையாயக் காணப்படுகின்றன.

**சுக்கிலப் புடகம்,** (vesicula seminalis). விந்துக்கள் தமது விருத்தியை முடித்துக் கொள்வதற்கும், தேங்கிக் கிடப்பதற்கும் பயன்படும் ஒரு பை.

**சுக்கிலம்,** (semen). விதைகளிலிருந்தும துணைச்சுரப்பிகளிலிருந்தும் சுரக்கின்ற சுரப்புக்களுடன் விந்துக்களையும உடையதாய்க் காணப்படும் பாயபொருள்.

**சுக்குரோசு,** (sucrose). கரும்புவெல்லம், $C_{12}H_{22}O_{11}$.

**சுண்ணும்புசேர் கசியிழையம்,** (calcified cartilage). தாயத்தில் சுண்ணும்புச் சடப்பொருட் படிவு உள்ள கசியிழையம். இது பல கீழ்வகை முள்ளந்தண்டு விலங்குகளின் வன்கூட்டினது பகுதியாய அமைந்துளது. எ.கா., எலாஸ்மோபிருங்கி விலங்குகள்.

**சுண்ணும்புப் படிவு,** (calcification). சுண்ணும்பு உப்புகள் படிதல், உ-ம., நாடிகளின் சுவர்கள் போன்ற இழையங்கள் நோயுற்றோ இறந்தோ இருப்பின் அங்கு சுண்ணும்பு உப்புக்களின் படிதலைக் காணலாம்.

**சுரக்குங் கலம்,** (gland cell). ஒரு தனிமையான, சுரந்துகொண்டிருக்குங் கலம். சுரப்பிமேலணியின் ஒரு கலம்.

**சுரத்தல்,** (secretion). சுரப்பு பார்க்க.

**சுரப்பி,** (gland). உடலிற் பயன்படுத்தப்படுவதற்கெனவோ, கழித்தற்கெனவோ, சுரப்புக்களைச் சுரப்பதன் பொருட்டுச் சிறப்படைந்துள்ள தனிக்கலம் அல்லது கலத்திணிவு சுரப்பி எனப்படும.

**சுரப்பு** (secretion). ஒரு சுரப்பியினாலோ சுரப்பிக்கலத்தினாலோ உண்டாக்கப்பட்டு, சேகரிக்கப்பட்டு, வெளியேற்றப்பட்ட ஒரு பதார்த்தம். (சுரத்தல்—இப்படிப்பட்ட பதார்த்தத்தை உண்டாக்கும் முறை).

**சுருங்கத்தக்க புன்வெற்றிடம்,** (contractile vacuole). பல புரோற்றிஸ்ராக்கவின் குழியமுதலுருவில கழித்தல் அல்லது நீர்நிலையிறுத்தலை உடைய கோளவுருவான ஒரு சிறிய புடகம்.

**சுருங்கல்,** (contraction). ஒரு தசை நாரோ முழுத்தசையோ தொழிற்படும்பொழுது குறுகுதல் (தடித்தலுங்கூட).

**சுருங்குந்தன்மை,** (contractility). சில கலங்களாலும் இழையங்களாலும் காட்டப்படுகின்ற நீளத்தைக் குறைக்கக்கூடிய வலு. உதா., தசை. உருவத்தை மாற்றத்தக்கவலு.

**சுருட்குடல்,** (ileum). சிறுகுடலின் இறுதிப்பிரிவு; இடைச்சிறு குடலுக்கும் பெருங்குடலுக்கும் இடையே உள்ள பகுதி.

**சுருட்குடற்குறையின் வால்வு,** (ileo-colic valve). சுருட்குடற் குருட்டுக் குழல வால்வு. பெருங்குடலினுட் சுருட்குடல் திறக்குமிடத்தில் உள்ள (சீதமென்சவ்வுகளின் இரு மடிப்புக்களினாலான) வால்வு.

**சுருளி,** (spiral). சுற்றுகின்ற, திருகாணிபோன்ற; அரைநிறவுருக்களையும் நிறமூர்த்தங்களையும் குறிக்கும்; ஒரு சுருண்ட அமைப்பு; இழையுருப்பிரிவிலும் ஒடுக்கற் பிரிவிலும் காணப்படுகின்ற நிறமூர்த்த இழையாலான சுருள்.

**சுருளிவால்வு,** (spiral valve). தெலெயோஸ்ரூக்கள் தவிர்ந்த மீன்களில, குடற்சுவரின் உறிஞ்சும் பரப்பை அதிகரித்தற்பொருட்டு அதில் ஏறபட்டிருக்கும் சுருளிவடிவ உண்மடிப்பு.

**சுருளென்பு,** (turbinal bone). முள்ளந்தண்டு விலங்குகளின் மூக்கிலுள்ள சிலவகை என்புகளுள் ஒன்று. இது மணநுகர்ச்சிச் சீதமென்சவ்வு மடிப்புகளுக்கு ஆதாரமாகக் காணப்படும்.

**சுவருக்குரிய,** (parietal). ஓர் அமைப்பின சுவர்ப் பகுதிக்குரிய அல்லது சுவரின் பகுதியாயமைந்த; கலங்கள், மென்சவ்வு, படை, சோணை, சூல்வித்தகவமைப்பு, பூச்சிகளில் நுதலுக்கும் பிடருக்கும் இடையிலுள்ள பிரதேசம் ஆகியவற்றைகக்குறிக்கும்.

**சுவரென்புகள்,** (parietal bones). அனேகமான முள்ளந்தண்டு விலங்குகளில் நுதலென்புகட்குப் பின்னால் மூளையின் மேற்பரப்பின் பெரும் பகுதியை முடியிருக்கின்ற ஒரு சோடி மென்சவ்வென்புகள்.

**சுவாசப்பைச் சிறுகுழாய்,** (bronchiole). நாற்பாதமுளிகளின நுரையீரலினது வளிகடத்தும் சிறு (விட்டம் 1 மிமீ. இறகும் குறைவானது) குழாய்; சுவாசப்பைக் குழாயின் கிளையாகத் தோன்றிச் சிறறறையில் முடிவுறும். சுவர்களில மிருதுவான தசைகள் பெருமளவில் உண்டு. இத்தசைகள் உள்ளிடத்தின பருமனைக் கட்டுப்படுத்தும். சுவாசப்பைக் குழாய்களில் உள்ள கசியிழையமும் சீதச்சுரப்பிகளும் இதில காணப்படமாட்டா.

**சுவாசப்பைக்குழாய்,** (bronchus), இது நாற்பதாமுளியினுடைய நுரையீரலின பெரிய காற்றுக்குழாய். ஒவ்வொரு நுரையீரலிலும் உள்ள ஒவ்வொரு பெருஞ்சுவாசப்பைக் குழாயும், அவற்றை வாதனாளியுடன் இணைக்கின்றன. நுரையீரலினுள்ளே சுவாசப்பைக் குழாயானது, கிளைவிட்டுச் சிறிய சிறிய சுவாசப்பைக் குழாய்களாகச் சென்று, இறுதியில், சுவாசப்பைச் சிறுகுழாயாக முடிவுறும். சுவாசப்பைக் குழாயின சுவரில கசியிழையத்தட்டுக்கள், மென்தசைகள், சீதஞ்சுரக்குங் கலங்கள் என்பன உணடு. சுவரைப் படலிட்டிருக்குங் கலங்களிலுள்ள பிசிர்கள் வாயை நோக்கி அடித்து தூசிகள் முதலானவற்றை அகற்றும்.

**சுவாசம்,** (respiration). சத்தியை வெளிப்படுத்துமுகமாக, ஒட்சிசனைச் சூழவுள்ள வளியிலிருந்து அல்லது நீரிலிருநது பெற்று, அதனை உடலிலுள்ள பதார்த்தங்களுடன சேர்க்கும் முறை.

**சுவாசக்கலம் (குழாய்க்கலம்),** [flame cell (solenocyte)]. முள்ளந்தண்டில்லா விலங்குகளிலும் கீழ்வகைக் கோர்டாற்றுக்களிலும் காணப்படுகின்ற ஒரு வகைக் கழிவங்கம். இது இழைத்த முனைகளுடைய உட்குழிவான ஒரு கலத்தையும், இதன உள்ளிடத்தே தமது அசைவுகளினால் கீழ்நோக்கி ஓட்டத்தை நிலைப்படுத்தத்தக்க ஒரு கொத்துப் பிசிரையும் உடையது.

**சுவையரும்பு,** (taste bud). நாவிலும் அருகுப்பகுதிகளிலும் காணப்படும், சுவைக்குரிய ஒரு முனைவங்கம். இது சுவைப்பதற்குரியதும், ஆதாரத்துக்குரியதுமான குடுவைவடிவக் கலக்கூட்டத்தை உடையதாய்க் காணப்படும்.

**சுற்றயல் நரம்புத்தொகுதி,** (peripheral nervous system). மையநரம்புத் தொகுதி தவிர்ந்த ஏனைய நரம்புத் தொகுதி யாவும் சுற்றயல் நரம்புத் தொகுதி எனப்படும். இது முக்கியமாக பலதிறப்பட்ட பருமனிலுள்ள (மனிதரில் அரை அங்குல விட்டம் வரை) நரம்புகளை உடையதாயிருக்கும். பெரும் நரம்புகளானவை தாம் வழங்கும் பல்வேறு விளைவுகாட்டிகட்கும் வாங்கிகட்கும் தமது எண்ணிறந்த (பெரிய முள்ளந்தண்டு விலங்குகளின் அவய நரம்பில் சிலகால் 100,000 நரம்புநார்கள் உண்டு.) நரம்பு நார்களை வழங்கும்பொருட்டு மையநரம்புத் தொகுதியை விட்டுக் கிளம்பியவுடன் மீண்டும் மீண்டும் கிளைக்கும்.

**சுற்றியோடுதல்,** (circulate). வட்டமாகச் சென்று திரும்பவும் தொடங்கிய இடத்தையே அடைதல். எடுத்துக்காட்டாக, இதயத்திலிருந்து குருதியானது நாடிகளூடாக வெளிச்சென்று திரும்பவும் நாளங்களூடாக இதயத்தை அடைகின்றது.

**சுற்றுச்சுருக்கு,** (peristalsis). உதரக் குடற் சுவர் நெடுக முன்னேறிச் செலலும், அலைபோன்ற தசைச்சுருக்கத் தொடர். இது களத்திலிருந்து நேர் குடல்வரை உட்பொருளை முன்னேக்கிச் செலுத்த உதவியாய் உளது.

**சுற்றுருவம்,** (periplast). மையமூர்த்தம்; ஈர்ப்புக் கோளம்; சவுக்குள்ள விலங்குகளின் புறக்கலவுரு; கலவிடைப் பதார்த்தம் அல்லது இழையங்களின் பஞ்சணை.

**சுற்றுவரி,** (peritoneum). வயிற்றுச் சுவர்களுடன் ஒருபகுதி இணைந்த நிலையிலும், ஒரு பகுதி உள் உடலகத்தின் மீது தெறித்த நிலையிலும், காணப்படுகின்ற ஓர் நீரப்பாயமென்சவ்வு.

**சுற்றோட்டத்தொகுதி,** (circulatory system). நிலையான பாயபொருளோட்டத்தை ஏதுவாக்கும் அங்கங்களின் தொகுதி. இது உடலின் வெவ்வேறு அங்கங்கட்கும் பகுதிகட்குமிடையே திரவியங்களைக் கொண்டு செல்ல உதவியாக உள்ளது.

**சூரிய பின்னல்,** (solar plexus). உயர் வகை முலையூட்டிகளில் உள்ள தன்னாட்சி நரம்புத் தொகுதியின் திரட்டு மையம். இது வயிற்றுக்குழியின் முற்புற, முதுகுப்பக்கப் பகுதியில் உளது. இதிலிருந்து எல்லாத்திசைகட்கும் நரம்புகள் கதிர்விடும்.

**சூல்கொள்ளல்.** (conception). விந்துடன் ஒரு சூல் கருக்கட்டல்.

**சூல்வாங்கி,** (receptaculum ovorum). மணபுழுவில், முட்டைகளை சேகரித்து வைப்பதற்கென அகத்தே உள்ள ஒரு பை.

**சூல்வித்தகம்,** (placenta). எயுத்தெறியன முலையூட்டிகளின் கருப்பையில் முதிர்மூலவுயிரின் இழையமும் தாயினது இழையமும் பிணைப்புறுவதனால் உண்டான இரட்டையான, கலனுள்ள, கடற்பஞ்சுபோன்ற ஓர் அமைப்பு. இதில் தாயினதும் முதிர்மூலவுயிரினதும் குருதிக்கலன்கள் நெருங்கிய அண்மையில் மைந்துள்ளபடியால் பிரசாரணத்தால் போசாக்கு, சுவாசப்பரிமாறல்கள் ஆகியன நிகழ்கின்றன.

**சூழல் வெப்பக்குருதிநிலையான,** (cold blooded). உடல்வெப்பநிலை சூழலின் வெப்பநிலையில் தங்கியுள்ளமை (விலங்குகளில்).

**சூழலியல்,** (ecology). அங்கிகளை அவற்றின் சூழலோடு தொடர்புறுத்திப் படித்தல்.

**சூற்காலம்,** (gestation period). பிள்ளையீனும் விலங்கில் கருவுற்றகாலந் தொட்டுப் பிறக்கும் வரையும் உள்ள காலவளவு.

**செங்குருதித் துணிக்கை,** (red blood corpuscle). முள்ளந்தண்டு விலங்குக குருதியின் ஹீமோகுளோபின் கொண்ட கலங்கள். இவை குருதியிலுள்ள ஒட்சிசன் அனைத்தையும் காவிச் செல்லும். இவை மிருதுவான பரப்பை உடையவை. தட்டையான சில்லுப் போன்றவை. சீக்குளோஸரோம்களிலும் அனேகமான முலையூட்டிகளிலும வட்ட வடிவமானவை. ஒட்டகங்கள், இலாமாஸ் ஆகியவற்றிலும் பிற முள்ளந்தண்டு விலங்குகளிலும், முட்டையுரு வடிவின. எளிதில் திரிபடைபவை. ஆனால் மீள் சத்தி உடையவை. தாமாகவே அசையும் இயல்பற்றவை. முலையூட்டிகளில (பிற முள்ளந்தண்டு விலங்குகளில் அல்ல) முளையப்பருவந் தவிர்ந்த ஏனைய காலங்களில் அவை கருக்கள் அற்றவையாயக் காணப்படும். மனிதனில் ஒவ்வொரு செங்குருதிச சிறு துணிக்கையும் இருகுவிவ வட்டத்தட்டுப போன்றிருக்கும ; நிலைப்படுத்தப்பட்ட பின்னர் எட்டு மைக்கிரன் விட்டமுடையதாயிருக்கும். ஒரு கன மில்லிமீற்றர் மனிதக குருதியில கிட்டத்தட்ட 50 இலட்சம் செங்குருதித் துணிக்கைகள் காணப்படும்.

**செங்குருதியரும்பர்கள்,** (erythroblasts). குழியமுதலுருவில் ஹீமோகுளோபினை உடையதும் பின்னடியில ஒரு செங்குழியத்தைத் தோற்றுவிப்பதுமான ஒரு முளையக் கலம்.

**செங்குழியம்,** (erythrocyte). முள்ளந்தண்டு விலங்குகளில உள்ள செங்குருதித் துணிக்கைகளுள் ஒன்று. ஹீமோகுளோபின உடைய தட்டையான முட்டையுருவ அல்லது வட்டவடிவத்தட்டுப் போன்ற ஒரு கலம் (முலையூட்டிகளிலுள்ள செங்குழியம் கருவற்றதாயிருக்கும்).

**செட்டை,** (fin). மீன்களிலும், சில வகை செபலொப்போடாக்களிலும், மற்றைய நீர்வாழ் விலங்குகளிலும் இடப்பெயர்ச்சிக்காகவோ சமநிலைப்படுத்தற்காகவோ பயனுடைய, கவசத்தாலான ஒரு தசை மடிப்பு. மீனகளில, இது உள்வன கூட்டு மூலகங்களினால ஆதாரம் பெற்றுள்ளது.

**செட்டைக்கதிர்கள்,** (fin rays). இவை செட்டைகட்குரிய ஆதாரங்கள். அனேகமான மீனகளில கதிரவடைந்துள்ளவன கூட்டுக்கோல்கள் கசியிழையம், என்பு ஆகியவற்றாலோ கொலாஜென போன்றவற்றாலோ (இலாஸரொயிடின்), ஆனவை.

**செதிண்மேலணி,** (squamous epithelium). தட்டையான, செதிள போன்ற கலங்களால ஆன ஓர் அல்லது பல படைகளைக் கொண்டிருக்கும மேலணி. தள மேலணி.

**செதில்,** (scale). (1) மேற்றோலுக்குரிய அல்லது உடடோலுக்குரிய ஒரு தட்டையான, தட்டுபோன்ற, சிறிய புறவமைப்பு. (2) என்பாலான, கைற்றினாலான அல்லது கொம்பாலான வெளிவளரி.

**செதிளென்பு,** (squamosal). முள்ளந்தண்டு விலங்குகளின தலையோட்டின பிற்புறப்பக்கத்துச சுவரின பகுதியாய் அமைந்துள்ள ஒரு மென்சவ்வென்பு.

**செயற்கைத்தேர்வு,** (artificial selection). மனிதனால் கட்டுப்படுத்தப்பட்ட விருத்தித் தோவினால அங்கிகள வேறுபடுத்தப்படும் முறை.

**செயற்கைமுறைக் கன்னிப்பிறப்பு,** (artificial parthenogenesis). விந்தைத் தொடுகையுறவிடாது, ஒரு முட்டையில (சாதாரணமாக கன்னிப்பிறப்படையும் முட்டையல்ல) விருத்தியைச் செயற்கை முறையாயத் தூண்டிவிடுதல்–பல விலங்குகளில (முயல் உட்பட) இதைப் பல்வேறு விதங்களில் செய்யலாம். உதாரணமாக, குளிரவைத்து ஊசியால்

குத்தி, அமிலத்தால தாக்கி. ஒரு சில சந்தாப்பங்களில உயிரப்பூட்டபபட்ட முட்டையானது நிறையுடலியாகும வரை வளர்க்கபபடுகிறது.

**செயற்கை முறை விந்து புகுத்தல்** (artificial insemination). சுக்கிலத்தைக் கருப்பைக்குள் செயற்கைமுறையாகச் செலுத்தல. சில விரும்பத்தகக பாரம்பரிய இயலபுகளையுடைய விலஙகுகளின் சுக்கிலததைத் தூர இடஙகளுககு எடுததுச் சென்று, கருக்கட்டுதன்மைக்குச சிறந்த சூழநிலைகளில எண்ணிறந்த பெண் விலங்குகளுக்கு விந்து புகுததக கூடியதாயிருப்பதனுல இம்முறை விலஙகு விருததியில பெரிதும் பயனபடுகின்றது.

**செலுலோசு,** (cellulose). தாவரங்களின கலங்களில ஒரு முககிய பகுதியாய் அமைந்துள்ள காபோவைதரேறறு. இது தூனிககாற்றுக்களின் கவசஙகளிலும் காணபபடும். $(C_6H_{10}O_5)x$.

**செவ்வகத்திண்மவென்பு** (cuboid bone). சேய்மைக கணுககாலென்புகளுள் மிகப்புறததே உளளது.

**செவிக்குரிய,** (auditory). கேட்டற் கருவியைச் சார்நத ; அங்கம், கரு, சிற்றெனபு, உறை, காலவாய, குழாய் வழி, நரமபு, புடகம் முதலியவறறைக குறிககும் ; செவிப்புலன சாாநத.

**செவிச்சிறுகம்பம்,** (columella auris). நகருயிர்கள், பறவைகள், அஉுாரு ஆகியவறறின செவிப்பறையிலிருநது உட்காதுவரை தொடுககப்படடு, ஒலியைக கடததிச செல்கின்ற எனபாலான அல்லது கசியிழையத்திஞலான தண்டு. இது மீனகளின உவையுருககீழ்ந்தாடை எனபையும் முலேயூட்டிகளின் ஏநதியுருவையும் அமைப்பில் ஒத்திருக்கும்.

**செவிநரம்பு,** [auditory nerve (acoustic nerve)]. உட்செவிக்கு நரம்பிஜன நல்குகின்ற, முள்ளந்தண்டு விலங்குகளின் எட்டாவது மண்டையோட்டு நரம்பு ஒரு முதுகுப்புறவேர் ; முளேயவியலின் படி இது ஏழாவது மணடையோட்டு நரமபின கிளையாகும.

**செவிப்பறை,** (tympanum). (1) நடுச் செவியாக அமைநது காணப்படும் பறைபோனற குழி. (2) பூசசிகளின் கணைககால, அனுமாாபு அலலது வயிறு எனபவற்றில உளள செவியஙகத்தின மெனசவ்வு. (3) சில தெத்திருவொணிட்டுக்களின கழுத்தில உளள காறறடிக்கத் தகக வளிப்பை.

**செவிப்பறைக் குமிழ் முளைப்பு,** (tympanic bulla). சிலவகை முலேயூட்டிகளிலே, செவிப்பறைக் குழியையும், செவிபபறையெனபின விரிவிஞல் உண்டான செவிக்குழாய்வழியையும் வெளிபபக்கத்தே சூழ்நதுள்ள ஓர் என்புப் புடகம்.

**செவிப்பறைக்குழி (நடுச்செவி),** (tympanic cavity). நாறபாதமுளி முள்ளந்தணடு விலங்குகளில (உரேுடெலா, ஆப்போடா, பாமபுகள் என்பவை விதிவிலககு) செவிப்பறைக்கும செவியறைக்கும் இடையே உள்ள குழி. இது பூப்பிளவிலிருநது (சுவாசத் துவாரம) பெறப்பட்டது. ஊத்தேக்கியோவின குழாய் மூலம் வாயோடு தொடாபுடையது. வளியால நிரம்பியுளது. செவிச் சிற்றென்புகள குறுககே அமைநதிருக்கும். அனேகமான முலேயூட்டிகளில, தலேயோடடின எனபெறியததினுள் (குமிழ் முளைப்பு) உறையிடப்படடிருககும்.

**செவிப்பறை மென்சவ்வு,** (tympanic membrane). மேளததின முகபபைப போன்று நடுச்செவியின குழியை வெளிபபுறமாய மூடியிருககும் ஒரு மெல்லிய மெனசவ்வு. இது முலேயூட்டிகளில புறக் காதுக்குழியின அடியில் ஆழமாய் அமைந்திருக்கும். பறவைகளிலும் நகருயிர்களிலும் அதிக ஆழததில இலாது காணப்படும். தவளைகளிலும் தேரைகளிலும் மேற்பரப்பில அமைந்திருக்கும்.

**செவிப்பறை யென்பு, (tympanic bone).** முலையூட்டிகளில் செவிப்பறையின் ஒரு பகுதியை முடியும், செவிப்பறை மென்சவ்விற்கு ஆதாரமாயும் உள்ள தலையோட்டின் ஓர் என்பு. மனிதனில் இது செவிப்பறைத் தகடாக உள்ளது. இது முதிர் முலவுருவில் ஒரு தெளிவான முற்றுரு வளையமாக (செவிப்பறை வளையம்) இருந்தபோதும், நிறையுடலியில் செவிப்பறையென்பின் கல்லுப்பகுதியுடன் இணைகின்றது. அனேகமான முலையூட்டிகளில் இது உருண்டுதிரண்ட செவிப்பறைக்குமிழ் முனைப்பை உடையதாகக் காணப்படும். மற்றைய முள்ளந்தண்டு விலங்குகளில், இப்பதம், மேற்கூறியதை நிகர்த்து நிற்பதெனக் கருதப்படுகின்ற அனேக என்புகளைக் குறிக்கப் பிரயோகிக்கப் படுகின்றது.

**செவியங்கம், (auditory organ).** ஒலியை உணர்வதற்கான புலனங்கம். முள்ளந்தண்டு விலங்குகளில், வேக வளர்ச்சி, ஈர்ப்பு ஆகியவற்றிற்கிணங்க நிலையையும் உணரக்கூடியதாகச் செவியங்கம் உளது.

**செவியுறை, (auditory capsule).** செவியங்கத்தை மூடியிருக்கும் முள்ளந் தண்டு விலங்குகளின் மண்டையோட்டுப் பகுதி.

**சேய்மையென்பு, (distalia).** சேய்மை யிலுள்ள அதாவது மூன்றும் வரிசை யிலுள்ள, மணிக்கட்டென்புகள் அல்லது கணுக்காலென்புகள்.

**சேர்க்குங்குழாய், (collecting tube).** சிறுநீரகத்தின் மேற்பட்டைப் பிரதே சத்திலிருந்து சிறுநீரை எடுத்துச் செல்கின்ற சிறுகுழாய்களுள் ஏதாயினு மொன்று. இது முதலில் வளைந்து பின்னர் நேராகச்செல்லும்.

**சேர்க்கேரியா, (cercaria).** திறெ மற்றோடாவின் இறுதிக் குடம்பிப் பரு வம். இது நேரே நிறையுடலியாக விருத் தியடையும். கட்புள்ளிகள், உறிஞ்சி ஆகியவற்றினையுடைய வட்டமான அல் லது முட்டையுருவான உடலும், உந்திச் செல்லுகின்ற வாலும் உள்ளமையால் இதை அடையாளங்கண்டு கொள்ளலாம்.

**சோடிச்செட்டைகள், (paired fins).** மீன்களின் மார்பு, இடுப்புச் செட்டை கள்.

**சோணை, (auricle).** ஏதாவதொரு காதுபோன்ற தூக்கம். செவிமடல், அதாவது புறச்செவி.

**சோணையுரு, (pinna).** (1) வெளிச் செவி. (2) ஒரு பறவையின் இறக்கை அல்லது சிறகு. (3) ஒரு மீன் செட்டை.

## த

**தசக்காலி,** (decapod). (1) ஐந்து சோடிக் கால்களை, நெஞ்சறையில் உடைய குறுஸ்தாசெயாப் பிராணி.

(2) பத்துப் புயங்களையுடைய செபலொப் பொட்டுப்பிராணி.

**தசை,** (muscle). சுருங்கத்தக்க நார்களாலான இயக்கவியலபுடைய ஒரு திணிவு ; தசையிழையத்தாலான உடலின் சதைப்பிடிப்பான பகுதி.

**தசைநாருறை,** (sarcolemma). ஒரு தசைநாரின் நீட்டத்தக்க உறை ; இது சுருங்கத்தக்க பதார்த்தத்தை மூடிக் காணப்படும்.

**தட்டச்செதில்,** (placoid scale). பல மீன்களிற் காணப்படுகின்ற பல்போன்ற செதில்கள். எலாஸ்மோபிருங்கின் உடலை இவை முற்றாக மூடியிருக்கும். இவை மசசைக் குழியுடன பன்முதலையும் உடையன. பற்கள் தட்டச் செதில்களின் திரிபே.

**தட்டு,** (plate). ஒரு தட்டையான, அகலமான, தட்டுப்போன்றவமைப்பு அல்லது பரப்பு ; ஒரு தகடு, செதில், வட்டத் தட்டு முதலியன.

**தட்டைப்புழு,** (flat worm). (1) பிளாற்றிஹெல்மின்தெஸ் வருணத்தைச் சேர்ந்த எதுமொரு புழு. (2) குறுகிய கருத்தின்படி பார்க்கப்புகின் எதுமொரு பிளனேரியனை இப்பதம் குறிக்கும்.

**தடுப்புப்பார்த் தொடர்,** (barrier reef). ஒரு முருகைப்பாறைத் தொடரானது கடற்கரைக் கோட்டுக்குச் சமாந்தரமாய் விருத்தியடைந்து தனக்கும் தரைக்குமிடையே ஒரு கடனீரேரியைக் கொண்டிருக்குமாயின அதைத தடுப்புப் பாாத தொடர் எனலாம். அஃதை அணிகரைப் பார்த் தொடருக்கும் முருகைக்கற்றீவுக்கும் இடைப்பட்ட நிலையானதெனக் கருதலாம்.

**தண்டடி,** (peduncle). (1) மூளையின் வெவ்வேறு பாகங்களையும இணைக்கின்ற, வெண்ணூராலான ஒரு பட்டி. (2) கிறிஞெயிட்டுக்கள், பிருக்கியோப் பொட்டுக்கள், பாணக்கிள்கள் எனபன வற்றில் உளள காம்பு. (3) ஆர்த்திரோப் பொட்டுக்களின் மார்புக்கும் வயிறுக்கும் இடையே உள்ள தொடுப்பு. (4) ஓரிட வாழ்வுளள புரோறசோவாவிற காணப்படும் காம்பு.

**தயலின்,** (ptyalin). மாப்பொருளைச் சமிபாடடையச் செய்கின்ற, உமிழ்நீரிலுள்ள நொதியம். உமிழ்நீர் அமைலேசு.

**தயற்றேசு,** (diastase). முக்கியமாக மாபபொருளைத தாக்கி அதை வெல்லமாக மாறறும் ஒரு நொதியம்.

**தலை,** (head). வாய், முக்கிய புலனங்கங்கள் (கண்கள், செவிகள், மூக்கு) தலையோட்டாலோ மண்டையோட்டாலோ மூடப்பட்டிருக்கும் மூளை, ஆகியவற்றைக் கொண்ட, மனிதவுடலின மேற்பிரிவு. விலங்குகளின் உடலில இதையொத்த முனபக்கப் பிரிவையும் தலையெனலாம்.

**தலைக்காலி,** (cephalopod). தலைப் பிரதேசத்தில் தசைப்பிடிப்பான உறிஞ்சிகளையுடைய கைகளைக் கொண்டுள்ள கடல்வாழ் மொலஸ்காப் பிராணி. உ—ம்.,கணவாய், ஒக்றரோப்பஸ்.

**தலைநெஞ்சு,** (cephalothorax). அறக்னிடாவிலும், குறுஸ்தாசெயாவிலும், தலையும் மார்பும் சேர்ந்துண்டான உடற் பிரதேசம்.

**தலையாகுசெயல்,** (cephalisation). விலங்கு விருத்தியில முனபக்கத்தின வியத்தமும் முக்கியத்துவமும் மிகுதல்.

**தலையுள்ள,** (capitate). விரிந்த நுனியை உடைய. உ—ம்., தலையுளள உணர்கொம்பு.

**தலையோடு,** (skull). முள்ளந்தண்டு விலங்கில, மூளைப்பெட்டி, புலனுறைகள் எனபவற்றுடன் தாடைகள், பூவிறகள முதலியனவும் சேர்ந்ததே தலையோடாகும்.

**தலைவாயில்,** (vestibule). (1) பிறி தொரு குழிக்குள் அல்லது பாதையுள் இட்டுச் செல்லும் ஒரு குழி. உ–ம்., செவிச்சிக்கல் வழியின் குழி. (2) சிறு நீர்வழித்துவாரத்தை உடைய சிறுபிற் சொண்டுகளிடையே காணப்படும் வெளி. (3) பெருநாடிவில்லின் துவாரத்திற்கு நேர்கீழே உள்ள இதயவறைப் பகுதி. (4) குரல் வளைக்கு இட்டுச் செல்லும் குழி. (5) மூக்குக் குழி. (6) பறவை களின் கழியறையின் பிற்பக்கவறை. (7) அனேகமான இன்பூசோறியன்க ளில், வாய்க்கு இட்டுச் செல்லும் சிறிய குழாய்வடிவ அல்லது தவாளிப்புடைய பள்ளம். (˘) எனடோப்புறெக்ரன் பொலிசோவனகளில் பரிசக் கொம்பு களின் வட்டத்தினுள் அமைந்த இடம்.

**தவாளிப்பு,** (groove). ஒரு கால்வாய், சால் அல்லது பள்ளம். உ-ம்., சிரசுத்த வாளிப்பு, பழுவுத் தவாளிப்பு, பார்வைத் தவாளிப்பு, ஆதிமுள்ளந்தண்டுத் தவா ளிப்பு.

**தழுவிகள்,** (claspers). பூச்சிகளில், ஒரு வெளிச்சோடிச் சனனி முளைகள். சில ஆண் எலாஸ்மோபிருங்கிகளில் இடுப்புச் செட்டையின் உட்பக்கமாகவுள்ள ஒடுங்கிய சோணைகள்; இவை புணர்ச் சியின்போது பயன்படுத்தப்படுகின்றன. பொதுப்படக் கூறின் இலிங்கங்களால் புணர்ச்சியின்போது ஒன்றையொன்று தழுவ உதவும் எந்த அங்கமும் தழுவி எனப்படும்.

**தற்பிரிவு,** (autotomy). உடலின் ஒரு பகுதி (உ-ம். அவயவம், வால்) இச்சை வழிப் பிரிதல். இது சில புழுக்கள், ஆத் திரோப்பொட்டுக்கள், பல்லிவகைகள் ஆகியவற்றில் நிகழும் தற்றுண்டிப்பு.

**தற்போசணையுள்ள,** (autotrophic). சுயா தீனமாக உணவைப் பெறுகின்ற: காபனீ ரொட்சைட்டு, அசேதனைநறுப்புச் சேர் வைகள் என்பவற்றிலிருந்து காபோ வைதரேற்றுக்களையும் புரதத்தையும் தயாரிக்கின்ற தாவரங்களைக் குறிக்கும். பிறபோசணையுள்ள, என்பதற்கு எதி ரானது.

**தற்றளர்ச்சி,** (autolysis). ஒரு கலத் தின் அல்லது ஓர் அங்கத்தின் கலவுள் ளடக்கப் பிரிகை. இஃது அக்கலங்களி லிருந்து சுரக்கப்படும் நொதியங்களால் நிகழும். தற்சமிகரிப்பு.

**தன்மயமாக்கல்,** (assimilation). (1) உணவுத்திரவியம் முதலுருவாக மாற்றமடைதல். இது உட்செலுத்தப் படுதல், சமிக்கப்படுதல், உறிஞ்சப்படுதல் ஆகியவற்றை அடுத்து நிகழ்வது.

**தன்மூர்த்தம்,** (autosome). இலிங்க நிறமூர்த்தம் தவிர்ந்த எந்தவொரு நிறமூர்த்தமும் தன்மூர்த்தம் எனப் படும். ஒரு மாதிரி நிறமூர்த்தம்.

**தன்னிச்சைச் சந்ததி,** (spontaneous generation). சடப்பிறப்பு பார்க்கவும்.

**தன்னியக்கமுள்ள,** (automatic). சுயா தீன; தன்னைத்தானே சீராக்கப்படுத்திக் கொள்கின்ற; தன்னிச்சையான.

**தனிப்படுத்துகை,** (segregation). ஒடுக் கற்பிரிவின்போது பெற்றோர் நிற மூர்த்தங்கள் விலகிச் சென்று அதனால் பிதாமதாவியல்புகள் கூட்டப்பிரிவடை தல்; பரம்பரையலகுகள் விலகிச் செல் லுதல்.

**தனிமையாக்கல்,** (isolation). பிற வற்றிலிருந்து பிரித்தல். வெளிப்பிரிப்பு, இடவிளக்கப்பிரிப்பு, சூழலியற் பிரிப்பு, தோற்றவியற் பிரிப்பு, உடற்றொழிலியற் பிரிப்பு, பிறப்புர்மையியற் பிரிப்பு என்பனவோ இனனபிறவோ தடைக ளாய் அமைந்த காரணத்தினால் விருத் தியடையும் கூட்டங்களிடையே புணர்ச்சி தடைப்படுதல்.

**தாக்கவூக்கம்,** (catalysis). ஊக்கி இருத் தலினால் ஒருதாக்கம் வேகவளர்ச்சி யடைதல் அல்லது வேகத்தேயவடைதல் தாக்கவூக்கம் எனப்படும்.

**தாடை,** (jaw). (1) முள்ளந்தண்டு விலங்குகளிற் காணப்படும் ஓர் அமைப்பு. இது என்பாலோ கசியிழையத்தினாலோ ஆகி, நிரவாணமாயோ கொம்பினுள்

உறையிடப்பட்டோ அல்லது பற்களையோ கொம்புத் தகடுகளையோ உடையதாய்க் காணப்பட்டு, வாயின் ஒரு பகுதியாய் அமைந்து, அது திறப்பதற்கோ மூடுவதற்கோ உதவியாய உள்ள ஓர் அடைப்பு பாகும். (2) முள்ளந்தண்டிலி விலங்குகளிலும் இது போன்றவோர் அமைப்பு.

**தாடையடிமுளை,** (gnathobase). ஓர் ஆர்த்திரோப்பொட்டின் தூக்கத்தின் அண்மைப் பகுதியிலுள்ள ஒரு மூட்டு அல்லது முளை. இது வாய்ப் பகுதியாய்ப் பயன்பட்டு உணவைத் தூக்கிச் செல்வதற்கோ அரைப்பதற்கோ உதவியாய் உளது.

**தாடையென்பு,** (jaw bone). இது முள்ளந்தண்டு விலங்குத் தாடையின், சிறப்பாகக் கீழ்த்தாடையின், என்புகளுள் ஒன்று.

**தாய்க்கற்றகடு,** (madreporite). எக்கினோடேர்மாற்றுவில் தவாளிப்புடைய மேற்பரப்பையுடைய சுண்ணும்பாலான ஓர் தட்டு. இது அனேக நுண்ணிய சில கால்வாய்களால் துளையிடப்பட்டுக் குழாய்க்காலிடை நிலையில காணப்படும். இதனூடாக அச்சுக்குடாவிற்கு நீர் செல்கின்றது.

**தாயம்,** (matrix). கலங்கள் பதிந்து காணப்படுகின்ற கலவிடைப் பதார்த்தம்; உதாரணமாகக் கசியிழையத்தில் அல்லது தொடுப்பிழையத்தில் காணப்படுவது. என்புத்தாயமும் கலவிடைப் பதார்த்தமாகும். இதில் என்பு உப்புக்கள் படிதலடைந்துள்ளன.

**தாவினின் கோட்பாடு,** (Darwinism). எச்சங்களில் சிறிதுசிறிது மாற்றங்கள் ஏற்படும் என்றும் இவ்வெச்சங்களில் பிழைப்பதற்கு மிகச் சிறந்த முறையில இயைபாக்கப்பட்டவையே தப்பிவாழும் என்றும் கூறுகின்ற, இயற்கைத் தேர்வினலேயே இனங்கள் உறபத்தியாகின்றன என்ற கொள்கை.

**திசைகொள் நடுமடிப்புக்கள்,** (directive mesenteries). இவை, சோயந்தாறியாவில், முதுகுப்புறத்திலும் வயிற்றுப்புறத்திலும் உள்ள சோடி நடுமடிப்புக்கள்.

**திரட்டு,** (ganglion). நரம்புநார்கட்குப் பிறப்பிடமாயமைந்துள்ளதும் நரம்புக் கலவுடல்களாலானதுமான ஒரு திணிவு. ஒரு நரம்பு மையம்.

**திரவக் கலன்றொகுதி,** (water vascular system). (1) எக்கினோடேர்மாற்றுவில் உடல் முழுவதும் நீர்ப பாய்பொருளைச் சுற்றோட்டத்தில கொண்டுள்ள, கலனகளாலாய தொகுதி. (2) பிளாற்றிஹெலமின்தெஸின் கழிவுத்தொகுதியையும் குறிக்கும்.

**திரளை,** (bolus). உணவுருண்டை அல்லது மருநதுருண்டை.

**திரிப்சின்,** (trypsin). காரக்கரைசலில் உளள புரதங்களைக் குறித்த சில பெப்ரைட்டு இணைப்புக்களில் பிளந்து, பிரதானமாகப் பல பெப்ரைட்டுக்களை ஆக்கவல்ல நொதியம். இது முள்ளந்தண்டு விலங்குகளின சதையியினல் சுரக்கப்படும். திரிபசின் போன்ற நொதியஙகள் அனேகமான விலங்குகளின் சமிபாட்டுச் சாறுகளிலும், பலவகை இழையங்களிலே கலத்தகத்தும் காணப்படுகின்றன.

**திருவென்பு,** (sacrum). முள்ளந்தண்டின் அநதத்திலுள்ள என்பு ; இது வழக்கமாக அனேக இணைந்த முள்ளந்தண்டென்புகளைக் கொண்டதாயிருக்கும். இடுபபுவளையம் இணைந்து காணப்படுகினற முள்ளந்தணடென்பு அல்லது முள்ளந்தண்டென்புகள்.

**திரை,** (velum). திரைக்குச் சமனன ஒரு மென்சவ்வு அல்லது அமைப்பு ; சில ஐதரோமெதுசாககளிலும் சில சொறிமுட்டைகளிலும் மணியின் விளிம்பிலிருந்து உட்பக்கமாகத் தள்ளிக் கொண்டிருக்கும் கஙகணமென்சவ்வு. லானசிலெற்றிலே வாய்க் குழியுடன் தொடர்புடைய மெனசவ்வு. குறெக்கொடீலியாவில் வாயிலிருந்து புனனுருத்துவாரங்களை மூடுவதற்கான மடிப்புப் போன்ற அமைப்பு. சில சீலியாற்றுக்களின் வாய்க்குழியை அருகிட்டிருக்கும் மென்சவ்வு போன்ற அமைப்பு. வெலிஜெர் குடம்பியின் பிசிர் கொண்ட நீந்தும் அங்கம்.

**தின்கலக்குழியம்,** (phagocyte). பல் கலவிலங்குகளின் உடலிற் காணப்படும் ஒரு கலம். இது அன்னிய துணிக்கைகளைக் கைப்பற்றக் கூடியது. சிலதின்கலங்கள் அமீபாவைப் போன்று இடம்பெயர (பொய்ப்பாதம்கொண்டு) வல்லன. சில தாம்வாழும் இழையங்களில் அசைந்து செல்கின்றன. மற்றைய தின்குழியங்கள், திட்டமான இழையத்தில் வாழ்ந்து தமது கட்டற்ற முனையில் மட்டும் அமீபாப்போலிமுனைகளை உடையவையாய்க் காணப்படும்.

**தீனோபோர்,** (ctenophore). (1) தெனோபொறுப் பிராணிகளுள் ஒன்று. (1) தெனோபொருவில் சீப்புருப்போன்ற நீந்தும் தடடுக்களைத் தாங்கியுள்ள நெடுங் கோட்டுப் பட்டிகைகளுள் ஒன்று.

**துடுப்புக்கசியிழையம்,** (arytaenoid cartilage). முளளந்தண்டு விலங்குகளிலே, குரல்வளைச் சட்டவமைப்பின் பகுதியாக அமைந்துளள ஒரு சோடி முன்புற, பக்கக் கசியிழையங்களுள் ஒன்று.

**துண்டம்,** (segment). சூல் ஒன்று பிளவுபடுதலினால் உண்டான ஒரு பிரிவு. ஒரு விலங்கினது அல்லது மூட்டுள்ள தூக்கத்தின் பகுதி ; அனுபாதது.

**துண்டுதுண்டாதல்,** (fragmentation) (1) சிறு சிறு பகுதிகளாய்ப் பிரிதல். (2) எளியபிளவினால் ஏற்படும் கருப் பிரிவு. (3) இழையுருவில் பிரிவு.

**துண்டுபடல்,** (segmentation). துண்டங்களாகவோ பகுதிகளாகவோ பிரிதல் அல்லது பிளவுபடல்.

**துண்டுபடல்,** (cleavage). கருக் கட்டிய முட்டையைப் பல்கலமுடைய முளையமாக மாற்றமடையச் செய்யும் தொடர்ச்சியான இழையவுருப்பிரிவுகள்.

**துணைச்சுரப்பிகள்,** (accessory glands.) உற்பத்தியங்கங்களோடு தொடர்பு பூண்டவையாய்ப் பல்வேறுபட்ட அமைப்பையும் தொழிலையும் கொண்ட சுரப்பிகள்.

**துணைநரம்பு,** (accessory nerve). நாற்பாதமுளி முள்ளந்தண்டு விலங்குகளின் பதினோராவது மண்டையோட்டு நரம்பு. உண்மையிலேயே இஃது அலையுநரம்பின் ஒரு கிளையாகும். முலையூட்டிகளில் மட்டுமே தனகு தனித்துக் காணப்படும்.

**துணையான,** (secondary). பின்னர் எழுநத; துணை முக்கியத்துவம் வாய்ந்த; பூச்சிகளின் பின செட்டை ; பறவைகளில் முன்னங்கையோடு தொடுகையுறறிருக்கும் காம்பிறக்கைகளைக் குறிக்கும்.

**துந்தம் (அசைபோடும் விலங்குகளில்)** [psalterium (in ruminants)]. அசைபோடும் முலையூட்டிகளில உள்ள மூன்றும் இரைப்பை.

**தும்பிக்கை,** (proboscis). முன்பக்கத்தே அமைந்த துதிக்கைபோன்ற முளை ; தூர்பெல்லாறியாவிலும் பொலிகீற்றுவிலும் காணப்படும் முனதள்ளத்தக்க தொண்டை ; நெமொர்றினியாவில், வாய்க்கு மேலே உள்ள ஓர் நீளமான, முன்தள்ளததக்க, தசைப்பற்றுள்ள அங்கம், சில இனசெக்ற்று விலங்குகளில காணப்படும் உறிஞ்சக்கூடிய வாய்ப்பகுதிகள் ; ஹெமிகோர்டாவில், வாய்க்கு முன்னால் உள்ள குழிவான, குணடாந்தடிவடிவமான அல்லது கேடயவடிவமான அமைப்பு; புறொபோஸ்கிடெயாவில், நீளமான, வளையத்தக்க, பற்றுகின்ற மூக்கு.

**துரம்பின்,** (thrombin). இது, பைபிரிணக்கினைப் பைபிரினாக மாற்றுகின்ற பைபிரின் நொதி.

**துவிபிறப்பிற்குரிய,** (digenetic). துவிபிறப்புச் சார்நத ; விருந்துவழங்கிப் பரிவிருத்தி தேவைப்பாடுடைய. இது சில ஒட்டுண்ணிகளைக் குறிக்கும்.

**தூக்கம்,** (appendage). முண்டத்தின் ஓர் எறியம். பொலிகீற்றுவிலுள்ள பரபாதமுளைகளும் பரிசக் கொம்புகளும், ஆப்போடாவின் உணர் பரிசக் கொம்புகள், மீனின் செட்டைகள், தலை முள்ளந்தண்டு விலங்குகளின் அவயவங்கள்

என்பவை எடுத்துக்காட்டுகளாகும். ஆர்த்திரேப்போடாவில் பெரும்பாலும் பிரத்தியேகமாக, உணர்திறன, மெல்லுதல், அல்லது இடம் பெயர்தல் ஆகிய தொழில்களையுடையனவாய் அனுபாத்து முறை ஒழுங்குபடுத்தப்பட்டு உள்ள மூட்டுடைச் சோடி அமைப்புககளுள் ஒன்று தூக்கம் எனறறியப்படும். ஆனல் இன்செக்ற்றுவின இறக்கைகளும தூககஙகள் என்றறியப்படுகின்றன.

**தூக்கவென்புக்கூடு,** (appendicular skeleton). அவயவங்களின வன்கூடு.

**தூண்டற்பேறு,** (response). ஓர் அங்கியில் அல்லது அதன பகுதியில் உண்டாகும் மாற்றம் ; இது வழக்கமாக, இயைபாக்கத்திற்குரியதாய் ஒரு தூணடலினுல் உண்டானதாய்க் காணப்படும்.

**தூண்டி,** (stimulus). ஓர் உயிருள்ள அங்கியிலோ அல்லது அதன யாதுமோர் பகுதியிலோ உயிர்ப்பான தூணடற்பேறையோ அல்லது எதிர்த்தாக்கத்தையோ உண்டாக்கவல்ல ஒரு கருவி. சிறப்பாக, ஒரு நரம்பு நாரில் நரம்புக் கணத்தாககமொன்றைப் பரப்பவல்ல ஒரு கருவி.

**தூவிகள்,** (down feathers). மென்மையான்தண்டு, இறகுப்பரப்பு ஆகியவற்றினை உடையதும் சிறுகொளுக்கிகள அற்றதுமான இறக்கைகள். சிலவற்றில் தணடு அறவே இல்லாதிருக்கும். இவை இறக்கையொழுங்கில் மிக அடியில் உள்ள இறக்கைகளாகும். இவை சிற்றிறகுகள் எனறும் அறியப்படும்.

**தெக்கிரின்,** (dextrin). மாப்பொருள் குளுக்கோசுவாக நீர்ப்பகுப்படையும் பொழுது ஓர் இடைநிலை விளைவாகத் தோன்றும் பல்சக்கரைட்டுக் காபோவைதரேற்று.

**தெக்குரோசு,** (dextrose). அனேகமான தாவரங்களிலும் விலங்கு அங்கிகளிலும் காணப்படுகின்ற ஒரு பளிங்குருவ, வலஞ்சுழலுகின்ற வெல்லம். $C_6H_{12}O_6$. இது முந்திரிகை வெல்லம், டி–குளுக்கோசு, அல்லது சாதாரணமாக குளுக்கோசு என்றும் அழைக்கப்படுகினறது.

**தெறிப்புவில்,** (reflex arc). இது நரம்புத் தொகுதியின தொழிற்பாடுடைய ஓரலகு. இது நரம்பு மையத்திறகு உணாசசிக் கணத்தாக்கஙகளைச் செலுத்துதற்கான உட்காவு நரம்புக்கலமொன்றையும், சுற்றயல் விளைவுகாட்டும் அங்கமொன்றிற்கு (உ–ம., தசை) இயக்கக் கணத்தாக்கங்கள் செல்லுவதற்கான வெளிககாவு நரம்புக் கலமொனறையும் உடையதாயிருககும்.

**தெறிவினை,** (reflex action). தூண்டலுக்கு இச்சையினபாற்படாத அதாவது தானுகவே நிகழும் தூண்டற்பேறு.

**தைரொட்சின்,** (thyroxine). கேடயப்போலிச சுரப்பியிலிருநது பிரித்தெடுக்கப்பட்ட ஒரு சேர்வை. இதன இயல்புகள் அயோடொத்தைரேகுளொபியூலினதை ஒத்திருககும் ; $C_{15}H_{11}O_4NI_4$

**தொகுதி,** (system). (1) ஒத்த இழையங்களாலான பகுதிகளையோ அமைப்புக்களையோ கொண்ட ஒரு கூட்டம். உ-ம்., எனபுத்தொகுதி. (2) சில குறிப்பிட்ட தொழிற்பாட்டில் இசைவுபட்டுக் காணப்படும் அங்கஙகளின் கூட்டம். உ-ம்., சமிபாட்டுத் தொகுதி. (3) உறெகோர் டாறறுவில் ஒரு பொதுக்கழியறையைக் கொண்ட தனியன்களாலான ஒரு சமுதாயம். உ-ம்., பொத்திறில்லிடே. (4) ஒரு பாகுபாட்டுமுறை அல்லது திட்டம். உ-ம்., இலீனியன் தொகுதி. (5) விலங்கு இராச்சியததையோ தாவர இராச்சியததையோ அல்லது இவற்றிலொன்றின் ஒரு பகுதியைப் பற்றியோ உள்ள முறையான கட்டுரை.

**தொகுதியியல்,** (systematics). பாகுபாட்டைப்பற்றியும் பெயரீடுபற்றியும் எடுத்தாளுவதாய் உள்ள, உயிரியலின் பகுதி.

**தொகுதிவில், (systemic arch).** நாற்பாதமுளி முள்ளந்தண்டுவிலங்கின் முளையத்தின் நாலாம் பெருநாடிவில் ; இது நிறையுடலியின் தலைதவிர உடலுக்குப் பிரதான குருதி வழங்கியாக உளளது. அமபீபியாவிலும் நகருயிர்களிலும், நிறையுடலியில், வலது இடது விற்கள் இரண்டுமே நிலைத்துக் காணப்படும். பறவைகளில் வலதுவில் மட்டுமே உளது. மூலையூட்டிகளில் இடதுவில் மட்டுமே (பெருநாடி) உளது.

**தொட்சினெதிரிகள், ( antitoxins ).** இவை அங்கியினுல் உண்டாக்கப்படும பதார்த்தங்களாகும். தொட்சினகளுடன சேர்ந்து அவற்றின் நச்சுத்தன்மையை நீக்க வலலன.

**தொட்டுணரி, (vibrissa).** (1) விலங்குகளின் மூக்கில அல்லது முகத்தில் வளரும் ஒரு மயிர். உ-ம்., பூனேயின் மீசை. இது தொட்டுணர் அங்கமாக அடிக்கடி பயன்படும். (2) அலகின் அல்லது உருண்டைக் கண்ணின அடியில் உள்ள ஓர் இறக்கை. (3) டிப்டெருவில், வாயின்மேற்கோணஙகட்கு அண்மையில் உள்ள சோடிச் சிலிர் முட்களுள் ஒன்று.

**தொடரலை மென்சவ்வு, (undulating membrane).** புரோற்ரெசோவாவில், புறமுதலுருவின் ஒரு விரிப்புப் போன்ற நீட்சி. இது, அலை அசைவுகளை ஆக்கும். உ-ம்., சில மஸ்ரிகோபோறுவும், சீலியோபோறுவும். இதை அதிர்வு மென்சவ்வென்றும் அழைப்பதுணடு.

**தொடுப்பிழையம், (connective tissue).** பொறிமுறைத் தொழிற்பாடுகளை நிறைவேற்றுபவையாய் அமைந்துள்ள விலங்கிழையங்களாலான ஒரு தொகுதி. இது இடைத்தோற்படையிலிருந்து விருத்தியடைந்து உயிரற்ற கலவிடைத்தாயத்தைப் பெருந்தொகையில் கொண்டிருக்கும். தாயத்தில் வழக்கமாக நார்கள் காணப்படும். உ-ம்., என்பு, கசியிழையம், சிற்றிடவிழையம் என்பன.

**தொடுப்பு, (connective).** இரண்டு திரட்டுக்களிடையே உள்ள, நரம்பிழையததாலான தொடுப்புப் பட்டை.

**தொடுமுளை, (barbel).** இது பலவகை மீன்களின் தலையிலிருந்து கிளம்புகின்ற தொட்டுணர்முளை.

**தொடை, (femur).** பூச்சி, சிலந்தி ஆகியவற்றின் கால்களில் அண்மை நுனியிலிருந்து எண்ணுகையில மூன்றுவதாக அமைந்துள்ள மூட்டு.

**தொடைச் சந்துக்கான்மூட்டு, (meropodite).** (1) குறுஸ்ரசெயனகளின் நெஞ்சறைத் தூக்கத்தின் நானகாம் துணடம். (2) சிலநதிகளின் தொடை.

**தொடையெலும்பு, (femur).** தொடையில் காணப்படும் எனபு. முள்ளந்தண்டு விலங்குகளின் பினனவயவத்தின் அண்மையென்பு.

**தொண்டை, (pharynx).** முள்ளந்தண்டு விலங்குகளின் உணவுக்கால்வாயில் வாய்க்குழிக்கும் களத்துக்கும் இடையே உள்ள பகுதி. இது உணவு செல்வதற்குப் பாதையாகவும் சுவாசத்தொழில் இயற்றுவதற்கு உதவியாயும் அமைந்துள்ளது. முள்ளந்தண்டில்லா விலங்குகளின் உணவுக்கால்வாயில் வாய்க்குழியை அடுத்துப் பினனுல் உள்ள பகுதி. இது வழக்கமாய்த் தசைப்பற்றுடைய சுவரையுடையதாய் இருக்கும்.

**தொண்டைக்கீழ், (hypopharynx).** பூச்சிகளில, வாயின் தளத்திலிருநது எழுகின்ற நடுக்கோட்டுக்குரிய நாப்போன்றவோர் அமைப்பு.

**தொண்டைப்பூவுக்குரிய, (pharyngobranchial).** தொண்டைக்கும் பூக்களுக்கும் உரிய ; மீன்களின் சிலவென்புகளைக் குறிக்கும்.

**தொண்டை முளை, (tonsil).** தொண்டையிலோ அல்லது நாவின் அடிக்கு அண்மையிலோ உள்ள நிணநீருருவிழையத்திரட்சிகளுள் ஒன்று.

**தொல்லுயிரியல், (Palaeontology).** கடந்தகாலச் சேதனவுறுப்புயிா பறறிய அறிவியல். இவ்வியல் உயிாச் சுவடுகளையும் உயிர்ச்சுவட்டடையாளஙகளையும் தனது அடிப்படையாகக் கொண்டது.

**தொழில், (function).** ஒரு கலத்தினதோ இழையத்தினதோ அங்கத்தினதோ சாதாரணமான இன்றியமையாத செயல் தொழில் எனப்படும.

**தொற்றுதல், (infection).** (1) உடலிழையத்திறகு உயிருள்ள நுண்ணங்கிகள் படையெடுத்தலும் இதன்விளைவாய் அதனுள் நோய்த் தனமைய மாறறம் உண்டாதலும். (2) உயிருள்ள நுண்ணங்கிகள் உடலினுட் படையெடுப்பதனால் ஏறபடும் நோயுறற நிலை. (3) தொற்றும் நுண்ணங்கி.

**தோட்பட்டை, (scapula).** தோட்பட்டை எலுமபு ; தோட்பட்டை எலும்பை ஒதத பல்வேறுபட்ட அமைப்புக்களையும குறிக்கும். உ-ம்., சில பூச்சிகளில உள்ள தெகியுலா, தோற் செட்டை, இடைமார்புப்புடைப்பட்டை, முன்னங்கால் உச்சிமுளை முதலியன; கிறிஞெயிடெயாவில புயங்கட்கு மூட்டுகுழியுடைய கதிரின் அணமைத்தட்டு.

**தோட்பட்டை முளை, (acromion process).** புயத்தினுச்சிக்கு மேலே சிறிது பின பக்கமாகத் தொட்டறியக்கூடிய தோட்பட்டையின் பகுதி.

**தோல், (skin).** ஓர் விலஙகின் தசைத்தொகுதிக்குப் புறத்தே, உடற்சுவருககுப் பாதுகாப்பளிப்பனவையாய அமைந்துள்ள இழையப்படைகள்.

**தோல்கழற்றல், (ecdysis).** புறத்தோறபடையை அல்லது புறத்தோலினுலான ஓர் அமைப்பைக கழறறல். உ-ம்., ஒபீடியா, பல ஆர்த்திரேப்பொட்டுப் பிராணிகள் ஆகியன.

**தோலயற் கொழுப்பு, (blubber).** நீர் வாழ் முலையூட்டிகளில் (திமிஙகிலங்கள, கடற்பனறிகள முதலியன) உடடோலுக்குக் கீழே உள்ள தடித்த கொழுப்பிழையப் படையே தோலயற் கொழுபபெனப் படும. இது உடலை வெப்பம் இழக்காவணணம பாதுகாககினறது.

**தோலுரு, (choroid).** (1) அதிக கலனுடைய மெனமையான மென்சவ்வுகளைக் குறிக்கும. (2) விழித்திரைக்கும் வலலுறைககும் இடையே உள்ள கணணின் படை.

**தோலுருப் பின்னல், (choroid plexus).** மூளையின் கரையைச் சிறசில இடஙகளில் ஆக்குகின்றதும குருதிக்கலனகளைக் கற்றைகற்றையாகக் கொணடுள்ளதுமான நரம்புப பொருளற்ற மேலணியின, மூளையறையினுட செலலும் எண்ணிறநத எறியங்கள. இவை மூளைய முண்ணாண் பாய் பொருளைச் சுரக்கும. மனிதனின் மூளையறைகள நானகினதும் கூரைகளில ஒவவொரு பின்னல உளது.

**தோற்செட்டை, (patagium).** வெளவால்கள், பறக்கும் அணிலகள், நரிகள் ஆகியவறறின முன்னவயவங்கட்கும் பின்னவயவஙகட்கும இடையே உளள மென்சவவாலான விரிப்பு ; பலலியினஙகளிலும் பறவைகளின சிறகுகளிலும் உள்ள இதையொத்த விரிபபு ; சில லெப்பிடொபரெருவின முதன்மார் பின் முதுகுபபுற முளை ; டிப்ரெருவின் முற்பக்க முதன் முதுகு.

**தோற்பை, [utriculus (bladder)].** (1) ஒரு வெற்றிடததைச் சூழவுள்ள முதலுரு. (2) செவிசசிக்கல வழியின மெனசவ்வுப்பை. (3) வாயுவையோ பாயபொருளையோ உடைய யாதேனுமொரு மென்றோறபை ; சிறபபாக முலையூட்டிகளின சிறுநீர்பபை.

## ந

**நடக்குங் கால்கள், (pereiopods).** உயர் குறுஸ்ராசெயாவகைகளில் நடக்குங் கால்களாகத் திரிபடைந்துள்ள மார்புத் தூக்கங்கள்.

**நடு உணவுச் சுவடு (நடுக்குடல்), [mesenteron (midgut)].** விலங்கினது உணவுக் கால்வாயின ஒரு பகுதி. இப்பகுதியானது முளையத்தின் ஆதிக்கருக்குடலில இருந்து பெறப்பட்டது.

**நடுக்குடல், (midgut).** நடு உணவுச் சுவடு பார்க்க.

**நடுக்கோடு, (median).** (1) அசசுத் தளத்தில் உளள அல்லது அதிற் செல் லுகின்ற. (2) இடைப்பட்ட. (3) நடுப் பட்ட.

**நடுச்செவி (செவிப்பறைக் குழி), [middle ear (tympanic cavity)].** நாற் பாதமுனி முள்ளந்தண்டு விலங்கு களில (உரோடெலா, ஆபபோடா, பாம்பு கள் ஆகியவை தவிர்ப்பு) செவிப்பறைக் கும் செவியுறைக்கும் இடையே உள்ள குழி. இது ஒரு பூப்பிளவிலிருந்து (சுவாசத துவாரம்) பெறப்பட்டது. இது ஊதத்தேக்கியோவின் குழாய் மூலம் வாயோடு தொடர்பு பூண்டுளது. இது காற்றால் நிரம்பியுளது; செவிச்சிற்றெ ன்புகளால் குறுக்கிடப்பட்டுளது; அனேக மான முலையூட்டிகளில தலையோட்டின் என்பு எறியத்தினுள் (குமிழ் முனை ப்பு) உறையிடப்பட்டுளது.

**நடுநெய்யரியென்பு, (mesethmoid bone).** முள்ளந்தண்டு விலங்கின் தலையோட்டில் உள்ள ஒரு நடுககோட்டுக் கசியிழைய வென்பு. இது நெய்யரித்தட்டு என்பாத லினால் உண்டானது.

**நடுமடிப்பு, (mesentery).** (1) உடல கத்தை அதன் நிலையில் வைத்திருக்க உதவியாய் உள்ள ஓர் சுற்றுவிரிமடிப்பு. (2) சீலென்ரெறாற்றுக்களின் உடற் சுவரி லிருந்து உள்நோக்கி நீண்டிருக்கும் தசைப்பிடிப்பான ஓர் தடுப்பு.

**நடுமூளை, (midbrain).** முள்ளந் தண்டு விலங்குகளில், மூளையத்தின் இரண்டாம் அதாவது நடுவமைந்த மூளைப்புடகத்திலிருந்து உண்டான மூளைப் பகுதி. இது பார்வைச் சோணைகளையும் காலுருமூளைத் திணிவுகளையும் கொண்ட தாய்க் காணப்படும். இரண்டாவது, அதாவது நடுவமைந்த மூளைப்புடகத்தை யும், நடுமூளை எனலாம்.

**நரம்பிணைப்பு, (synapse).** ஒரு நரம் புக்கலமானது இன்னொரு நரம்புக் கலத்துடன் உட்காவு நரம்பு முனைகள் அல்லது வெளிககாவு நரம்பு முனைகளின் மூலமாக தொடுபட்டிருத்தல்; இரு நரம்புக்கலங்கட்கிடையே அண்மையில மைந்த பிரதேசம்.

**நரம்பிழையம், (nervous tissue).** நரம் பிழையத்தின் பிரதானபகுதியானது உறுத்துணர்ச்சி, கடத்துதிறன் ஆகிய இயல்புகளில உயர்வளவில் சிறப்படைந் துள்ள கலங்களைக் கொண்டதாய் இருக் கும். இக்கலங்கள் நரம்புக்கலங்கள் என்றழைககப்படும். எல்லா நரம்பி ழையங்களும் புறத்தோற்பட்டையின் இருந்தே உற்பத்தியாகும். இதற்குப் புறநடையாக எக்கினோடேர்ம்களின் நரம் புத் தொகுதியின் ஒரு பகுதி இடைத் தோற்படையில் இருந்து உற்பத்தி யாகும். முள்ளந்தண்டு விலங்கினதைப் போன்றுள்ள மிகச் சிக்கலான நரம்புத் தொகுதிகளில் நரம்புப் பசையிழையம் எனப்படும் ஆதாரவிழையமும் உண்டு. இதன் தோற்றுவாயும் பிரதானமாகப் புறத்தோற்படையே.

**நரம்பு, (nerve).** (1) மூளையை உடலின் மற்றைய எல்லாப் பாகங்களு டனும் தொடுக்கின்ற எண்ணற்ற நரை நிறமான நார்கொண்ட நாண்களுள் ஒன்று. (2) பூச்சியின் செட்டையிற் காண ப்படும் நாளம்.

**நரம்புக் கலம், (nerve cell).** நரம் பிழையத்தின் கலங்கள். இவை கணத்தாக்கங்களைக் கடத்துவதனாலேயே நரம்புத் தொகுதி தொழிற்படுகின்றது.

**நரம்புக் கால்வாய்,** (neural canal). முள்ளந்தண்டென்பின் மையத்தியினு லும் நரம்புவில்லினுலும் மூடப்பட்டுக் காணப்படும் வெளி. இதனூடாக முண் ணுண் செல்லும்.

**நரம்புச்சி,** (neural crest). நரம் புமடிப்பின் வெளிப்படைக்கும் நரம் புக் குழாய்க்கும் இடையே புறத் தோற்படையிலிருந்து உண்டான ஓர் இழையப்பட்டி. இரண்டு பட்டிகளும் பின்னர் இணைந்து அதன் பின் பிரிந்து சென்று, நீள்பக்க வரிசையில் அனுபாத் துமுறை ஒழுங்கில் திணிவுகளாகப் பிரி யும். இவற்றிலிருந்து முள்ளந்தண்டு நரம்புகளின் முதுகுப்பக்கவேர்களின் திரட்டுகளும், நரம்புறைக்கலங்கள், தோ லின் நிறப்பொருட்கலங்கள் ஆகியன வும், இடைக்கலவிழையத்தின் ஒரு பகு தியும் உண்டாகும்.

**நரம்புத் தட்டு,** (neural plate). (1) கெலோனியாவில், பரிசைமூடியின் பகுதியாய் அமைந்துள்ளவையும் நடுக் கோட்டு வரிசையில் அமைந்துள்ளவையு மான என்புத்தகடுகள். (2) மையவிழை யத்தட்டு. (3) நரம்பென்புமுளை.

**நரம்புத் தொகுதி,** (nervous system). தூண்டல்களை உடனே ஏற்பதற்கும், இத்தூண்டலினுல் நரம்புப்பதார்த்தத் தில் ஏற்பட்ட நரம்புக்கணத்தாக்க மெனும் விளைவை உடலின் மற்றைய பகுதிகட்கு விரைவிற் கடத்துவதற்கும் சிறப்படைந்து காணப்படும் ஒரு சேதன வுறுப்புத் தொகுதி. உடலின் பல்வேறு பாகங்களையும் சீராக்குவதும், இயைபு படுத்துவதுமே நரம்புத்தொகுதியின் தொழிலாகும். இது நரம்பியைபாக்கம் என்றறியப்படும்.

**நரம்புநாண்,** (nerve cord). துண்டத் திரட்டுக்கள் உடையதும், நெருங்கி இணைந்துள்ளதுமான வயிற்றுப்புற நீள்பக்கச் சோடி நரம்பு. நரம்பு நாண் உள்ளமை பல நீண்ட முள்ளந் தண்டில்லா விலங்குகளின் சிறப்பியல் பாகும். உதாரணம்—மண்புழுக்கள்.

**நரம்புநார்கள்,** (nervo fibres). நரம் பிற் காணப்படும் நூல்போன்ற அமைப் புக்கள்.

**நரம்புமுள்,** (neural spine). நரம்புக் கால்வாய்க்குமேலே, நரம்பென்பு முளை களின் இணைதலினுல் உண்டான, நடுக்கோட்டு முதுகுப்புற முள்ளந்தண்டு முள்.

**நரம்புவில்,** (neural arch). முள்ளந் தண்டு மையத்தியின் முதுகுப் புறமேற்பரப்பில் நரம்புத்தட்டுக்களா லும் நரம்பு முள்ளாலும் முண்ணுண் செல்வதற்கென ஆக்கப்பட்ட வில்.

**நலந்தட்டல்,** (castrate). விதைகளை இல்லாமற் செய்தல்; சனனிநீக்கம்; சனனிகள் விருத்தியடையாவண்ணம் தடுத்தல்.

**நலிவு,** (atrophy). சிதைவு—அதா வது நோய் ஏற்பட்ட காரணத்தால் பருமனிலோ சிக்கலிலோ தொழிலிலோ குறைந்துபோதல்.

**நறுக்கு பல்,** (carnassial). ஊனுண் ணும் விலங்குகளின் நான்காவது மேல் முன்கடைவாய்ப் பல்லும், முதலாவது கீழ் கடைவாய்ப்பல்லும் நறுக்கும் பற் களாகும். மேற்பல்லில் முதற் கூம் புருவும் கீழ்ப்பல்லில் அனுகூம்புருவும் தாழ்த்தப்பட்டுள்ளன.

**நா,** (tongue). (1) வாயின் தளத் தில், வழக்கமாக அசையக்கூடியதாயும் முன்தள்ளக்கூடியதாயும் உள்ள ஓர் அங்கம். (2) யாதுமோர் நாப்போன்ற அமைப்பு. உ–ம்., வறுகி, சிறு நா முத லியன. (3) சில பூச்சிகளிற் காணப்படு கின்ற தொண்டைகீழ்.

**நாடி,** (artery). இதயத்திலிருந்து உடலுக்குக் குருதியைக் கொண்டு செல் லும் கலன்றொகுதியின் கலன்களுள் ஒன்று.

**நாடிக்கான்,** (ductus arteriosus). சில முள்ளந்தண்டு விலங்குகளில், சுவாசப்பை நாடிகளின் உற்பத்தி இடத்திற்கு முதுகுப்புறமாய் ஆறுவது பூவிலலைக குறித்து திறகும் ஒரு சிறிய குருதிக கான. இது சுவாசப்பை வில் லோடு தொகுதி வில்லைத் தொடுககும். இது அம்னியோற்றுக் கானின் மூளை யச் சுற்றேட்டததில முககியத்துவம் வாய்ந்தது. உரேடலாக்களில தொழில புரிவது ; மற்றையவற்றில் பதாங கமாய் இருக்கும் அல்லது காணக் கிடையாது.

**நாடித் தொகுதி,** (arterial system). இதயத்திலிருந்து உடலுக்குக குருதி யைக் கொணடு செல்லும் கலன்றொகு திப் பகுதி.

**நாண்,** (chorda). முதுகு நாண். இதயத்தின் வாலவுகளோடு இணைக்கப் பட்டுள்ள சிரையுளள நாண்கள். நாண போன்ற யாதுமோர் அமைப்பு. ஒரு சிரை, நரம்பு அலலது இழை.

**நாணின் முன்புறமான,** (Prechordal). முதுகுநாணுககோ முண்ணுணுக்கோ முற்புறமான, தலையோட்டின் அடியின் பகுதியைக் குறிக்கும்.

**நாநாடி,** (lingual artery). உயர் கேடைய நாடிககும் மேற்றுடைய நாடிக் கும் இடையே வெளிச் சிரசு நாடியி லிருநது தோன்றி, நாவிறகு வழங்கும் நாடி. நாவினுள் அது தொடர்நது நாககீழ் நாடியாக நுனிவரை செல் லும.

**நார்,** (fibre). நரம்பு, தசை அல்லது தொடுப்பிழையம் என்பனவற்றின் ஒரு பட்டிகை.

**நார்க்கசியிழையம்,** (fibrocartilage). தொடுப்பிழையநார்களை ஒதத நார்களை முக்கியமாகத் தாயத்தில கொண் டுள்ள ஒருவகைக் கசியிழையம். இதை மூட்டுக்கள், குழியோரஙகள், எனபுத் தவாளிப்புக்கள் என்பவற்றில் காண லாம்.

**நாரியம்,** (ischium). (1) மீனி னஙகள் தவிர்ந்த ஏனைய முள்ளந் தண்டு விலஙகுகளின் இடுப்பு வளையத் தின் ஒவ்வொரு பகுதியிலும், வயிற் றுப்புறத்தே பின்பக்கமாய் அமைந் துள்ள என்பு. (2) ஓர் இடைச்சந்துக் கான் மூட்டு.

**நாரிழையம்,** (fibrous tissue). (1) முக் கியமாக வெண்நாராக் கற்றைகளை உடைய ஒரு வகைத் தொடுப்பிழையம். (2) பெருந் தொகையாய் நார்களை உடைய யாதுமோர் இழையம்.

**நாவின் கீழ் நரம்பு (12 ஆம் மண்டை நரம்பு),** (hypoglossal nerve). உயர் முள்ளந்தணடு விலஙகுகளின் 12 ஆம் மண்டை நரம்பு. இது நாவின் தசைகட்குச் செல்கின்றது.

**நாவுத் தொண்டை நரம்பு,** (glosso-pharyngeal). கீழ் வகை விலங்கு களில முதலாம் பூப்பிளவிற்குச் செல்லு கின்றதும், உயர்வகை விலஙகுகளில் நாவிற்கும் உணவுக் குழாய்க்கும் செல் லுகின்றதுமான, முள்ளந்தண்டு வில ங்குகளின் ஒன்பதாவது நரம்பு.

**நாவுருமுளை,** (glossa). (1) பூச்சி களின் பிற்சொண்டின் மத்தியிலே காணப்படும் நாககுப் போன்ற ஓர் எறி யம். (2) நாப்போன்ற யாதுமோர் அமைப்பு.

**நாளக்கான்,** (ductus venosus). முள் ளந்தண்டு விலங்குகளின் விருத்தியில் ஈரல உண்டாகும் பொழுது காணப்படும் இடதுபக்கக் கொப்பூழ் நடுமடிப்பு நாளம்.

**நாளக்குடா,** (sinus venosus). முளை யத்தினது குழாய் வடிவமான இதயத் தின் அறை ; தாழ்ந்த முள்ளந்தண்டு விலங்குகளில் இதையொத்ததாய் அமைந்து, நாளக் குருதியினைப் பெறு கின்றதும் இதயச் சோணைக்குட் திறக் கின்றதுமான ஓர் அமைப்பு ; இதயச் சோணையின் குழி.

**நாளக்குருதி,** (venous blood). உட லில் சுற்றி ஓடிய பின்னர் இதயத்தை வந்தடையும் குருதி.

**நாளங்கள்,** (veins). குருதியை இதயத் துக்குக் கொண்டு செல்லும் இழைத்த கான்கள்; பூச்சிகளின் செட்டையிற் காணப்படும் நரம்பர்கள்.

**நாளத் தொகுதி,** (venous system). உடலின் அங்கங்களிலிருந்து குரு தியை இதயத்திற்குக் கொண்டு செல்வ தற்கமைந்துள்ள, சுற்றோட்டத் தொகு தியின் பகுதி.

**நாற்புடையம்,** (quadrate). (1) பற வைகள், நகருயிர்கள், அமபீபியன்கள், மீன்கள் என்பனவற்றில் கீழத்தாடை யானது மூட்டுறும் என்பு. (2) கங்கண இணையத்திலிருந்து ஆரையென்பின் கழுத்துவரை நீண்டுள்ள இணையம். (3) ஈரற் சோணைகளுள் ஒன்று. (4) மூளை யத்தின் சோணை (praecuneus).

**நாற்புடையுகவென்பிணையம்,** (quadra-tojugal). நாற்புடையத்தையும் யுக வென்பையும் இணைத்திருக்கின்ற மென் சவ்வென்பு; நாற்புடை மேற்றுடைய வென்பிணையம்.

**நான்காவது மூளையறை,** (fourth ventricle). இதுமுள்ளந்தண்டு விலங்கு களில் உள்ள பின் மூளையறையாகும்.

**நிணநீர்,** (lymph). முள்ளந்தண்டு விலங் குகளின் இழைய இடைவெளிகளில் சுற் றியோடிக் கொண்டிருக்கின்ற ஒரு தெளி வான பாயபொருள். இது குழலுருவ நிணநீர்த் தொகுதி வாயிலாக நாளத் தொகுதியினூடு செல்கின்றது. இது குரு தியின் திரவ முதலுருவிலிருந்து பெறப் படுகிறது எனினும் அதிக நீர்த்தன்மை உடையதாயும் செங்குருதித்துணிக்கை கள் அற்றதாயும் காணப்படுகின்றது. உடலிலுள்ள இழையங்கட்கும் குருதிக் கும் இடையில் இது ஒரு இடைநடுப் பொருளாக நின்று உதவுகிறது.

**நிணநீர்க் கணு** (நிணநீர்ச் சுரப்பி) [lymph node (lymph gland)]. பிர தான நிணநீர்க்கான் செல்லும் வழியி லுள்ள ஓர் அங்கம்; நிணநீருரு விழையத்தை உடையது. அதிலுள்ள பெருந்தின்கலங்கள் நிண நீரிலுள்ள அன்னிய பொருட்களை அகற்றுகின்றன. இவ்வன்னிய பொருட்கள் பற்றீரியாக் களாக இருந்தால் நிணநீர்க் கணு அழற்சியடையும் ("வீங்கிய சுரப்பிகள்"). முலையூட்டிகளில் இது காணப்படும்; பறவைகளில் நன்கு விருத்தியடைய விலலை; மற்றைய முள்ளந்தண்டு விலங் குகளில் கிடையா.

**நிணநீர்க் கலன்,** (lymphatic vessel). நிணநீர் காவும் கலன்; குருதிக்கல னைப் போன்று மென்மையான அகமேலணியினால் படலிடப்பட்டிருக்கும் இது எப்பொழுதும் மெல்லிய சுவர்களை உடையதாய் இருக்கும். பெருங்கலன் களில் இச்சுவர்கள் மிருதுவான தசைகளையும் தொடுப்பிழையங்களையும் கொண்டிருக்கும். அனேகமானவற்றில் வால்வுகள் உண்டு. ஆகச் சிறியன நிண நீர் மயிர்த்துளைக் குழாய்களாகும். அனு ருவில் சில கலன்கள் மிகப்பெரும் நிணநீர் இடை வெளிகளாகப் பெருத் துக் காணப்படும்.

**நிணநீர்க்குழியம்,** (lymphocyte). குருதியிலும் நிணநீரிலும் காணப்படு கின்ற வெண்குருதிக் குழியங்களுள் (இதைப்பார்க்க) ஒன்று. நிணநீர்ச் சுரப் பிகளிலிருந்தும் பிற நிணநீருருவிழை யங்களிலிருந்தும் பெறப்படுகிறது. இவை ஒரு பெரிய, தனியனான, உருண் டையான ஆழமாகச் சாயமேறுகின்ற கருவை உடையன. சுற்றிலும் மெல்லிய குழிய முதலுருப்படையை உடையவை சிறிய நிணநீர்க் குழியங்கள் எனறறியப் படும்.

**நிணநீர்ச் சிறுகணு,** (lymph nodule). ஒரு சிறிய, தனி நிணநீர்ச் சுரப்பி.

**நிணநீர்த் தொகுதி,** (lymphatic system). முள்ளந்தண்டு விலங்குகளின் குருதிக்கலனமைப்பின் மிகை நிரப்பும் ஒரு குழலுருவான தொகுதி. இது இழைய இடைவெளிகளிலிருந்து பாயபொருளை, முக்கியமாக நிணநீரை, சேகரித்து நாளச் சுற்றோட்டத்திற்கு மீண்டும் வழங்குகின்றது. பொதுச் சுற்றோட்டத்திற்குக் கலங்களிலிருந்து கழிவுப்பொருட்களைக் கொணர்வதுமல்லாமல் சமிபாட்டு நிணநீர்க்கலன்கள் சிறுகுடலினுள்ள சமிபாடடைந்த விளை பொருட்களிலிருந்து போசாக்கை உறிஞ்சி இவ்வுணவுப்பொருட்களைக் குருதியருவிக்குக் கொண்டு வருகின்றன.

**நிணநீரிதயம்,** (lymph heart). நிணநீர்க்கலனின் சுருங்கத்தக்க ஓர் பகுதி. இது நிணநீர்ச் சுற்றோட்டத்திற்கு உதவுவதோடு நாளங்களுள் நிணநீரைத் திரும்பச் செலுத்துகிறது.

**நிபந்தனைத் தெறிவினை,** (conditioned reflex). ஒரு தூண்டலுக்கான தெறிப்புத் தூண்டற்பேறு. இது தனியனின் முன்னைய அனுபவத்தில் தங்கியுள்ளது.

**நிரப்பி,** (complement). (1) குருதி நீர்ப்பாயத்திலுள்ள ஒரு பதார்த்தம். இது வெப்பத்தால் அழிக்கப்படுகையில் அம்போசெப்ற்றருடன் தாக்கமுற்றுப் பகுப்பை உண்டாக்குகின்றது. (2) அலெக்ஸின். (3) ஒரு கருவிலிருந்து பெறப்பட்ட ஒன்று, இரண்டு அல்லது இதற்கும் அதிகமான ஜீனோம்களால் அல்லது நிறமூர்த்தக் கட்டங்களால் ஆன ஒரு கூட்டம்.

**நிருநாம நாடி,** (innominate artery). பெருநாடிவில்லிலிருந்து வெளிக்கிட்டு வலது பொதுச்சிரசு நாடியாகவும் வலது காறையெலும்புக்கீழ் நாடியாகவும் பிரிந்து செல்கின்ற ஒரு நாடி.

**நிருநாம நாளம்,** (innominate vein). ஒத்தபக்கத்து உட்கழுத்து நாளமும் காறையெலும்புக் கீழ் நாளமும் இணைந்து கழுத்தின் கீழ்ப்பாகத்தில் பக்கத்திற்கொன்றாய் அமைந்துள்ள இரு பெரு நாளங்களுள் ஒன்றே இது. மனிதனில் அவை இணைந்து உயர்பெரு நாளமாகின்றன.

**நிருநாமவென்பு,** (innominate bone). முலையூட்டிகளின் இடுப்பின் பக்கப் பாதியாய் அமைந்துள்ள பெரு வென்பு: இடுப்பென்பு ; அது புடைதாங்கி, நாரியம், பூப்பென்பு ஆகிய மூன்று என்புகளாலானது. இவை நிறையுடலியில் ஓர் என்பாகத் திரட்டப்பட்டுள்ளன.

**நிலைக்கல்,** (statolith). நிலைச்சிறைப்பையிற் காணப்படுகின்ற, கல்சியம் காபனேற்றாலோ மண்சிறுமணியாலோ, அல்லது சுரப்புப் பதார்த்தத்தாலோ ஆன ஓர் அமைப்பு.

**நிலைச்சிறைப்பை,** (statocyst). (1) தன்னைச் சூழவுள்ள வெளியில் தனதுடலின் நிலையைக் கண்டுகொள்வதற்காக உள்ள ஓர் அங்கம். இது வழக்கமாக உணர்ச்சியுள்ள கலங்களால் படலிடப்பட்டுள்ள ஒரு பையையும், அப்பையினுட் புகுத்தப்பட்டோ சுரக்கப்பட்டோ காணப்படும் வன்மையான சுயாதீன உடலை அல்லது உடல்களையும் உடையதாய்க் காணப்படும். இது பல முள்ளந்தண்டில்லா விலங்குகளில் உளது. (2) செவிச் சிறைப்பை.

**நிலையான பல்லமைப்பு,** (permanent dentition). முலையூட்டிகளில் பாற்பல்லமைப்பை ஈடுசெய்யும் இரண்டாம் பற்றொகுதி.

**நிறப்பசைக்கேடு, வெளிறல்,** (albinism). வழக்கமாக நிறப்பொருளுடைய விலங்குகளில் நிறப்பசையுண்மை இல்லாமை ; நிறமற்ற நிறந் தாங்கிகளைக் கொண்ட நிலை.

**நிறப்பொருள்,** (pigment). தாவரங்களிலும் விலங்குகளிலும் உள்ள நிறப் பதார்த்தம்.

**நிறுத்தித்தசை,** (erector muscle). ஓர் அங்கத்தையோ அதன் பகுதியையோ உயர்த்துகின்ற ஒரு தசை.

**நீந்துபாதம்,** (pleopod). ஆர்த்திரோப் போடாவில் (சிறப்பாகக் குறுஸ்ரா செயாவில்) நீந்துவதற்கென இயைபாக்க மடைந்துள்ள வயிற்றுத் தூக்கம்.

**நீர்தாங்கி,** (reservoir). சில மஸ்ரி கோபோறுவில், உணவுக்குழாய்க்குட் திறக்கின்ற ஒரு சுருங்க இயலா வெற்றிடம்.

**நீர்ப்பாயம்,** (serum). (1) குருதி திரளலின் போது அதிலிருந்து வேறுக வரும் நீர் போன்ற பாயம ; நீர்ப்பாய மென்சவ்வின் சுரப்பு. (2) மோர்த் தெளிவு.

**நீர்ப்புடகச் சிறைப்பை,** (hydatid cyst). நீர்த்தன்மையுடைய தெளிவான பாய் பொருளையும் சிறைப்பையினுள்ள முதிராத குடம்பிச் செஸ்தோட்டு களையும் கொண்டுள்ள ஒரு பை அல்லது புடகம்.

**நீர்மயவுடநீர்,** (aqueous humour). வேர்ற்றிபிருற்றுவில், கண்ணின் விழி வெண்படலத்துககும் வில்லைகரும் இடை யேயுள்ள இடத்தை நிரப்பியுள்ள நீர் போன்ற பாய்பொருள்.

**நீரகற்றல்,** (dehydration). (நுணுக் குக் காட்டியில வைத்துப் பரிசோதிப் பதற்கு வேண்டிய இழையங்கள தயாரித்தலில்) நீர் நீக்கல். வழக்கமாக இது வலுவான செறிந்த ஈதைல் அற்க கோலில் அடுத்தடுத்துத் தோய்த்தெடுப் பதனுல் நிகழ்கினறது. நீரோடு அறவே கலக்காத பதார்த்தங்களா கிய மெழுகு, கனடாப் பிசின் ஆகிய வற்றினுள் அமிழ்த்தி வைப்பதற்கு முன்னர் செய்ய வேணடிய ஓர் அத்தி யாவசியமான ஆயத்தம்.

**நீலமுருகைக்கல்,** (blue coral). ஒரு கிழக் கிந்திய முருகைக்கல் (ஹெலியோ-போரு கிறுலெயா); ஹெலியோபோறிடே குடும்பத்தைச் சார்ந்தது ; நீலவனகூட் டினை ஆக்குவது.

**நீள்வளையக் குடையம்,** (foramen ovale). (1) இரு இதயக் கூடங்கட்கும் இடையே உள்ள பிரிசுவரில் காணப்படும ஒரு துவாரமே இது. வழக்கமாக இது முதிர்மூலவுருவில் மட்டுமே திறந்திருக் கும். (2) ஆப்புப்போலியெனபின் பெரிய செடடையில் சிபுகநரமபிற்காய ஒரு பாதை.

**நீள்வளையக்குழிவு,** (fossa ovalis). ஒரு முட்டை வடிவக் குழிவு. சிறபபாகக் கூடவிடைப்பிரிசுவரில உள்ள ஒரு பள்ளம். முதிர்மூலவுருவின் நீள்வளை யக் குடையத்தின் மீதங்கள்.

**நீள்வளையப் பலகணி,** (fenestra ovalis). நடுச்செவி விருத்தியடைந்து காணப்படு கின்ற முள்ளந்தண்டு விலங்குகளில், செவியின வன்கூட்டுச் சுவரில உள்ள இரண்டு துவாரங்களுள் மேலே உள்ள துவாரம்.

**நீள்வளைய மையவிழையம்,** (medulla oblongata). முள்ளந்தண்டு மையவி ழையத்தொடு தொடர்ச்சியாகவுள்ள மூளையின பிறபக்கப் பகுதி.

**நீள்யௌவனநிலை,** (neoteny). வழக் கமான காலத்துக்கப்பாலும் குடம்பியின் இயல்புகளைக் கொணடிருத்தல அல்லது குடம்பியில் நிறையுடலியின் இயலபுகள் காணப்படுதல்.

**நுகம்,** (zygote). இரு புணரிகள் அல்லது இனப்பெருக்கத்துக்குரிய கலங் கள் இணைந்து உண்டான கலம் ; கருக் கட்டிய முட்டை.

**நுகவென்புமுளை,** (zygapophysis). முளளந்தண்டென்பொனறில் அது தன் னை அடுத்துள்ள முள்ளந்தணடெனபுக ளுடன் மூட்டுணடிருப்பதற்காக உள்ள முளைகளுள் ஒனறு.

**நுகைப்பு,** (dialysis). கரைந்துள்ள பளிங்குப்போலிகளையும் கூழ்களை யும் குறையூடுபுகவிடுஞ்சவ்வினுல் பிரித்தால், பளிங்குருப் போலிகள் இல குவில் கடந்து செல்லும் ; ஊடுபுகுதல.

**நுண்கரு,** (micronucleus). பல புரோற்றெரோவாக்களில, மாகருவிற்கு மிக்க அணமையில உள்ள சிறிய, இனப்பெருக்கற் கரு.

**நுண்ணுயிர்கொல்லி,** (antibiotic). பற்றீரியாக்கள், பங்கசுககள், இனன பிற அங்கிகள் ஆகியவை தமக்குக்கிட்ட பிற அங்கிகள் எதும் வளராது தடுத்தற் பொருட்டு உண்டுபண்ணும் இரசாயனப் பதார்த்தம். எடுத்துக்காட்டாக, பெனிசில்லியும் எனனும் பஙகசு உற்பத்தியாக்குகின்ற பெனிசில்லின.

**நுண்புணரி,** (microgamete). இணைதலில ஈடுபடும் புணரிச் சோடியில சிறியதாயக காணப்படும் புணரி. இது பொதுவாக ஆண புணரி எனக் கருதப் படுகினறது.

**நுண் புணரிக்குழியம்,** (microgametocyte). சில புரோற்றெருசோவாக்களில், பாததுமுறைச் சிறறுயிரிலிருந்து விருத்தியாகும் கலம். இககலம் நுண்புணரிகளைத தோற்றுவிககும.

**நுண்விலங்கு,** (animalcule). (1) ஈ, சுண்டெலி முதலியன போனற ஒரு சிறு விலங்கு. (2) வெறுஙகட்பாாவைககு அண்ணளவிற் தென்படாத அல்லது முற்றும் தென்படாத சிறிய விலஙகு.

**நுதல்,** (frons). (1) பூச்சிகளில் அவற்றின் தலையின் முற்பாகத்தில் உள்ள சோடியற்ற ஒரு வன்கோது. (2) உயர்வகை முள்ளந்தண்டு விலஙகுகளில் தலையின கண்களுக்கு மேலே உள்ள முற்பக்கம்.

**நுதலின் பின்புறமான,** (postfrontal). சில முள்ளந்தண்டு விலஙகுகளின் கட்குழிக்குப் பினனுல் உள்ள ஓர் என்பைக் குறிக்கும்.

**நுதலின் முன்புறமான,** (prefrontal) (1) சில முள்ளந்தணடு விலங்குகளின் நுதலென்பிற்கு முற்பக்கததே அமைந்துள்ள ஓர் என்பைக் குறிக்கும். (2) சில நகருயிர்களின நுதற்செதிலுக்கு முன்னுல காணப்படும் சோடியான தட்டுக்களையோ செதில்களையோ குறிக்கும்.

**நுதலென்பு,** (frontal bone). கட்குழி கட்கிடையே முள்ளந்தணடு விலஙகுத் தலையோட்டில் உள்ள ஒரு சோடி முதுகுப்புற மெனசவ்வென்பே இது.

**நுரையீரல்,** (lung). காற்றைச சுவாசிக்கும் முள்ளநதணடு விலங்குகளிற் காணப்படும் சுவாசவங்கம். நுரையீரல்கள், தொண்டையின் வயிற்றுப்புறப் பக்கத்திலிருநது கிளைக்குழாய்களாகத் தோன்றுகின்றன. அடிக்கடி பதுப்பிக்கப்பட்ட வளியால நிரம்பிய இரு கலன்பைகளை அவை கொண்டிருக்கும்.

**நூற்கும் புன்கருவி,** (spinneret). (1) சிலநநிகளில, திரவப்பட்டையைச் சுரக்கினற சுரப்பிகளுடன் தொடுகையுற்றுள்ள, குழாய்களினுல் துளையிடப்பட்டுள்ள அங்கங்களுள் ஒன்று. (2) கொக்சிடேயில் காணப்படுவது போன்று, கூட்டுப்புழு இல்லங்கட்குப் பதார்த்தத்தைத் தயார்செய்கின்ற அஙகங்களுள் ஒன்று.

**நெஞ்சு,** (thorax). (1) உயர்வகை முள்ளந்தண்டு விலங்குகளில, கழுத்துககும் வயிற்றுக்கும் இடையே உள்ள, உடலின பகுதியாகும். இது இதயம், நுரையீரல் முதலியவற்றைக் கொண்டிருககும். (2) பிறவிலங்குகளில், அவற்றின் கழுத்துககுப் பினனுல் உள்ள உடற் பிரதேசம்.

**நெமற்றேடு,** (nematode). நெமற்றேடாவில் ஒரு உறுப்பினர்; ஓர் உருண்டையான புழு.

**நெய்ச் சுரப்பி,** (sebaceous gland). கொழுப்புப் பதாாத்ததைதை உடைய அல்லது உண்டாக்குகின்ற சுரப்பி. உம்., முலையூட்டிகளிற் காணப்படும் நெய்ச் சுரப்பி.

**நெய்யரியென்பு,** (ethmoid bone). இவை மூக்குக்குழிச்சுவரில் பெரும் பகுதியைக் கொண்டிருக்கின்ற என்புகள்.

**நெருங்கற்குடையம்,** (obturator foramen). நாரியத்துக்கும் பூப்பென்புக்கும் இடையே உள்ள ஒரு முட்டைவடிவக் குடையம்.

**நேர்குடல்,** (rectum). குதத்திற்கு இட்டுச்செல்லுகின்ற, உணவுக்கால்வாயின் பிற்புற முனைவுப் பகுதி.

**நேர்தசை,** (rectus). நேர்க்கோட்டுத் தசைக்குரிய ஒரு பெயர். உதாரணம்- நேர்தொடைத் தசை, நேர்வயிற்றுத் தசை முதலியன.

**நொதியம்,** (enzyme). உயிரங்கிகளினால் உண்டாக்கப்பட்டு ஒன்று அல்லது பல குறிப்பிட்ட பாதார்த்தங்களோடு தாக்கமுறும் ஓர் ஊக்கி : இது ஒரு புரதமாகும்.

**நோய் விளைவிக்கின்ற,** (pathogenic). நோயை உண்டாக்கக்கூடிய ; சாதாரணமாக இப்பதம் இவ்வியல்புடைய பற்றீரியாக்கள், வைரசுக்கள், பங்கசுக்கள் என்பவற்றைக் குறிக்கும்.

**நோயரும்பல்,** (incubation). தொற்றுதலுக்கும் ஒட்டுண்ணியங்கிகளினால் தூண்டப்பட்டு அறிகுறிகள் வெளிப்படுதற்கும் இடையே உள்ள காலம்.

## ப

**பகுதி,** (pars). ஓர் அங்கத்தின் பகுதி. உ-ம். சுரப்பிப் பகுதி, நரம்புப் பகுதி, இடைநிலைப்பகுதி, குழற் பகுதி, கபச் சுரப்பியின பகுதி எனபன.

**பசுஞ்சுரப்பி,** (green gland). இறே மீன் களிலும் இவற்றிற்கு இனமான குறுஸ் ராசேயனகளிலும் சிறுநீரகங்களாகத் தொழிற்படுகின்றவை எனறெண்ணப்படு கின்ற ஒரு சோடி பெரும பசுஞ் சுரபபிகளுள் ஒன்று. இவற்றின் வெளிப்போக்கிகள் பெரிய உணர்கொம் பிடையிற காணப்படும்.

**பட்டுக்கற்றைச் சுரப்பி,** (byssal gland). இது மொல்லுஸ்காப் பிராணிகளின் பட்டுக்கறறையைச் சுரக்கின்றசுரப்பி.

**பட்டையுரு,** (incus). (1) முலையூட் டிகளிற காணப்படுகின்ற செவிச்சிற் றெனபுகளுள் ஒனறு. (2) ெறுற்றி பெருவில தாடையுருவிலுளள மெலலும் சிறறெனபுகளுள் ஒனறு. (3) பொதுப்படககூறின் யாதுமோர் பட்டடை வடிவ அமைப்பு.

**படை,** (stratum). அடுக்கு-உதார ணமாகக் கலஙகள அல்லது இழையத் திலுலானது ; ஓர் இடத்தின நிலைகருத் துப பிரிவில் வாழும் அஙகிகளின் ஒரு கூட்டம் ; பாறைகளின் ஒரு பாளம்.

**படைகொண்ட மேலணி,** (stratified epithelium). பலகலபபடைகளா லான ஒரு வகை மேல்ணி ; புறததே உள்ள படைகள தட்டையாயும் கொம் பாலானவையாயும், அகத்தே உள்ளவை பலகோணமுடையவையாயும் முதலுரு வுடையவையாயும் காணபபடும்.

**பதாங்கம்,** (vestige). ஒரு சிறிய சிதைந்த அல்லது அரைகுறையாய் விருத்தியடைந்த அஙகம் அல்லது பகுதி. இது சில மூதாதையரில் முழுமையாயும் தொழிற்பாடுடையதாயும் இருநதிருக்க லாம்.

**பதிமுறைக்குரிய,** (vegetative). (1) விலஙகுகளிலும் தாவரங்களிலும் அரும்பராதல முறையாலோ பிற இலிஙகமில் முறையாலோ நடைபெறும் இனபபெருக்கத்தினைக் குறிக்கும். (2) நரம்புத் தொகுதி, தன்னுட்சி நரம்புத் தொகுதி ஆகியவற்றுக்கும் பொருந்தும்.

**பந்துதாங்கு குழி மூட்டு,** (ball and socket joint). ஒன்றின் உருண் டையான முனை மற்றையதன் குழிவான முனையுட் பொருந்துகின்ற மூட்டு (உதார ணமாக, எனபுகட்கிடையே காணப் படும் மூட்டு). இது மிகவும் சுயாதீன அசைவிற்கு இடஙகொடுககும்.

**பரபாதமுனை,** (parapodium). பொலிக் கீற்றுப் புழுக்களில சிலிர் முட் களையும் சில வேளைகளில் பிற அமைப்புக்களையும் தாஙகியவையாய்த் துண்டவொழுஙகில அமைந்து சோடியாய்க் காணப்படுகின்ற, உடலின் தசைப்பிடிப்பான பக்க எறியம். சுயாதீன மாய் வாழும் புழுக்களில் இது இடப் பெயர்ச்சிககு உதவியாய் உளது.

**பரிசக்கொம்புகள்,** (tentacles). உணர் வதற்கு, ஆராய்ந்தறிவதற்கு, பற்றிப் பிடிப்பதற்கு அல்லது தொடுத்திருப் பதற்கு பல முள்ளந்தண்டிலலா விலஙகுகளின் தலையிற காணப்படும் மெல்லிய வளையத்தக்க அங்கஙகள்.

**பரிசந்தாங்கி,** (palpifer). பூச்சிகளின் பரிசவுறுபபைத தாங்கியிருக்கும் ஓர் அனுசசோணை அல்லது சிவுகமுன்னயற் சோணை.

**பரிசவங்கம்,** (palpal organ). சிலந் திகளிற காணப்படும் உணரடி ஒவ் வொனறினதும் முனைமூட்டில் விருத் தியாகியிருக்கும் ஓர் துணை இனப் பெருககவஙகம். இது பெண்ணின் உறபத்தித்துவாரத்துக்கு விந்துக்களை எடுத்துச் செல்ல உதவியாய் உளது.

**பரிசவுறுப்பு,** [palp (palpus)]. (1) பொலிக்கீற்று அன்னெலிட்டுப் புழுக் களின் தலையில் உள்ள தொட்டு

ணர் தூக்கங்கள். (2) இருவால்வுள்ள மொல்லுஸ்காப் பிராணிகளின் வாயைச் சுற்றிக்காணப்படும் பிசிருடைய, இழைய மடிப்புககள். ஊட்டற்கான நீரோட்டத தை உண்டாக்குவதே இவற்றின் தொழில். (3) குறுஸ்ராசெயாவின் சிபுகங்களைக் கொண்டிருககும் தூக்கங் களின் சேய்மைப் பகுதிகள். இவை இடப்பெயர்ச்சிக்கோ ஊட்டலுககோ உதவியாயிருக்கும். (4) பூச்சிகளில் உள்ள முதலாம் இரண்டாம் அனுக் களின் பகுதிகள்: சில பூச்சிகளில் மணநுகர்ச்சிக்குரியவை எனக் காட்டப்பட் டுள்ளன.

**பரிசைமுனை, (umbo).** (1) பரிசை ஒன்றின் குமிழ்போன்ற ஓர் முனைப்பு. (2) கூம்புச் செதிலின விங்கிய முனை. (3) சம்மட்டிப் பிடியுருவுடன் செவிப்பறை மென்சவ்வு தொடுககப்பட்டிருக்கையில் இதில் உண்டான குவிவு. (4) இது வாலவுளி ஓடுகளின் பழைய பகுதி அல்லது அலகு. (5) சிலவகைப் பூச்சிகளில உள்ள ஒரு முனமார்பெறியம்.

**பரம்பரையலகுகள், (genes).** தற்கால நிறமூர்த்தக் கொள்கையில், மூர்த்தங் களில நேரவரிசையில் அடுககப்பட்டுள் ளன என எணணப்படுகினற கறபனைய லகுகள். ஒவ்வொன்றும் ஒரு தனி இயல்பைக் குறிதது நிறகின்றது.

**பரம்பல், (distribution).** பூகோளத் தின உயிரினப்புவியியற் பிரிவுகளில ஓர் அங்கியின அல்லது தொகுதியின வீச்சு.

**பரிசைமுடி, (carapace).** ஒரு விலங் கின முதுகுபபுறப் பரப்பைப் பகுதி யாயோ முற்றாயோ மூடிககிடக்கும் வெளிவனகூட்டுப பரிசை. உதாரணம், ஆமையின என்பாலான முதுகுப்புறப் பரிசை; குறுஸ்ராசெயாப் பிராணிகளின் கைற்றினுள்ள முதுகுப்புறப்பரிசை.

**பல், (tooth).** அரைக்குந் தொழி லுடைய, ஒரு வன்மையான முன நீண் டுள்ள அமைப்பு. முள்ளநதணடு விலங் குகளில், வாயின் அலலது தொண்டை யின் வன்கூட்டுச் சட்டவமைப்போடு இணைந்து காணபபடும் ஒரு வனமை யான, கல்சியம் பதிந்த அல்லது கொம் புப் பொருளாலான அமைப்பு. இது உணவைப் பொடியாக்கவோ அல்லது துணடுதுண்டாக்கவோ பயன்படுகின்றது. முள்ளநதண்டிலலா விலங்குகளிலும் இதையொத்ததாய, உணவை அரைத் தலுக்கோ பொடியாக்கலுககோ பயன் படுத்துவதாய் அமைநதுள்ள கைற்றி னலான அல்லது சுண்ணும்பு சோந்த யாதுமோர் எறியம்.

**பல்தாங்கி, (odontophore).** (1) மொல் லுஸகாப் பிராணிகளில உள்ள வறுகியும் வறுகிப்பையும் இவறறோடு சோநத தசை களும கசியிழையஙகளும. (2) வறுகி யைத் தாஙகியிருககும வாய்க்குழியின் தளத்திலுள்ள முனைப்பைச சிலவேளை களில குறிக்கும.

**பல்லமைப்பு, (dentition).** (1) பற களின் விதம், ஒழுஙகுமுறை, எண் ணிக்கை முதலியன. (2) பறகளை உரு வாதலும் வளர்ச்சியடைதலும். (3) பாறபற்கூட்டம் போனற ஒரு பற்கூட்டம்.

**பல்லிலி, (edentate).** பல அல்லது பலபோன்ற எறியஙகள் இலலாத.

**பல்லினவிடைவெளி, (diastema).** இது வழககமாக இருவகைப்பட்ட பற்களி டையே காணபபடும் பலலில்லா இடை வெளி ஆகும.

**பல்லுருமுனை, (odontoid process).** அச்சு முள்ளந்தணடெனபின் மையத் தின் முறபககதநில உளள ஒரு முனை. இது அத்திலசு முளளநதணடென்பு திரும்புவதறகான சுழறசி மையமாய் அமைநதுளளது.

**பல்லுருவத்தோற்றம், (polymorphism).** ஓர் இனததிலேயே அமைபபிலோ தோற்றததிலோ தெளிவான விததியா சமுளள தனியனகள காணபபடுதல. பல இனங்களில இபபடிபபட்ட தனியனகள இரண்டே உளளமையினால அவ்வினங் கள பலலுருவததோறறமுள்ளவை எனப்படாமல ஈருருவுளளவை என வழங்கப்படுகின்றன.

பலவேறுபட்ட விலங்குக் கூட்டங்களில் பல்லுருவத்தோற்றமானது பலதிறப் பட்ட வித்தியாசமான நிலைகளிற் தங்கி யுளது. வாழ்க்கைச் சககரமொனறில, வெவ்வேறு இடங்கட்கேறபவோ, பல் வகை சமுதாய அல்லது சமூக அமைப் பொன்றில் விசேட அஙகம் வகிககவோ, உருமாற்றத்தினபோது விசேட பருவங் கட்காகவோ பல்வகை உருவஙகளும இயைபாக்கமடைநதிருக்கும். பருவகாலங் கள் அலலது வழக்கத்துககு மாறுன காலநிலைகளின் காரணமாக உண்டான சூழ்நிலை விததியாசததின் விளைவாக வும் பலலுருவத்தோறறம் ஏற்படலாம்.

**பல்வேர், (fang).** ஒருபல்லினது வேர்ப் பகுதி.

**பலகணி, (fenestra).** (1) ஓர் என் பிலோ இரு எனபுகட்கிடையேயோ ஒரு தாவரமென்சவவிலோ காணப்படும் ஒரு துவாரம். (2) கரப்பானின் தலையி லுளள ஒரு பள்ளம். (3) பூசசிகளின சிறகுகளில காணப்படும் ஒளிபுகவிடு கினற ஒரு புள்ளி.

**பலமுளையங்கொள்ளுதன்மை, (polyembryony).** விருத்தியின ஓர் ஆரம்பப் பருவத்தின்போது ஒரு நுகத்திலிருந்து பிளவு முறையால ஒனறிறகும் அதிக மான முளையஙகள உண்டாதல். எடுத் துக்காட்டாக, ஆமடிலோ (டசிப்போடுஸ) ஒரு தனி முட்டையிலிருந்து எபபொழு தும் ஒரேமாதிரியான நான்கு முளையங் களைப் பெறும.

**பலவினத்தந்தமுடைமை, (heterodont).** பல்வேறு தேவைகட்காக வியத்த மடைந்துள்ள பறகளை உடைய.

**பலவினப்புணரி, (heterogamete).** ஒரேமாதிரியில்லாத, இணைகிற புணரி களுள் ஒனறு. ஓ ஒவ்வாப் புணரி.

**பலவினப்புணரியுண்மை, (heterogamy).** (1) இரு பாற் சந்ததிகளின பரிவிருத்தி. இதில ஒன்று உணமையான இலிஙகத் திற்குரியது; மறறது கனனிபபிறப்பிற் குரியது. (2) வெவவேறு பருமனும அமைப்பும் உள்ள புணரிகள இணைதல் அல்லது அப்புணரிகளைக் கொண்டுள்ள ஒரு நிலை. ஒவ்வாப் புணரியுண்மை.

**பலோப்பியோக்குழாய் (கருப்பைக் குழாய்) [Fallopian tube (uterine tube)].** பெணமுலையூட்டிகளில் சுற்றுவிரிக்குழி யிலிருந்து கருப்பைவரையும் இடடுச் செல்லுகினற, சூலகத்துக்கருகே புனல வடிவத துவாரத்தை உடைய ஒரு குழாய். இது ஒவ்வொரு பக்கத்துக்கும் ஒவ்வொனறுய் அமைநதுள்ளது. இது தசை, பிசிர் ஆகியவறறின் இயக்கங் களினுல் சூலகததிலிருநது முட்டை களைக் கருப்பைககும, கருப்பையி லிருந்து விநதுவை முட்டையைக் கருககட்டுதற்குரிய குழாயின் பகுதிக் கும் கடத்திச செலலும். இது மற்றைய முள்ளநதண்டு விலங்குகளின் முல் லரின் கானைக் குறித்து நிற்கும்.

**பழுவுக்குரிய, (costal).** (1) விலா எனபுகளை அலலது விலாப்போன்ற அமைப்புககளை குறிககும். (2) கெலோனி யாவின என்புப் பரிசையைக் குறிககும். (3) பூச்சிச செட்டையின் விலாவுக்கு உரியது. (4) கிறிஞெயிட்டுக்களிலுள்ள முதற பூ வரிசைக்குரியது.

**பளிங்குக் கசியிழையம், (hyaline cartilage).** ஓரினமான கலவிடைத்தாயத் தைக கொணடிருக்கும் கசியிழையம். அககலவிடைததாயததினுள உள்ள சிறு குழிகள ஒவவொனறும் ஓர் அல்லது பல முதலுருக் கலஙகளை உடையனவை யாயும் கலனகள் இல்லாதவையாயும் காணப்படுகினறன.

**பளிங்குருப் பொருள், (crystalloid).** கரைசலில உளளபோது, விலஙகினது மெனசவவினூடாகத் தடங்கலினறிப் பரவக்கூடிய ஒரு பதார்த்தம். இது கூழ்நிலைப் பொருளுககு எதிரானது.

**பற்சீமந்து, (cement of teeth).** இரசாயனத் தனமையிலும், பௌதிகத் தனமையிலும் எனபை ஒத்த, பற் களின பகுதிகளைச் சூழ்நதுள்ள ஒரு பதார்த்தம்.

**பற்சூத்திரம்,** (dental formula). முலையூட்டியின் பல்லமைப்பை விவரிக்கும் பொழுது தாடைகளிலுள்ள பற்களின் எண்ணிக்கை, ஒழுங்குமுறை முதலியவற்றைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் ஒரு சூத்திரம். உதாரணமாகக் கரடியில் அதன் மேற்றாடையில் மூன்று சோடி வெட்டும் பற்கள், ஒரு சோடி வேட்டைப் பற்கள், நான்கு சோடி முன்கடைவாய்ப் பற்கள், இரண்டு சோடி கடைவாய்ப் பற்கள் முதலியவையும் கீழ்த்தாடையில் மூன்று சோடி வெட்டும் பற்கள், ஒரு சோடி வேட்டைப் பற்கள், நான்கு சோடி முன்கடைவாய்ப பற்கள், மூன்று சோடிக் கடைவாய்ப் பற்கள் முதலியனவும் உள்ளன. இதை (வெ $\frac{3}{3}$, வே $\frac{1}{1}$, மு $\frac{4}{4}$, க. $\frac{2}{3}$) எனனும் சூத்திரத்தால் குறிக்கலாம்.

மனிதனது பற் சூத்திரம் : வெ $\frac{2}{2}$, வே $\frac{1}{1}$, மு $\frac{2}{2}$, க $\frac{3}{3}$.

**பற்றவாளிப்பு,** (dental groove or furrow). ஒவ்வொரு தாடையின் சிற்றறைக்கரை நெடுகிலும் காணப் படுகின்ற ஒரு தவாளிபபு. இது, மிளிரியங்கங்கள் விருத்தியடைகின்ற, மேலணியின் உள் வரம்பின் நிலையைக் காட்டுவதாய் அமைந்துள்ளது.

**பற்றீரியம்,** (bacterium). பற்றீரியாவின் ஒரு கோல் போன்ற உறுப்பினர்.

**பற்றீரியா,** (bacteria). பச்சையம் அற்றவையாயும் நன்கு வரையறுக்கப் பட்ட கரு அற்றவையாயும் காணப்படுகின்ற தனிக்கல அல்லது இழைய நுண்ணங்கிப் பெருங்கூட்டம். இவை எளிய பிளவினால் விரைவிற் பெருகும். சில இனங்கள் உயர்ந்த தடையுடைய ஓய்வு (வித்தி) அவத்தையை உடையன ; சில இனங்கள் அசைவுள்ளன. பற்றீரியா வளி, நீர், மண், அழுகுகின்ற சேதனப் பொருள், விலங்குகள், தாவரங்கள் ஆகியவற்றில் காணப்படுகின்றன. ஒட்டுண்ணி வகைகளைக் காட்டிலும் அழுகற்றுவா வகைகளே மிகவதிகமாகும். பின்னையதுள் விலங்குநோய் விளைவிப்பனவும் தாவர நோய் விளைவிப்பனவும் அடங்கும்.

**பற்றீரியாவியல்,** (bacteriology). பற்றீரியா பற்றிய அறிவியல்.

**பறப்பு,** (flight). பறக்கும் செயல் அல்லது விதம் அல்லது சிறகுகளின் உதவியினால் வளியினூடாகச் செலலல்.

**பன்முதல்,** (dentine). கல்சியம் சேர்நத ஒரு பதார்த்தம் ; என்பை ஒத்தது. பற்கள், தட்டச் செதில்கள் ஆகியவற்றின் பெரும் பகுதி இதனாலேயே ஆக்கப்பட்டது. தந்தம் பன்முதலாலானது.

**பாகுபாட்டியல்,** (taxonomy). உயிர் வாழும் அங்கிகளைப பாகுபாடு செய்வதாய் அமைந்துள்ள அறிவியல்.

**பாகுபாடு,** (classification). ஒரு முடிவான திட்டம் அலலது முறைப் படி விலங்குகளையும் தாவரங்களையும் கூட்டங கூட்டமாக அலலது வகைவகையாக ஒழுஙகுபடுததுதல அல்லது ஒழுங்குபடுததும் முறை.

**பாறுக்கிள், பிளவுச் சிப்பி,** (barnacle). வருணம் சிறிபபெடியாவைச் சோந்த எவ்வைறற குறுலராசெயன்களில் யாதுமொன்று பாறுககிள் எனபபடும். இது குடம்பிப் பருவத்தினபோது கட்டற்று நீநதித் திரிகினற போதிலும் நிறையுடலிப் பருவததில் நிரந்தரமாக ஊனறப்பட்டுப் பல துணடங்களைக் கொண்ட கல்சியம் படிந்த ஓட்டினால் பாதுகாக்கப் பட்டிருக்கும். பாறை பாறுக்கிள்கள் எனப் பெரும்பாலும் அறியப்பட்டு வருவனவாகிய அககோன் பாறுக்கிள்களை, அதாவது அக்கோன் ஓடுகள் (பலானிடே குடும்பம்), கூம்புருவானவையாய், காம்பில்லாதவையாய் எண்ணிறந்த தொகையில் கடற்கரையோரங்களிலுள்ள பாறைகளில் ஒட்டிக்கொண்டிருக்கும். வாத்துப் பாறுக்கிள்கள் (லெப்பாடிடே குடும்பம்) வழக்கமாக மிதக்கும்

மரத் துண்டுகள், கப்பல்களின் அடிப் பகுதி ஆகியவற்றுடன் தோல்போன்ற காம்பினுல் ஒட்டப்பட்டிருப்பதைக் காண லாம். இவை கப்பல்களில் இருப்பதால், அவற்றின வேகம் குறைவுபடும்.

**பாதப்பூக்கள்,** (podobranchiae). சில ஆாத்திரோப்போடாவிலங்குகளின நெஞ் சறைத் தூககங்களிலுள்ள அரைச்சந்துக் கான் மூட்டுக்களிலிருந்து இளம்பும் பூக் கள்.

**பாதம்,** (foot). இடப்பெயர்ச்சிக்குரிய தூக்கம். குறுஸ்ராசெயாவில் நீந்துவ தற்கோ நடப்பதற்கோ பயன்படும் யாது மோர் தூக்கம். அறக்னிடா, மிறியப போடா, இனசெக்ற்ரு என்பனவற்றில் காணப்படும் கணுககாற்றட்டு. எகிகிஞே டேர்மாற்ருவில் காணப்படும் பாதவுருக் கள். மொல்லுஸ்காவில், இடப்பெயர்ச்சி க்கோ நிலைநிறுத்தற்கோ பயனுடைய நடுக்கோட்டில வயிற்றுப்புறமாய் அமைந் துள்ள ஒரு தசைப்பிடிப்பான திணிவு. நிலம் வாழ் முள்ளந்தண்டு விலங்கு களில், பினனவயவத்தின் பாதவுரு அல லது நாற்பாத முளிகளில, அவயவங்கள் எல்லாவற்றிலும் உள்ள பாதவுரு.

**பாதவுரு.** (pes). ஒரு பாதம், அடி, அல்லது பாதம் போன்ற அமைப்பு. உ-ம்., மூளையின சில பகுதிகள், முக நரம்பின கிளைகள்.

**பார்வை,** (sight). பார்ப்பதற்குரிய வினைத்திறன்; விழித்திரையினுலும் பார்வை நரம்புகளினுலும் மூளைக்குப் பரிமாறப்பட்ட, புறப் பொருட்களின அடையாளங்கள்.

**பார்வைக்குரிய,** (optic). பார்வைப் புல னுக்குரிய; கண்ணைநோக்கிச் செல்லும், முள்ளந்தண்டு விலங்குகளின் இரண் டாம் மண்டையோட்டு நரம்பு.

**பாரம்பரியம்,** (heridity). அடுத்தடுத் துள்ள சந்ததிகளில இயல்புகளை நிலை நாட்டக் காரணமாய் அமைந்துள்ள, கூர்ப்பிலுள்ள அக் காரணி எதுவோ அதுவே பாரம்பரியம் எனப்படும்.

**பால்,** (sex). ஆணே பெண்ணே என்று ஒரு விலங்கை அல்லது ஒரு தாவரத் தைப் பாகுபடுத்துவதற்கு உதவியாய் உள்ள இயல்புகள், அமைப்புக்கள், தொழில்கள ஆகியவற்றின் கூட்டுத் தொகுப்பு.

**பாற்பல்லமைப்பு,** (milk-dentition). முலையூட்டிகளிற் காணப்படும் முதலா வதுபல்லமைப்பு; இது பிறப்பிற்குப் பின்னரோ முன்னரோ விழுந்துவிடும. உதிருகின்ற பற்கள்.

**பிசிர்கள்,** (cilia). (1) புறமுதலுருப் படையின் மயிர போன்ற அதிரக்கூடிய வெளிவளர்ச்சிகள் அல்லது பலகலங் களினது முளைகள். (2) ஓர் இறக்கையின் இறகுச் சிற்றிழை முளைகள். (3) கண் இமைமயிர்கள்.

**பிசிர்த்தசை,** (ciliary muscle). பிசி ருடலில் காணப்படுகின்ற, வரியற்ற நாரகளை உடைய ஒரு கஙகணத் தசை. கணணின்றன்னமைவில் முக்கிய கருவி யாக இது உள்ளது.

**பிசிர்ப்பொருள்,** (ciliary body). முள் ளந்தண்டு விலங்குகளின் கண்ணில் உள்ள தோலுருவின் தடித்த விளிம்பு. விழிவெண்படலத்தின் கரையில் காணப் படும் இது கண்ணின்றனனமைவு நல் கும் பிசிர்த்தசைகளைக் கொண்டுளது. இதனேடு வில்லைகள தொடுககப்பட்டுள் ளன. இதிலிருந்து கதிராளி தோன்றும்.

**பிசிர்முளை,** (ciliary process). பிசி ருடலின் உட்பரப்பில உள்ள கலன் மடிப்புக்களுள் ஒன்று. இது வில்லையின் தாங்கி இணையத்தோடு தொடுக்கப்பட் டுள்ளது.

**பிசிர்முறையூட்டல்,** (ciliary feeding). நுண்ணிய அங்கிகளை நீரோட்டத்திலி ருந்து பிசிரினுல விலங்கினூடாகவோ விலங்குக்குக இட்டவோ கொண்டு சென்று அவற்றை வடிகட்டி ஊட்டல் பிசிர்முறையூட்டல் எனப்படும். உ-ம்., அம்பியொக்சுஸ்.

**பிசிர்மேலணி,** (ciliated epithelium). பலவகை வழிகளைப் படலிடும் ஒரு மேலணி. இது வழக்கமாகச் சுயாதீனப் பரப்பில் பிசிர்களை உடைய கம்பக்கலங்களைக் கொண்டது.

**பிசிருயிர்,** (ciliate). பிசிருடையது.

**பிடருக்குரிய,** (nuchal). (1) கழுத்தின் பின்புறத்துக்குரிய. (2) கிறெருப் போடாவின் வாய் முன்னங்கத்தில உள்ளவையும், புலனங்கங்கள் என்று கருதப்படுவனவுமான இரண்டு அங்கங்களைக் குறிக்கும். (3) தசக்காலிச் செபலொப் போடாவின் தலைக்கும் மென்மூடியின் முற்பக்க முதுகுப்புறப் பகுதிக்கும் இடையே உள்ள மெல்லிய கசியிழையத்தைக் குறிக்கும். (4) கெலோனியாவின பரிசை மூடியின் முற்பக்கத் தகட்டைக் குறிக்கும். (6) கொண்டுறேஸெரியில் உள்ள சோடியற்ற, பிற்பக்க, முதுகுப்புற, தலை யோட்டென்பு.

**பிடரென்பு,** (occipital bone). தலையோட்டின பின்புறப் பகுதியாகிப், பெருங்குடையத்தைச் சுற்றி, அத்திலசு முள்ளந்தண்டென்புடன மூட்டுவதற்கென மூட்டுக்குமிழியை அல்லது மூட்டுக்குமிழிகளைக் கொண்டிருக்கும் கூட்டென்பு. உயர்வகை முள்ளந்தண்டு விலங்குகளில் இது வழககமாக ஏறத்தாழ முற்றிலுமே இணைந்துள்ள (நான்கு) பகுதிகளைக் கொண்டிருக்கும்.

**பிடரென்புக் குமிழ்,** (occipital condyle). முதலாம் முளளந் தண்டென்புடன் மூட்டுண்டு உள்ள, தலையோட்டின பின்னால் காணப்படும் என்புக்குமிழ். அனேகமான மீன்களில் இது இல்லை; ஏனெனில் அவற்றின் தலையோடு முள்ளந்தண்டென்புடன் அசையா நிலையில உளளது. அம்பீபியாக்களிலும் முலையூட்டிகளிலும் இரட்டையாயும், நகருயிர்களிலும் பறவைகளிலும் ஒற்றையாயும் உளது.

**பிடியுரு,** (manubrium). (1) யாதுமோர் கைப்பிடிபோன்ற அமைப்பு. (2) கொல்லெம்போலா வருணததில், கவரின் அடிப்பாகம். (3) முலையூட்டிகளில் முன்மார்புப் பட்டை. (4) முலையூட்டிகளின் காதில் உள்ள சம்மட்டியுருவென்பின் பகுதி. (5) மெதுசாவின தொங்குகினற வாய்ப் பகுதி. (6) ஹைறறிபெருவில், சம்மட்டியுருவென்பின் பகுதி.

**பிணிக்கை,** (conjunctiva). கண்மடலைப்படலிட்டு, வல்லுறையின் முன் பகுதியின் மீது மடிக்கப்பட்டு விழி வெணபடலமேலணியாக அமைந்துள்ள கண்ணின் சீத மென்சவ்வு.

**பிணைச்சவென்பு,** (chevron bone). பல முள்ளநதண்டு விலங்குகளின் வாற் பிரதேசததில், முள்ளநதண்டின வயிற்றுப்பககப் பரப்புடன் மூட்டப்பட்டிருக்கும் v—வடிவ என்பு.

**பித்தக் கான்கள்,** (bile ducts). ஈரல், பித்தப்பை ஆகியவற்றின் கழிவுக் கால்வாயகள்.

**பித்தச்செம்பசை,** **பிலிரூபின்** (bilirubin). இது பித்தத்திற்காணப் படுகின்ற ஒரு செந்நிறப் பொருள். இஃது ஹீமோகுளோபினின் பிரிகை விளைவு என நம்பப்படுகின்றது.

**பித்தநிறப் பசைகள்,** (bile pigments). பிததநிறப் பசைகளுள் முககியமானவை பிலிறூபினும் (செம்மஞ்சள்) அதன் ஒட்சியேற்ற விளைவாகிய பிலிவேர்டினுமாம் (பச்சை). இவை ஹீமோகுளோபினின முறிவால உண்டாகினறன ; இரண்டு மெதீன் பாலங்களாலும் (=CH −) ஒரு மெதிலீன் பாலத்தாலும் $(-CH_2-)$ இணைக்கப் பட்டுள்ள பிரதியீடு செய்யப்பட்ட நான்கு பைரோல கருக்கள் உடைய ஒரு விரிசங்கிலியால ஆனவை.

**பித்தப் பசும்பசை,** (biliverdin). பித்தததில் காணப்படும் ஒரு பச்சை நிறப்பொருள். இது பிலிறூபினின் ஓர் ஒட்சியேற்ற விளைவாகும்.

**பித்தப்பை,** (gall bladder). இது முள்ளந்தண்டு விலங்குகளிலே, பித்தம் சேமிக்கப்படுகின்ற, பித்தக் கானின் ஒரு பக்கக் கிளைகுழாய்.

**பித்தம்,** (bile). இது முள்ளந்தண்டு விலங்குகளின் ஈரலிலிருந்து சுரக்கும் சுரப்பாகும்; பித்தக்கான் வழியாக முன் சிறுகுடலையடையும்; கொழுப்புச் சமிபாட்டுக்கு முக்கியமானது. அவை பித்த உப்புக்களினால் நுண்ணிய துளிகளாக (குழம்பாக்கம்) பிரிக்கப்படுகின்றன. பித்தத்தில ஹீமோகுளோபின் சிதைவினால் உண்டான கழிவுப் பொருட்களாகிய நிறப்பசைகள் காணப்படும்.

**பித்தவுப்புக்கள்,** (bile salts). தோரோக் கோலிக்கமிலம், கிளைகோகோலிககமிலம் ஆகிய பித்தவமிலங்களின் சோடிய முப்புக்களே இவை. அவ்வமிலங்களுட் சில நிரம்பாதவை ; தோரீனோடு அல்லது கிளைசீனோடு அவ்வமிலங்கள் ஒடுக்கப படப் பித்தவுப்புககள் உண்டாகும். இவை பித்தத்தில் சுரக்கப்படுகின்றன. சிறுகுடலிலிருந்து கொழுப்பை அகத்துறிஞ்ச மிகவும் உதவியாயுள்ளன.

**பிரிசுவர்,** (septum). இரு குழிகளை அல்லது இரு இழையத்திணிவுகளைப் பிரித்து வைத்திருக்கின்ற ஒரு தடுப்பு. உ-ம்., அறைகளுடைய ஓடுகள், முருகைக் கற்கள், இதயம், மூக்கு, நாக்கு முதலியனவற்றில உள்ள பிரிசுவர்.

**பிரிமென்றகடு,** (diaphragm). பொதுவாக, ஓர் அறையைப் பிரிக்கும் குறுக்குத் தடுசுவர். மமமாலியாவில வயிற்றுககுழியிலிருந்து நெஞ்சறைக குழியைப் பிரிக்கின்ற, தசைகளாலும் தொடுப்பிழையங்களாலும் ஆன,குறுக்குத தடுசுவர். சலியெனரியாவில சுருட்குடல்களிலிருந்து களம், நுரையீரல்களது அடி ஆகியவை வரைக்கும் செல்லுகின்ற ஒரு விசிறியுருத் தசை. சில அறக்னிடாப் பிராணிகளில, வயிற்றிலிருந்து தலை நெஞ்சின் குழியைப் பிரிக்கின்ற ஒரு குறுக்குத் தடுசுவர். சில பொலிக்கீற்றுககளில் உடற்குழியை இரண்டு பிரதேசங்களாகப் பிரிக்கும் நனகு விருத்தியடைந்துள்ள ஒரு குறுக்குத் தடுசுவர்.

**பிரௌனினசைவுகள்,** (Brownian movements) : நுண்ணிய சிறு மணிகளைப் பாய்பொருளொன்றினுள் தொஙகவிடும் பொழுது அவற்றில் உண்டாகின்ற உயிரப்பில்லா அதிர்வசைவுகள்.

**பிலிவேர்டின்,** (biliverdin). பித்தப் பசும்பசை பார்க்க.

**பிள்ளையீனுந் தன்மை** (viviparity) குட்டியை உயிரோடு பெறுந்தன்மை.

**பிளத்தல்,** (fission). பிளப்பு பார்க்க.

**பிளப்பு,** (fission). உடல் தானுகவே இரண்டு அல்லது மேற்பட்ட பகுதிகளாகப் பிரிவடைந்து அவ்வொவ்வொரு பகுதியும் முழுமையான அங்கியாய் வளர்வுறும் வகையில அமைந்துள்ள இனப்பெருக்கமே இது. கலங்களிலோ தனிக்கல அங்கிகளிலோ இது நிகழும் பொழுது கலப்பிரிவை ஒத்ததாகக் காணப்படும். இது பற்றீரியா, பிளப்பு அலகாக்கள (ஸ்கிசொபிற்று), புரோற்றோசோவா ஆகியவற்றில சாதாரணமாய் நிகழும இனப்பெருக்கமாகும்.

**பிளவு,** (fissure). ஓர் அங்கத்தைச் சோணைகளாகப் பிரிக்கின்ற அல்லது சோணைகளின் சில பரப்புக்களைக் கீழ்ப்பிரிவுகளாகப் பிரித்து வேறுக்குகின்ற ஒரு பிளப்பை, ஆழமான தவாளிப்பை அல்லது சாலையைப் பிளவெனலாம்.

**பிளாந்தன்,** ( plankton ). கடலிலோ ஏரியிலோ முனைப்பில்லாமல் நீநதியோ இழுக்கப்பட்டோ செல்கின்ற விலங்குகளும் தாவரஙகளும். இவை அனேகமாக மிகவுஞ்சிறியவையாய் இருக்கும். சிறிய குறட் பிளாந்தனுககு எடுத்துக்காட்டு, தயற்றம்கள். பிளாந்தன் முக்கியமாக மேற்பரப்பிற்

காணப்படுவதால் அங்கு தாவரங்கள் தகுந்த ஒளியைப் பெறக்கூடியவையாய் உள்ளன. பிளாந்தன், மீன்களுக்கும் திமிங்கிலஙகட்கும் உணவாய் அமைந்துள ளபடியால், பொருளாதார முக்கியத்து வ ' வாய்ந்தது.

**பிளாஸ்மா,** (plasma). உப்புக் கள், புரதம், பிறசேதனச் சேர்வைகள் ஆதியன உள்ள நீர்த்தன்மைப் பாய பொருள். இதில் குருதிக கலங்கள தொங்கிக் கிடககும். குருதி உறையும் பொழுது அது சில கூறுகளை (உ-ம்., பைபிரிணுக்கி) இழந்து நீர்ப்பாயமாக மாறுகின்றது.

**பிற்சொண்டு,** (labium). பூச்சிக ளில், கீழ் உதடு ; இரண்டாம் அனுக்கள் இணைந்து உண்டானது. கஸ்திரோப் போடாப் பிராணிகளின் ஓட்டில், துவா ரத்தின் ஓரததின் உட்பக்க அல்லது சிறுகம்பச் சொண்டு.

**பிற்சொண்டுப் பரிசம்,** (labial palp). மொலலுஸ்காப் பிராணிகளினது வாய்க்கு அணமையிலுள்ள சோணைபோன்ற அமைப்பு. பூச்சிகளின் பிறசொணடின் மேல் உளள மூட்டுடைய தூக்கம்.

**பிற்புறத்தண்டுத்தூணி,** (after shaft). இறககையின உயாகொப்பூழிககு அண மையிற் காணப்படுவதாய ஒரு சிறிய தூவித திரள்.

**பிறப்பிலுள்ள,** (congential). உற்பத் தியிலேயே உள்ள ; உடன் பிறந்தது.

**பிறப்புரிமையியல்,** (genetics). மரபுவழி, பாரம்பரியம் எனபன பறறிய கலவி.

**பின்குடல்,** (hind gut). (1) மனி தமுளையத்தின வான மடிப்பினுள், நீண்டு செலகினற, கருவூணபையின் கிளைக்குழாய். (2) உணவுச சுவட்டின பினபக்கப் பகுதி.

**பின்குழிவான,** (opisthocoelous). பின்னால் குழிவுள்ள மையத்தி உள் ளமை. இப்பதம் முளளநதண்டென் புகளைக் குறிக்கும்.

**பின்புறமான,** (posterior). பின்னால் அல்லதுமுதுகுப்புறமாய் அமைந்துளள; அச்சுக்குப்பின்னாலுள்ள ; அசசுக்கு மேலாக அல்லது அடுத்துள்ள.

**பின்மூளை,** (hind brain). சக்கரக் கபாலம். இது மூன்றும் மூளையப் புடகத் திலிருந்து பெறப்பட்ட மூளையின் பகுதி.

**பின்றேற் செட்டை,** (post-patagium). பறவைகளில், மேற்புயத்திற்கும் முண டத்திற்கும் இடையே நீண்டுள்ள சிறிய தோல் மடிப்பு.

**பின்னல்,** (plexus). ஓர் வலைவேலைப் பாடு. பல விலங்குகளில், நரம்புக் கலங்களின முனைகள் இணைதலினால் உணடாகும் சிக்கல அல்லது நரம்பு வலை; குருதிக்கலன்களினால் உண்டான வலைவேலைப்பாடு. குருதிக்கலனகளின பின்னல்களுக்கு பெரிதும் பொதுவான உதாரணங்களாகக கொள்ளப்படுபவை மூளையின தோலுருப் பின்னல்களேயாம். இவை, மூளையின் மிக முன்னுக்குளள னவும் மிகப்பின்னுக்குள்ளனவுமான குழிகளின் மிகக மெலலிய, அதிக கலனகளுடைய கூரைத்தகடுகளே. இத் தகடுகள் குழிகளினுள் விரிந்து நீணடி ருககும். பிற கலன சிக்கலகள் உடலின பிற இடஙகளில் காணப்படும்.

**பின்னிடைவியல்பு,** (recessive character). ஒரு பெற்றாரில் உள்ள இயல் பானது கலப்புப் பிறப்பில மற்றைய பெற்றாரிலிருந்து பெறறுள்ள, ஒத்த, ஆட்சியுள்ள (மாறுபட்ட) இயல்பினால மறைககப்பட்டிருக்கும். இவ்வியல்பே பினனிடைவியலபு எனப்படும். $F_1$ பல வின நுகத்தில் வெளிப்படாது காணப் படுகின்ற எதிருரு.

**பின்னகவென்புமுளை,** (postzygapophysis). அடுதததுப் பினனால் உளள முள்ளந்தண்டென்புடன் மூட்டுண்டு இருபபதறகாக, ஒரு முள்ளந்தண டெனபின நரம்பெனபு முளையின் பிற பக்கததே அமைந்துளள முகப்பு அல லது முளை.



5—RR10772 (12/66)

**புச்சம்,** (telson). குறுஸ்ராசெயாவிலும் லிமூலுவிலும் காணப்படுகின்ற சோடியற்ற முனைவு வயிற்றுத் துண்டம்; வான்முள்ளையோ கொடுக்கையோ தேள்களில் உடையதாய்க் காணப்படும். புரோருருவிலும் சில பூச்சி முளையங்களிலும் உள்ள பன்னிரண்டாவது வயிற்றுத்துண்டம்.

**புடகம்,** (vesicle). இழையங்களிற் காணப்படும் சிறிய கோளவடிவ அல்லது தோற்பை வடிவ வளியிடம்; வழக்கமாகப் பாய்பொருளினை உடைய சிறிய குழி அல்லது பை; ஓட்டிலோ முருகைக் கல்லிலோ உள்ள குழிவான மேடு; மூளையில் உள்ள மூன்று முதற குழிகளுள் ஒன்று.

**புடைக்கலவிழையம்,** (parenchymatous tissue). இடைப்பட்ட வகையான, மென்மையான, கடற்பஞ்சு போன்ற இழையம். பாய்பொருளினுல் அல்லது ஊன்பசையுள்ள தாயத்தினுல் நிரம்பப் பெற்ற இடங்களினுல் பிரிக்கப் பட்ட கலங்களை வழக்கமாக இது கொண்டதாய்க் காணப்படும். பொதுவாக இடைத் தோற்பட்டையில் இருந்தே உற்பத்தியாகி இருக்கும்.

**புடைக்காலம்,** (tertiary). மீசோசோயிக் ஊழியை அடுத்தும் குவறநேனறி காலவட்டத்துக்கு முன்னுள்ளதுமான புவிச்சரிதைக் காலவட்டத்தைக் குறிக்கும். சீனுேசோயிக் ஊழியின் தொடக்கக் காலம்—இயோசீன் தொடக்கம் பிளையோசீன காலவரை.

**புடைக்குரிய,** (pleural). புடைச்சவ்வுக்கோ புடைப்பட்டைக்கோ உரிய. உ—ம்., புடைத் திட்டு, கெலோனியன் பரிசை மூடியிலுள்ள பழுவுக்குரிய தட்டுக்களைக் குறிக்கும்.

**புடைக்கேடையச் சுரப்பி,** (parathyroid). நாற்பாதமுளி முள்ளந்தண்டு விலங்குகளின் அகஞ்சுரக்குஞ் சுரப்பி. இது வழக்கமாகச் சோடியாய்க் கேடையச் சுரப்பிக்கு அண்மையிலோ, சிலவினங்களில் கேடையச் சுரப்பிக்குள்ளேயோ காணப்படும். பூமடிகளிலிருந்து இது விருத்தியாகும். உடலில் கல்சியமும் பொசுபேற்றும் பரவுதலை கட்டுப்படுத்தும் ஓமோன் (ஒருபுரதம்) அதில் உளது.

**புடைச்சவ்வு,** (pleura). ஒவ்வொரு நுரையீரலையும் மூடிப் பின்னர் மார்புக் குழியின் சுவரைப் படலிட்டு மூடிய பையொன்றை ஆக்கும் இரு நீர்ப்பாய மென்சவ்வுகளே புடைச் சவ்வுகளெனப்படும். நுரையீரலை மூடியிருக்கும் பகுதி உடலகப் புடைச்சவ்வெனப் படும். இது அடியில் சுவாசவிழையத்தோடு மிகவும் கெட்டியாய்ப் பிடித்திருக்கும் மெல்லிய சவ்வாகும். நெஞ்சறையின் சுவரோடு ஒட்டிக்கொண்டிருக்கும் படை சுவாப்படைச் சவ்வெனப் படும்.

**புடைதாங்கிநாரி,** (iliolumbar). புடைதாங்கி, நாரி ஆகியவற்றின் பிரதேசத்திலுள்ள: இப்பதம் நாடி, இணையம், நாளம் ஆகியவற்றுக்குப் பிரயோகிக்கப் படுகிறது.

**புடைநாவுரு,** (paraglossa). (1) குறுஸ ராசெயன வாயின கீழ்ச் சொண்டு அல்லது அனுவாய் பிரிந்துள்ளதால் உண்டாகியிருக்கும் சோணைகள். (2) பூச்சியின் வாயில் உள்ள தொண்டைக் கீழில் காணப்படும் சோணைகள் அல்லது தூக்கங்கள். இவை சிபுகங்கட்கும் அனுக்கட்கும் இடையில் காணப்படுவன. இவற்றை மீ நாக்கள், சிற்றனுக்கள் என்றும் அழைப்பதுண்டு. இவை குறுஸராசெயன்களின் பாதாடைகளுடன் அமைப்பொத்தவையாய்க் காணப்படும்.

**புடைப்பட்டை,** (pleuron). (1) ஆர்த்திரோப்பொட்டுப் பிராணிகளின் உடற்றுண்டங்களில், வெளிப்புறப் பக்கத் துண்டுகள். (2) குறுஸராசெயன் ஓடுகளின் பக்க நீட்சிகள்.

**புடைப்பு,** (follicle). (a) (1) ஒரு சிறிய குழி அல்லது ஆழமான, ஒடுங்கிய வாயுடைய பள்ளம். உ-ம்., ஒரு மயிர்ப்புடைப்பு. இப்பள்ளத்திலிருந்து மயிர் வளருகின்றது. (2) சிறப்பாக ஒரு சிறிய தனி அல்லது சாடையாக மட்டும் கிளைவிட்ட சுரப்பி. (3) ஒரு மறை குழி. இதனால் உண்மைச் சுரப்பிகளல்லாதவைகளும் குழியற்றவையுமான நிணநீர்க்கணுக்களையும் குறிக்க இப்பதம் பயன்படுகின்றது.

(b) ஒரு புழுக்கூடு.

**புடையாப்புப் போலியென்பு,** (parasphenoid) மீன்களிலும் அம்பீபியன்களிலும் வாயின் கூரையைத தாங்கியுள்ள ஓர் உட்டோலென்பு. நகருயிர்களிலும் பறவைகளிலும் கூட இது உண்டு. ஆனால் முலையூட்டிகளில் இது எர்க்காலென்பினால் குறிக்கப்பட்டுளது.

**புணர்ச்சி,** (copulation). (1) புரோற்றெசோவாவில், புணரிகள் முற்றாக இணைகின்ற ஒருவகை ஒன்றிய புணர்ச்சி. (2) உயர்வகை விலங்குகளில் புணர்ச்சியின்போது ஏற்படும் சேர்க்கை.

**புணரிக்கலச் சிறைப்பை,** (oocyst). ஸ்போரொசோவாவில் இணையும் இரு புணரிகளைச் சுற்றி உண்டான சிறைப்பை.

**புணரிக்குழியம்,** (gametocyte). ஒரு புணரியின தாய்க் கலம்.

**புணரிகள்,** (gametes). புணரிக்குழியங்களிலிருந்து பெறப்படும் கலங்கள். அவை இணைந்து நுகங்களாகின்றன. இலிங்கக் கலங்கள்.

**புணரிப் பிறப்பு,** (gametogenesis). புணரிக் குழியங்களிலிருந்து புணரிகள் உண்டாதல்.

**புத்துயிர்ப்பு,** (regeneration). உயிருள்ள உடலில் பழுதடைந்த அல்லது அழிந்துபட்ட ஒரு இழையத்தையோ பகுதியையோ ஈடுசெய்தற் பொருட்டு அதை ஒத்த அமைப்பொன்று விருத்தியாதல். கடற் பஞ்சுகள், சீலென்ரெரூற்றுக்கள், புழுக்கள் போன்ற, எளிய விலங்குகள் சிலவற்றில கணிசமான அளவில் புத்துயிர்ப்பு நிகழுகின்றது.

**புரத்தியேசு,** (protease). புரதத்தைப் பிளக்கவல்ல நொதியம் யாதாயினுமொன்றுக்கு வழங்கும் பதம். பெப்சின், திரிப்சின், இரெனின் முதலியனவும், மரப்புரததியேசுக்களான பாப்பேயின், புரோமெலின் முதலியனவும் புரத்தியேசுக்களில் அடங்கும்.

**புரதம்,** (protein). எண்ணற்ற அமிலோவமிலங்களைக் கொண்ட, மிகவும் சிக்கலான சேதனச் சேர்வை. எண்ணற்ற வகைப் புரதங்கள் உயிருள்ளனவற்றிற் காணப்பட்டு அவற்றின் உலர் நிறையின் கணிசமான விகிதசமத்தை ஆக்குகின்றன. ஒரு புரதமூலக் கூறானது நூறறுககணக்கான அல்லது ஆயிரக் கணககான அமைனோவமில மூலக்கூறுகளால ஆனது. இவ்வமைனோவமில மூலக்கூறுகள் ஏறக்குறைய வெவ்வேறு இருபது வகையானவை. புரதமூலக் கூறுமிகப்பெரியது. (பெரும்பாலானவை 20,000 தொடககம் பல லட்சம் வகையான மூலக்கூறு நிறையைக் கொண்டன.) ஆதலால் கரைக்கப்பட்ட புரதங்கள் கூழ்க்கரைசலை உண்டாக்குகின்றன. எல்லா உயிர்வாழ்வனவும் புரதங்களைத் தொகுக்கின்றன. ஆனால் தற்போசணையுள்ளவை மட்டுமே அசேதனப் பொருட்களிலிருந்து தொகுக்கின்றன.

**புருத்தோசு,** (fructose). பழ வெல்லம், இலேவலோசு. $C_6H_{12}O_6$. நீரற்ற சாய்சதுரப் பளிங்குகள். உ. நி. 95° ச. இது ஒரு கீற்றோஹெக்சோசு; இனுலினை ஐதானவமிலங்களுடன் வெப்பமாக்கித் தயாரிக்கப்படுகின்றது. இனிய பழரசங்களில் குளுக்கோசுடன் எப்பொழுதும் ஒன்றாகக் காணப்படுவது.

**புரோற்றெசோவன்,** (protozoan). புரோற்றெசோவாக் கூட்டத்தைச் சேர்ந்த ஒரு தனிக்கலமுள்ள அங்கி அல்லது கலமற்ற அங்கி. உ-ம்., அமீபா.

**புரோதரம்,** (proventriculus). தசக் காலிக் குறுஸ்ராசெயன்களில் உத ரத்திரிகையை உடைய "இரைப்பை". பூச்சிகளில், இரைப்பைக்கு முன்னுலுள்ள சமிபாட்டறை; புழுக்களில், அரைப்புப்பைக்கு முன்னுல் உள்ளபகுதி; பறவைகளில் அரைப்புப்பைக்கு முற்புறமாக உள்ள சுரப்பிகள் கொண்ட இரைப்பை.

**புலனங்கம்,** (sense organ). வெளியிலிருந்து தூண்டற்பேற்றைப் பெறும் தொழிற்பாடுடைய ஓர் அங்கம்; வாங்கி.

**புவிக்குரிய,** (terrestrial). நிலத்தில் வாழும் அங்கிகளைக் குறிக்கும்.

**புவியியற் பரம்பல்,** (geographical distribution). விலங்குகள், தாவரங்கள் ஆகியவற்றின் பல்வேறு வகைகள், சிறப்பாக இவற்றின் பெருங்கூட்டங்கள், புவியின் வெவ்வேறு பிரதேசங்களிலும் இடங்களிலும் இயற்கையாக ஒழுங்காய் அமைந்திருத்தலும் பங்கீடு செய்யப்பட்டிருத்தலுமாம்.

**புழுக்கூடு,** (cocoon). இது முட்டைகள், குடம்பிகள் முதலியவற்றின் காப்புக்கவசம். உதாரணமாக, சில அனெலிட்டுக்களின் முட்டைகள் கருக்கட்டி, புழுக்கூட்டில விருத்தியடைகின்றன. பல பூச்சிகளின குடம்பிகள், கூட்டுப்புழுக்கள் விருத்தியடைவதற்காகப் புழுக்கூட்டை செயயும். (பட்டுப்புழு அந்தின புழுக்கூட்டிலிருந்து பட்டுநூல பெறப்படுகிறது).

**புயநாளங்கள்,** (brachial veins). புய நாடிவழி கூடவே செலலும் ஒரு சோடி நாளங்கள். இவை ஒன்றோடொன்று இணைந்தும் அடிநாளத்துடன இணைந்தும் அக்சுநாளமாகின்றன.

**புறக்கலவுரு,** (ectoplasm). கலத்தின சுற்றயலில உள்ள தெளிவான சிறுமணிகளற்ற ஒரு குழிய முதலுருப்படை.

**புறக்காதுக்குழி,** (external auditory meatus). வெளித்துவாரத்திலிருந்து செவிப்பறை மென்சவ்விற்கு இட்டுச்செலகின்ற செவியின் பாதை.

**புறக்கீலவுரு,** (ectocuneiform). புறவாப்பெனபு பார்க்க.

**புறஞ்சுரக்கின்ற,** (exocrine). கான்களின வழியே சுரப்புக்களை இறைக்கும் சுரப்பிகளைக் குறிக்க இப்பதம் பிரயோகிககப்படும்.

**புறத்துறிஞ்சல்,** (adsorption). திண்மப் பொருள்களோடு மூலக்கூறுகள் ஒட்டியிருக்கும் பண்பு. ஒரு மூலக கூறு மேற்பரப்புப் படலம் உண்டாதல்.

**புறத்தோல்,** (cuticle). மேற்றோல். கவசத்தின வெளிப்படைகள். மேற்றோலை மூடியிருக்கும் ஓர் உயிரில்லாச சருமம்.

**புறத்தோல்படை கொள்ளல்,** [cuticularisation (cutinisation)]. கலச்சுவரில் கியூறறின் படிவடைநது, அதனுல் புறத்தோல் உண்டாதல்.

**புறமுதலுருப்படை,** (ectoderm). (1) புன்னுதரனின் சுவராக அமைந்துள்ள, கலங்காளாலான வெளிப்படை. (2) இப்படையிலிருந்து நேரே தோன்றிய இழையங்கள்.

**புறவாப்பென்பு,** (ectocuneiform). கணுககாற்றட்டின் சேய்மை வரிசையில் உள்ள ஓா எனபு. மூனறாவது கீலவுரு என்பு.

**புறவுருவச் சிறகுகள்,** (contour feathers). ஒரு பறவையின பொதுப் போர்வையாக அமைநது அப்பறவைக்குப் புறவுருவத்தை நலகும் இறகுகள.

**புறவொட்டுண்ணி,** (ectoparasite). விருந்து வழங்கியின் புறததே வாழுகின்ற ஓா ஒட்டுண்ணி.

**புனகரு,** (nucleolus). கலத்தின கருவிற் காணப்படும் சிறிய உருண்டையான பொருட்களே புன்கருக்கள் எனப்படுவன. பொதுவாக ஒவ்வொரு கருவிலும் ஒவ்வொரு புன்கருவே உண்டு. எனினும் பலவற்றில பல புன்கருக்கள்

காணப்படுகின்றன. கலப்பிரிவின் போது சிறிது புன்கருத்திரவியம் நிறமூர்த்தங்களுட் சேர்க்கப்பட்ட போதிலும் புன்கருவின் தொழிற்பாடு அறியப்படாத நிலையிலேயே உளது.

**புன்வாதனுளி,** (tracheole). வாதனுளித் தொகுதியின் இறுதிக்கிளை.

**புன்வெற்றிடம்,** (vacuole). கலமுதலுருவில் வளி, சாறு அல்லது பகுதி சமிபாடடைந்த உணவைக் கொண்டதாய்க் காணப்படும் இடைவெளிகளுள் ஒன்று.

**புன்னடி,** (pedicel). பூச்சிகளின் உணர்கொம்புகளின் இரண்டாம் மூட்டு; பொதுப்படையாகக் கூறுமிடத்து, சுயாதீனமான ஓர் அங்கத்தின காம்பு. உ-ம்., சில குறுஸ்ராசெயாக்களின் பார்வைப் புன்னடி.

**புன்றூடி,** (arteriole). ஒரு சிறு நாடி.

**புனலுரு,** (infundibulum). (1) யாதுமோர் புனலுருவ அங்கம் அல்லது அமைப்பு. மூளையின் பகுதிக்கும், நெயயரியென்பின் பகுதிக்கும், வலது இதயவறையின் பகுதிக்கும் இனனபிறவிற்கும் அப்பதம் பிரயோகிக்கப்படுகின்றது. (2) ஒரு தலைக்காலியின ஒட்டுகுழாய். (3) பறவையின் சூலகக் கானின பகுதி. (4) தெஞ்சேபோறின் தட்டையான, இரைப்பை போன்ற குழி. (5) ஸ்கிபொசோவாவிலுள்ள பிரிசுவர்ப் புனல்.

**பூ,** (gill). நீர்வாழ் விலங்குகளிற் காணப்படும் சுவாசவங்கம். உடலின் புறப்படையினது அல்லது குடலின உட்படையினது எறியம்; நல்ல குருதியோட்டமுடையது. நீருக்கும் குருதிக்கும் இடையில் பரவல் மூலம் ஒட்சிசனும் காபனீரொட்சைட்டும் அதன் பரப்பினுடாகப் பரிமாறப்படுகின்றன.

**பூச்சிக்குடம்பி,** (grub). இது ஒரு பூச்சியினது மென்மையான தடித்த புழுப்போன்ற யாதுமோர் குடம்பி; சிறப்பாக ஒரு வண்டினது குடம்பி.

**பூச்சியியல்,** (entomology). பூச்சிகளைப்பற்றிய படிப்போடு சம்பந்தப்பட்ட விலங்கியற் பகுதி.

**பூப்பிளவுகள்,** (gill clefts). முள்ளந்தண்டு விலங்குகளில், தொண்டையிலிருந்து வெளியே இட்டுச் செல்லுந் துவாரங்கள். இவற்றின் சுவர்களில் பூககள் காணப்படும்.

**பூப்பின்னல்,** (brachial plexus). நாற்பாதமுளிகளின் முனனவயத்துக்கு (புயத்திற்கு) நரம்புகளை வழங்குகின்ற முள்ளந்தண்டு நரம்புகளிடையே (மனிதனில் ஐந்திலிருந்து ஒன்பதாவது வரையுளள முள்ளந்தண்டு நரம்புகள்), புயப்பிரதேசததில உண்டாகியுள்ள இடைத் தொடுப்புக்கள் பூப்பின்னல் எனப்படும்.

**பூப்பென்பு,** (pubis). (1) இடுப்பென்பின முற்புறப்பகுதி ; ஓர் உடலையும் ஒரு கிளையையும் உடையது. (2) இடுப்புவளையத்தின் முற்புற, வயிற்றுப் பக்கப் பகுதி.

**பூப்பென்பொட்டு,** (pubic symphysis). இடுப்புவளையததின் இருபகுதிகளிலும் உள்ள பூப்பென்புகளிடையே நடு, வயிற்றுப்புறத்தே ஏற்பட்டுள்ள மூட்டு அல்லது இணைப்பு. இது அனேகமான முலையூட்டிகள், ஆாகேயொப்றெறிக்ஸ் (தீக்கோழி தவிாந்த ஏனைய வாழுமபறவைகளில் இல்லை), பல நகருயிர்கள் ஆகியவற்றில் காணப்படுகின்றது.

**பூமடி,** (brachial pouch). சீக்குளோஸ்ரோம்களின அல்லது சில வேளைகளில் மற்றைய முள்ளந்தண்டு விலங்குகளின, சிறப்பாகச் செலாக்கியன்களின், பூப்பிளவுகளிலுள்ள மடிபோன்ற சுவாசவறைகளுள் ஒன்று.

**பூமூடிக்கதிர்கள்,** (branchiostegal rays). இவை பூமூடிமென்சவ்வினது வன்கூட்டுத்தாங்குமமைப்புக்கள்.

**பூமூடிக்குரிய,** (branchiostegal). இப்பதம் மென்சவ்வு, கதிர்கள் ஆகியவற்றைக் குறிக்கப் பிரயோகிக்கப்படும்.



6—RR 19772 (12/66)

**பூமூடியோடு,** (branchiostegite). குறித்த சில குறுஸ்தாசெயாக்களின் பூமூடியை ஆக்கும் பரிசை மூடியின் விரிந்த, பக்கப் பகுதி.

**பூவில்,** (branchial arch). தொண்டைப் பக்கத்தில், உவையுருவில்லுக்குப் பின்பக்கத்திலே, பூச்சட்டங்களைத் தாங்கி நிற்கும் என்புவிற்கள், கசியிழைய விற்கள் ஆகியவற்றுள் ஒன்றே பூவில் எனப்படும்.

**பூவின் கீழான,** (hypobranchial). பூவில்லின் நான்காவது அல்லது கீழ்த் துண்டத்தைக் குறிக்கின்றது.

**பூவிற்கு மேலான அறை,** (suprabranchial chamber). பூவிற்கு மேலே காணப்படும் அறை.

**பெண்,** (female). சூல்களை உண்டாக்குகின்ற, சனனிகளை உடைய ஒரு தனியன்.

**பெண்குறி,** (clitoris). பெண் முலையூட்டிகளில், ஆணகுறியின் அமைப பொத்த, யோனிமடல் துவாரத்துக்குச் சிறிது முன்பக்கத்தில் உள்ள, ஒரு சிறிய, நிமிரக்கூடிய இழையத்திணிவு.

**பெப்சின்,** (pepsin). அமிலக்கரைசலில் புரதங்களைப் பெப்தோன்களாகப் பகுக்கும் நொதியம். இது முள்ளந்தண்டு விலங்குகளின் இரைப்பையில் ஐதரோக குளோரிக்கமிலத்துடன் சுரக்கப்படுகிறது.

**பெயரீடு,** (nomenclature). இருசொற் பெயரீடு பார்க்க.

**பெருங்கரு,** (macrogamete). கலத்தினுட் காணப்படும் இரு கருக்களில பெரியது. பதியமுறைக்குரிய அல்லது உடலுக்குரிய இயல்பினது என வழக்கமாக எண்ணப்படுகிறது. மாகரு.

**பெருங்குடல்,** (large intestine). பெருங்குடலானது, குருட்டுகுடல், குடல வளரி ஆகியவற்றையும் ஏறு, குறுக்கு, இறங்கு “ எசு ” உருவ குடற்குறையையும், நேர்குடலையும் உடையதாய்க் காணப்படும். அது ஐந்தடி தொடங்கி ஐந்தரையடிவரை நீளமானது. எண்ணற்ற குடற்சுரப்பிகள், தனி நிணநீர்ச் சிறுகணுக்கள் ஆகியன அதிற் காணப படும்; சடைமுளைகள், பெயரின் சுரப பிடங்கள் ஆகியன இடையா.

**பெருங்குடையம்,** (foramen magnum). இது முள்ளந்தண்டு விலங்குகளின் தலையோட்டின் பின்புறத்தே, முளையுறையிலிருந்து முண்ணாண் வெளிவரும் பிரதான திறவாகும்.

**பெருந்தின்கலம்,** (macrophage). முள்ளந்தண்டு விலங்குகளில் பரந்து காணப்படுகின்ற தின்குழியக் கலங்கள்: எல்லாத் தொடுப்பிழையங்களிலும் காணபபடுகின்றன. அங்கு காயம் எதுவும் ஏற்படின் அதனல் உண்டாகும பொருட்களை அகற்றுவதில் அவை முனைந்து நிற்கும். வலையுருவகவணித் தொகுதியை ஆக்கியவாறு நிணநீருடன் (நிணநீர்க் கணுக்களில்) அல்லது குருதியுடன் (என்பு மச்சை, மண்ணீரல், ஈரல ஆகியவற்றில்) தொடுக்கையுற்ற நிலையில காணப்படும்; இப்பாய்பொருட்களுள அன்னிய துணிக்கைகள் ஏதும் இருப்பின் அவற்றை அகற்றும். பிற பொருளெதிரிகளை ஆக்குகின்றன என்ற ஐயப்பாடும் உளது. மென்சவ்வு போன்ற பொய்ப் பாதங்களினுல் நகர்கின்றன.

**பெருநாடி,** (aorta). இதயத்திலிருந்து உடலுக்குள் குருதி செல்வதற்கென அமைநதுளள முக்கிய குருதிக் கலன.

**பெருநாடி விற்கள்,** (aortic arches). இவை முள்ளநதணடு விலங்கு முளையங்களின் சோடி நாடிகள் (வழக்கமாக 6). இவை ஒவ்வோரு பக்கத்திலுமுள்ள பூப்பிளவுகளிடையேயோ பூமடிகட்கிடையேயோ உடலகவில்லொவ்வொன்றிலும் ஒன்று வீதம் சென்று வயிற்றுப்புறப் பெருநாடியையும் முதுகுப்புறப் பெருநாடியையும் தொடுக்கும். மீன்களில், பூககளுக்கும், பூக்களிலிருந்தும், குருதியைக் கொண்டு செல்லும் நாடிகளாக இவை விருத்தியடையும். நாற்பாதமுளிகளில், மிக முன்னுக்குள்ள இரண்டு சோடிகள் (வாய்க்கும்

சுவாசத்துவாரத்துக்குச் சமனான மடிக்கும் இடையில், உள்ளவையும் பின்னையதற்கும் இரண்டாவது மடிக்கும் இடையில் உள்ளவையும) மறையும். மூன்றாவது சோடி சிரசுநாடிகளின் அண்மைப்பகுதியாகவும், நான்காவது தொகுதிவில்லாகவும், ஐந்தாவது மறைந்தும், ஆறாவது சுவாசப்பை நாடியாகவும் காணப்படும்.

**பெரும்புணரி,** (macrogamete). ஒரு சோடி இணைகின்ற புணரிகளுள் பெரியது. பொதுவாக இது பெண்புணரி எனக்கருதப்படுகின்றது.

**பெரும்புணரிக் குழியம்,** (macrogametocyte). பெரும்புணரியின் தாயக கலம்; பெண் எனக் கருதப்படுகின்றது. இப்பதம் முக்கியமாக புரோற்றிஸ்ராவோடு சம்பந்தப்படுத்தி உபயோகிக்கப்படுகின்றது.

**பெருவிரல்,** (pollex). நாற்பாதமுள்ளி விலங்குகளின் முன்னவயவத்தில் மிக உட்பக்கமாய் அமைந்துள்ள விரல்.

**பெற்றவியல்பு,** (acquired character). ஒரு தனியனின் வாழுளிலே, அதனது ஓர் அங்கத்தில் அல்லது அங்கங்களில தோன்றும் திரிபடைதலும், அவற்றின பயன்பாடு காரணமாகவோ பயனபாடற்றநிலை காரணமாகவோ தோன்றும திரிபடைதலும். இது முக்கியமாக முடமாதலின் விளைவல்ல.

**பேதம்,** (variety). ஓர் குலம. ஒரு குலவகை; ஒரு வாக்கம். இனமொன்றில் உள்ள தனியன்களாலான ஓர வகை. இவை நிலையான கடத்தப்படத்தக்க இயல்புகளைப் பொறுத்தமட்டில மாதிரியிலிருந்து வேறுபடுபவையாயும், ஆயினும் ஒரு முழுப்படியான தரப்படுத்துகையினால் மாதிரிவரைக்கும் மீளவும் கண்டுபிடிக்கக்கூடியவையாயும் காணப்படும். புவிக்குரிய அல்லது உயிரியலுக குரிய குலம். வெவ்வேறு கூட்டங்களில் சிறப்பறிவுடையவர்களினால் பல்வேறு கருத்துப்பட இப்பதம் பயன்படுத்தப்படுகின்றது.

**பை,** (sac). பொக்கணம் போன்ற அல்லது மடிபோன்ற ஓர் அமைப்பு.

**பைபிரின்,** (fibrin). குருதி உறைதலின் போது நார்கள் கொண்ட வலையுரு வடிவத்தில் படிவுவீழ்த்தப்படும் ஒரு கரையாத புரதப பதார்த்தம்.

**பைபிரினுக்கி,** (fibrinogen). குருதியின முதலுருவிலுள்ள ஒரு புரதம். பைபிரினுக்கியின திரட்சியே பைபிரின் உண்டாவதற்குக் காரணமாகும்.

**பைவாற் பருவப்புழு அல்லது சிற்றிசேர்க்கசு,** (bladder worm). சில நாடாப் புழுககளின் குடம்பி. இது ஒரு பெரிய தோற்பையினுள் புதைநதுள்ள கீடகச் சென்னியைக் கொணடுளது. இது இடைநிலை விருநது வழங்கியில் சிறைப்பையினுள் அடைபட்டிருக்கும். தீர்க்கமான விருந்து வழங்கியால் விழுஙகப்பட்டதும் இது முதிர்ச்சியடைந்த நாடாவுருப்புழுவாக வளர்ச்சியடையும்.

**பொட்டு,** (macula). ஒரு நிறப புள்ளி அல்லது நிறத்துண்டு ; ஒரு சிறிய குழி அல்லது பள்ளம் ; ஒரு சிறுமுகிழ்.

**பொதுச்சதை,** (coenosarc). இது ஹீட்றுவுருச் சமுதாயமொன்றின தனிப் பொலிப்புக்களை இணைக்கின்ற குழாய வடிவப் பொதுத் தண்டு.

**பொதுத் தொடை,** (coenenchyme). இது ஒரு கூட்டு முருகைக்கல்லினது பொலிப்புக்களை அல்லது விலங்குருப் போலிகளை ஒன்றோடொன்று இணைக்கும் பொது இழையம்.

**பொய்ப்பாதம்,** (pseudopodium). இறிசோப்பொட்டுக்களிலும் பிற புரோற்றசோவாக்களிலும் வெண்குருதிக் கலங்களிலும் இன்னபிறவற்றிலும் முதலுருவின ஓட்ட அசைவுகளுடன தொடர்புற்றதாய்க் காணப்படும் தற்காலிகக் கலவெளித்தள்ளல். இது இடப்பெயர்ச்சிக்கும், ஊட்டலுக்கும் (தின்குழியச் செயல்) உதவுவதாய் அமைந்துளது. இப்படிப்பட்ட அசைவுகளின் உடற்றொழிலியல அறியப்படவில்லை.

**பொருத்தில்கால், (proleg).** ஆர்த்திரேப் போடாக் குடம்பிகளின் மூட்டில்லா வயிற்றுத் தூக்கம். முதற் பாதவுரு.

**பொலிப்புக்கள், (polyps).** இவை சீலெண் ரெருற்றுக்களின் பலவினங்களில் உள்ள இருவகைத் தனியன்களுளொன்றும் ; அவ்விருவகைகளுள் ஒன்று பொலிப்பு அல்லது ஹீட்ரெருயிட்டு என்றும் மற்றது மெதூசா என்றும் அழைக்கப்படும். பொலிப்புக்கள் அண்ணளவில் உருளைவடிவுடையவை ; அவற்றின் உடலச்சு நீட்சியுற்றதாய்க் காணப்படும். பொலிப்புக்களின் ஒரு முனை இணைந்த நிலையிலிருக்கும். மற்றமுனை வாயையும் வாயைச்சூழவுள்ள பரிசக்கொம்புப் புன்வட்டத்தையும் கொண்டிருக்கும். அதன் சுவர் மெல்லிய இடைப்பசையை உடையதன் விளைவாக மெதூசாவுடன் ஒப்பிட்டு நோக்குகையில் மெல்லியதாய்க் காணப்படும்.

**பொறிமயிர், (trigger hair).** அழனை மொட்டின் வெளிப்பகுதியிலிருந்து விருத்தியடைந்துள்ள ஒரு குறுகிய உணர்ச்சி முளை. இதைத் தூண்டி விடுதலின் விளைவாக அழன்மொட்டு வெளித்தள்ளப்படுகின்றது.

**போசணை, (nutrition).** ஊட்டல் முறையும், அடுத்து நிகழும் உணவுத்திரவியச் சமிபாடும் தன்மயமாக்கலும், போசணை எனப்படும்.

**போட்டி, (competition).** வாழ்க்கைத் தேவைகட்கு (நீர், உணவு, ஒளி முதலியன) அங்கிகளிடையே நிகழும் போராட்டம்.

**போத்தலிக்கான், (ductus Botalli).** நாடிக்கான் பார்க்க.

**போமனினுறை, (Bowman's capsule).** இது சிறுநீரகச் சிறு குழாயின் புடகமாகும்.

**போலிப்பூ, (pseudobranch).** தொழிற்பாடற்ற அல்லது பதாங்கமடைந்துள்ள பூ. உ-ம்., செலாக்கியின் சுவாசத்துவாரப் பூ.

**போலியப் புடகம், (Polian vesicle).** அனேகமான அஸ்ரெரெருயிடெயா, ஹோலொத்துரெருயிடெயா விலங்குகளில் உள்ள குழாய்க் காற்றெருகுதியிற் காணப்படுகின்ற விளையக்கலனுட் திறக்கும் ஆரையிடைப் புடகங்கள்.

**போலியமினியன் (கோரியோன்), [false amnion (chorion)].** (1) உயர் வகை முள்ளந்தண்டு விலங்குகளில் உள்ள முதிர்மூலவுரு மென்சவ்வுகளில் இதுவும் ஒன்று ; அமினிய மடிப்பின் வெளிப்படை. (2) பூச்சிகளிலே, கருவூண் மென்சவ்விற்கு வெளியே உள்ள வன்மையடைந்த முட்டைக் கோது.

**போலி விலாவெலும்பு, (false rib).** விலாவென்புகளின் கசியிழைய வயிற்றுப்புற முனைகள் மார்புப்பட்டையுடன் நேரடியாகத் தொடுக்கப்பட்டிராவாயின், அவ்விலாவென்புகள் போலிவிலாவென்புகள் எனப்படும்.

## ம

**மகட் கருக்கள்,** (daughter nuclei). ஒரு தனிக்கலம் அனேகமாக இழையுருப் பிரிவினால் பிரிவடைந்து உண்டான இரண்டு கருக்கள்.

**மகட் கலங்கள்,** (daughter cells). இவை, அனேகமாக இழையுருப் பிரிவினால் ஒரு தனிக்கலம் பிரிந்து உண்டான இரு கலங்கள்.

**மச்சை,** (pulp). ஓர் அங்கத்தின் உள்ளே உள்ள, மென்மையான, கடற்பஞ்சு போன்ற இழையத் திணிவு. உ–ம்., மண்ணீரல மச்சை, பல்மச்சை.

**மச்சைக்குழி,** (pulp cavity). முள்ளந்தண்டு விலங்குகளின் பலவிலோ புன்பல்லிலோ அகத்தே உள்ள குழி. இது வழக்கமாக ஒடுங்கிய கால்வாயொன்றினால் தான் பதிந்துள்ள இழையங்களினுட் திறக்கும். இது தொடுப்பிழையம், நரம்புகள், குருதிக் கலன்கள், குழியின் பன்முதலாலான சுவரைப் படலிட்டிருக்கும் பல்லரும்பர்கள் என்பவற்றை உடையதாயிருக்கும். நிலையான மச்சையில் மசசைக் குழியானது அகலத் திறந்தும் அடியிலிருந்து பல்லானது தொடர்ச்சியாய் வளர்வதாயும் உளது. உ–ம்., கொறியுயிரின் வெட்டும் பல்.

**மஞ்சட் கருவில்லாத,** (alecithal). ஊன்கரு இல்லாத அல்லது மிகக் குறைவாயுள்ள (சூல்களைக் குறிபபது).

**மட்டைத்தேள்,** (centipede). கிலோபோடாப் பிரிவைச் சேர்ந்த எண்ணிறந்த மிறியப்பொட்டுப் பிராணிகளுள் இவை நீண்ட தட்டையான உருவத்தையும் ஒரு சோடிக் கால்களைக் கொண்ட பல் துண்டங்களையும் உடையன ; சுறுசுறுப்பானவை ; இரை கவ்வுகின்றவை ; முக்கியமாக இராக் காலத்தில் திரியும் பழக்கமுடையவை. இதில் பின்பக்கமாக ஒரு தனிச் சனனித் துவாரம் உள்ளது. அயன மண்டல நாடுகளில் எட்டு அல்லது பத்து அங்குலத்துக்கும் அதிகமான நீளமுள்ள பெரும் இனங்கள் காணப்படுகின்றன. முதற் சோடிக் கால்கள் கோரப்பற்களாகத் திரிபடைந்துள்ளன. இவற்றைக் கொண்டு பெரும் இனங்கள் ஆபத்தை விளைவிக்காத, ஆனால் நோவை உண்டாக்கும் காயங்களை உண்டுபண்ணும். இவை பூச்சிகளை அழிப்பதனால் மனிதருக்குப் பயனுள்ளவை.

**மடிப்பு,** (convolution). மூளை, குடல் ஆகியவற்றில் காணப்படுவது போன்ற ஒரு சுருளி அல்லது முறுகல்.

**மடக்கத்தசை,** (flexor muscle). ஒரு தசையானது அதன சுருங்கலினால் ஓர் அவயவத்தையோ பகுதியையோ மடக்குமாயின் அத்தசை மடக்கத்தசை எனப்படும்.

**மடியல்,** (lacinia). (1) பின்னுள்ள விருத்தி உடன் மூட்டின் முன்பக்கப் பகுதியின் மீது படிந்துள்ள, முன்னுள்ள விருத்தி உடன் மூட்டின் பினபுற விளிம்பின் நீட்சி. (2) பூச்சிகளின் அனுவில உள்ள உட்கான் மூட்டினது அல்லது அனுதண்டினது உட்பிரிவு.

**மண்டையிலி,** (acraniate). அக்கிரானியா விலங்குகளுள யாதுமொன்று.

**மண்டையோட்டு நரம்பு,** (cranial nerve). முள்ளந்தண்டு விலங்குகளின் மூளையிலிருந்து வெளிகிளம்பும் சுற்றயல் நரம்பு. அதாவது தலையோட்டினுள்ளே உற்பததியாகின்ற நரம்பு. இது முண்ணாணிலிருநது வெளிகிளம்பும் முள்ளந்தண்டு நரம்புகளிருந்தும் வேறுபட்டது. பலதுண்டங்களின் முதுகுபபுற, வயிறறுப்புற வேர்கள் (நரம்புவேர் பார்க்க) இந்நரம்பு களிடையே காணபபடும்; ஆனால் அவை (முண்ணாணைதைப் போன்றிராது) தனித்தனியாகக் காணப்படும். ஒவ்வொரு வேரும் எண்ணிடப்பட்டு வெவ்வேறு நரம்பெனப் பெயரிடப்பட்டுள்ளது.

ஆனால் அவற்றின எண்ணிற்கும் தலைத் துண்டு படலிற்கும் சம்பந்தம் இல்லை. மணநுகர்ச்சி, கண் நரம்புகள் முதுகுப் புற வேர்களோடோ வயிற்றுப்புற வேர் களோடோ அமைப்பொத்தவை அல்ல. உயிர்வாழும் அ னம்னியோற்றுக்களில இருமருங்கிலும் பதது மண்டையோட்டு நரம்புகளும் அம்னியோற்றுக்களிலும உயிர்ச்சுவட்டு அம்பீபியன்களிலும் பதி னொன்று அலலது பன்னிரணடு மண்டையோட்டு நரமபுகளும் உள் ளன. இவை கண்கள், காதுகள், மூக்கு, தாடைததசைகள், முகத்தோல முதலியவற்றிற்கு வழஙகும் நரம்புகளை உள்ளடக்கும்.

**மண்டையோடு,** (cranium). மூளையை மூடி மறைத்துப பாதுகாக்கினற தலை யோட்டின் பகுதி. மூளைப்பெட்டி.

**மண்ணீரல்,** (spleen). கிருனியாற் ருவில், வயிற்றுக்குழியிலே இரைப் பைக்கு அண்மையில் காணப்படுகினற, கானற்ற, சுரப்பிபோன்ற ஓர் அங்கம். இது மிகுந்த கலனமைப்பு உடையதா யும், தேய்வுற்ற செங்குருதிக் குழியங் களின் சிதைவிற்கும், புதிய வெண் குருதிக்குழியங்களின் உற்பத்திக்கும், பாத்திரமாயும் காணப்படும்.

**மண்ணீரலிரைப்பை நாடி,** (lienogastric artery). மண்ணீரலுக்கும் இரைப்பை, சதையி ஆகியவற்றின் பகுதி கட்கும் குருதி வழஙகுகின்ற நாடி.

**மண்ணீரலிரைப்பை நாளம்,** (lienogastric vein). ஈரல வாயிற்றுருகுதிக்கு ரிய நாளம்.

**மணநுகர்ச்சிக்கலம்,** (olfactory cell). மணத்தை நுகருவதற்காகச் சிறப்ப டைந்த ஒரு புலன்கலம். முள்ளந்தண்டு விலங்குகளில் இது நாசிச் சீதமென் சவ்வில புதைந்து, ஒரு கருவையும் இரண்டு மெல்லிய முளைகளையும் கொண்ட, கதிாவடிவ நரம்புக் கலங் களுள் ஒன்று.

**மணநுகர்ச்சிக் குழி,** (olfactory pit.) (1) முள்ளநதண்டில்லா விலங்குகளில் உணர்ச்சிக் கலங்களினால் படலிடப்பட்டு, மணநுகர்ச்சிப் புலனுக்குச் சாாபுத வியாய உள்ள ஒரு சிறிய பள்ளம். (2) விருத்தியடைந்து கொண்டிருக்கும் முள்ளநதண்டு விலங்குகளில், பினனடி யில் வெளி மூக்குத்துவாரங்களுள் ஒனறினைத்தோற்றுவிக்கும் பள்ளம்.

**மணநுகர்ச்சிச் சோணைகள்,** (olfactory lobes). முள்ளந்தண்டு விலங் குகளின முன மூளையின பகுதி. இது மணநுகர்ச்சிப் புலனோடு சம்பந்தப்பட் டது. இதிலிருந்தே மணநுகர்ச்சி நரம் புகள் உற்பத்தியாகின்றன.

**மணநுகர்ச்சி நரம்பு,** (olfactory nerve). மணநுகர்ச்சியஙகத்திற்குச செல்லும் நரம்பு (முதலாம் மண்டை யோட்டு நரம்பு).

**மணநுர்ச்சியங்கம்,** (olfactory organ). மணநுகர்ச்சிப் புலனுக்குரிய அங்கம். இவ்வஙகஙகள வளியினூடாகப்பரவும் வாயுக்கள், ஆவிகள் போன்ற திரவி யங்களின் சிறிதளவினால தூண்டற் பேறடையும். பரந்த கருததில், இவை விலங்கின் சூழலில் வாயுககளாயும் ஆவிகளாயும உள்ள திரவியங்களை விலங்கு பாகுபடுதத அறியச்செய் கின்றன. இத்திரவியஙகள் புலன முனைகளை அடையமுன்னர் உடறபாய பொருள்களில் கரையக்கூடும். சுவை யங்கங்களைப் போனறே மண நுகர்சசியங் கங்களும் இரசாயன வாங்கிகளாகும். இவை இரசாயனவியல்புகட்கு எதிர்த் தாக்கங்களை நல்குவன. சில விலங்கு களில் இவ்விரணடு உணர்ச்சிகளையும் சரியாக வேறுபடுத்துதல கடினம.

**மணிக்கட்டு,** (carpus). முன்ன வயவத்தில், முன்னங்கைககும அனு மணிக்கட்டென்புகளுக்கும் இடையே உள்ள பகுதி.

**மணிக்கட்டென்பு,** (carpal bone). நாற்பாதமுள்ளி முள்ளந்தண்டு விலங்குகளிலே அவற்றின் முன்னவயவத்தினது (எறத்தாழ மணிக்கட்டு எனலாம்) பாதத்தின் அண்மைப்பகுதியிலுள்ள என்புகள். ஆதியில், 10–12 என்புகளை உடைய இறுக்கமான கூட்டம். மனிதனில் எட்டு என்புகள் உள்ளன. இவை தமது அண்மைப்பகுதியில் ஆரை முன்னங்கையென்புடனும் அரந்தியுடனும், சேய்மைப் பகுதியில் அனுமணிக்கட்டென்புகளுடனும் மூட்டுற்று இருக்கும்.

**மணிக்கிருமி,** (coccus). இது ஒரு நுண்ணிய கோளவடிவ பற்றீரியம்.

**மயிர்,** (hair). ஒன்று அல்லது பல கலங்களையுடைய, இழைபோன்ற யாதுமோர் வெளிவளர்ச்சி. பலவடிவத்தில் காணப்படும். விலங்குகளின் மேற்றோலின் நூல் போன்ற அல்லது இழை போன்ற வெளிவளர்ச்சி.

**மயிர்கொட்டி,** (caterpillar). இது சிலவகைப் பூச்சிகளின் (எ.கா., வண்ணாத்திப் பூச்சிகள், அந்துக்கள் என்பன) குடம்பி. இது மென்மையான உடலுடையது; புழுப்போன்றது; நெஞ்சில் மூன்று சோடி இணைந்த கால்களையும், வயிற்றில் இணையாத, குறுகிய பொருத்தில் கால்களையும் உடையது.

**மயிர்த்துளைக்குழாய்,** (capillary). சிறிய விட்டத்தையும், மெல்லிய சுவர்களையுமுடைய எதாவது ஒரு நுண்ணிய கலன். இது ஒரு வலையுருவை உற்பத்தியாக்கும். இதனுள் இருக்கும் பாய பொருளுக்கும் இதனைச்சுற்றியுள்ள இழையங்கட்கும் இடையே விரைவாய் பதார்த்தப் பரிமாறலை ஏற்படுத்த இது உதவும். உதா., பித்தமயிர்த்துளைக் குழாய்கள், குருதி மயிர்த்துளைக் குழாய்கள், நிணநீர் மயிர்த்துளைக் குழாய்கள் என்பன.

**மயிர்ப்புடைப்பு,** (hair follicle). மயிரினவேரைச் சுற்றியுள்ள முளையுடைய மேற்றோலின் ஆழமான குழி. இது உட்டோலினுள் அதிக ஆழத்திற்குப் புதைந்து கிடக்கிறது. நெய்ச்சுரப்பியின்கான் இதனுள் திறக்கின்றது. மயிரை எழுப்புகின்ற தசை அதனோடு தொடுக்கப்பட்டுளது.

**மல்பீசியின் உடல்,** [Malpighian body (or corpuscle)]. முள்ளந்தண்டு விலங்குச் சிறுநீரகத்தில், மடிந்த மயிர்க்குழாய்களாலான கலன்கோளத்தைச் சுற்றிக் காணப்படுகின்ற, சிறுநீர்த்தாங்கு சிறுகுழாயின விரிந்த முனை. முள்ளந்தண்டு விலங்கின மண்ணீரலில், சிறிய நாடிகளை மூடிக் காணப்படும். நிணநீருருவிழையத்தாலான கோளவுருவ அல்லது உருளையுருவத் திணிவுகளுள் ஒன்று.

**மல்பீசியின் உறை,** (Malpighian capsule). போமனினுறை.

**மல்பீசியின் சிறுகுழாய்கள்,** (Malpighian tubules). பூச்சிகள், அறக்னிட்டுக்கள், மிறியப்பொட்டுக்கள் ஆகியவற்றின் பின்குடலின், முற்புறப் பகுதியினுள் திறக்கும் கழித்தற்றொழிலுடைய குழாயவடிவச் சுரப்பிகள்.

**மல்பீசியின் படை,** (Malpighian layer). உட்டோலை அடுத்துக் காணப்படும் மேற்றோற்படை. இதில் உயிர்ப்பான கலப்பிரிவு நிகழ்வுறும். புதிய கலங்கள் கொறநிறைறமடைந்து தொடர்ந்து தேய்வடைகின்ற மேற்றோலின் வெளிக் கலங்களை ஈடுசெய்யும். இப்படை தோலுக்குக் கருமைதரும் மெலனின் எனும் பதார்த்தத்தை பெருந்தொகையாகக் கொண்டிருக்கும்.

**மலம்,** (faeces). உணவுக்கால்வாயிலிருந்து வருகின்ற கழிவுப் பொருள்.

**மழமழப்பான (சாதாரண, இச்சையின்றி இயங்கும்) தசை,** [smooth (plain, involuntary) muscle]. தொடுப்பிழைய நார்களினால் ஒன்றாகக் கட்டுண்ட, குறுக்கு வரிகள் அற்றவையாய் தனித்த நீண்ட, கதிர் வடிவக் கலங்கள் பலவற்றினை உடையனவையாய்க் காணப்படும் முள்ளந்தண்டு விலங்குகளின் சுருங்கத்தக்க இழையம். இது முக்கியமாக உட்குழி

வான அங்கங்களைச் சுற்றிப் படைபடையாகக் காணப்படும். உதாரணமாக, குருதிக்கலன்கள், குடல் முதலியன. இது தன்னாட்சி நரம்புத் தொகுதியால் ஆட்சிப்படுத்தப்பட்டிருக்கும். இது மிகவும் மெதுவாகச் சுருக்கமடையும். ஓரளவு சுருங்கும் இயல்பை (இழுவிசை நிலை) உடையது. முள்ளந்தண்டில்லா விலங்குகள் பலவற்றின் (உ-ம்., மொல்லுஸ்காப் பிராணி) மெதுவாய்ச் சுருங்கும் தசையும் இதனை சற்று ஒத்ததாய்க் காணப்படும்.

**மறிவினை,** (conditioned reflex) நிபந்தனைத் தெறிவினை பார்க்க.

**மனிதப்போலிக்குரங்குகள்,** (anthropoid apes). வாழ்ந்துகொண்டிருக்கும் விலங்குகள் எல்லாவற்றுள்ளும் மனிதனோடு கிட்டிய தொடர்புடைய விலங்குகள். கிப்பன்கள், ஒருங், சிம்பன்சீ, கொரில்லா ஆகியவை மனிதப் போலிக் குரங்குகளாகும். இவை யாவும் கற்ரரீன் உயர்விலங்குகள் ; பழையவுலகில் காணப்படுவன.

**மனிதனியல்,** (anthropology). மனிதனின் இயற்கைச் சரிதை.

**மாகரு,** (meganucleus). பெருங்கரு பார்க்க.

**மாகழிநீரகங்கள்,** (meganephridia). கீற்ரேப்போடாவில் உள்ள மாதிரிக் கழிநீரகங்கள். இவை ஒவ்வொரு சோடியும் ஒவ்வொரு உடற்றுண்டத்திற் காணப்படும்.

**மாபுணரி,** (megagamete). பெரும் புணரி பார்க்க.

**மாபுணரிக்குழியம்,** (megagametocyte). பாத்துச் சிற்றுயிரிலிருந்து விருத்தியாகித் தானே மாபுணரியாக மாறும் ஓர் கலம்.

**மார்புச்செட்டைகள்,** (pectoral fins). மீனில் உள்ள முற்பக்கச் சோடிச் செட்டைகள்.

**மார்புத்தசை,** (pectoralis). முள்ளந்தண்டு விலங்குகளில், அவற்றின் முன்னவயவத்தின் மேற்பாகத்தை மார்பு வளையத்தின் வயிற்றுப்புறப் பகுதியுடன் இணைக்கும் தசை.

**மார்புப்பட்டை,** (sternum). முள்ளந்தண்டு விலங்குகளின் நெஞ்செலும்பு. மாதிரி ஆர்த்திரேப்பொட்டுத் துண்டத்தின் வயிற்றுப்புறத் தகடு.

**மார்புப்பரிசம்,** (plastron). (1) கடலாமைகள், சருகாமைகள் முதலியவற்றின் வயிற்றுப்புறவென்புப் பரிசை. (2) இதையொத்த பிறவமைப்பு. (3) நன்னீர்வாழ் பூச்சிகளில், மேற்புறத் தோலை மூடிய நிலையில் மயிர்களால் வைத்துக்கொள்ளப்படுகின்ற வாயுப்படலம் அல்லது வாயுக்குழிப்படை.

**மார்புவளையம்,** (pectoral girdle). முள்ளந்தண்டு விலங்குகளில், முன புறத்திலுள்ள சோடியான இடப்பெயர்ச் சிக்குரிய தூக்கங்கள் மூட்டுண்டிருக்கும் வன்கூட்டுச் சட்டவமைப்பு.

**மார்பென்புகள்,** (sternebrae). துண்டுபட்ட நெஞ்செலும்பின் அல்லது மார்புப் பட்டையின் பிரிவுகள்.

**மாறல்,** (variation). சில குணவியல்புகளில் மாதிரியிலிருந்து உண்டான விரிவு.

**மாறுவெப்பநிலையுள்ள,** (poikilothermic). சூழல்வெப்ப குருதிநிலையான; இங்கு உடல் வெப்பநிலையானது சூழல் வெப்பநிலையை அண்ணளவில் ஒட்டியதாய் அமைந்திருக்கும். சூழல்வெப்ப நிலை மாற, உடல் வெப்பநிலையும் அவ்வாறு மாறுகின்றது. பறவைகள், முலையூட்டிகள் தவிர்ந்த ஏனைய விலங்குகளின் சிறப்பியல்பாக இது உளது. நீர்வாழ், மாறுவெப்ப நிலையுடைய விலங்குகள் சுற்றவுள்ள நீரின் வெப்பநிலையைக் கொண்டவையாயிருக்கும்: ஆவியாதல் மூலம் குளிர்ச்சி

யடைதலினாலோ, கதிரவன் கதிர்வீசலினால் வெப்பமடைவதாலோ; தசை அப்பியாசத்தினாலோ, தரைவாழ் விலங்குகளின் உடல் வெப்பநிலையானது சூழவுள்ள வளியினதைக் காட்டிலும் ஓரளவு வித்தியாசமடையலாம்.

**மிதக்கும் விலாவென்பு (போலிவிலாவெலும்பு),** [floating rib (false rib)]. மார்புப்பட்டையுடன் தமது வயிற்றுப்புற முனை இணையாததாகக்காணப்படும் விலாவென்புகளே இவை.

**மிளிரி,** (enamel). 90% இற்கும் அதிகமாகக் கல்சிய மகனீசிய உப்புக்களை உடைய வன்மையான ஒரு பதார்த்தம். இது பன்முதலின் மீது ஒரு மூடி போன்றோ, பல்செதில் ஆகியவற்றினை முற்றாகப் போர்த்தோ காணப்படும்.

**மீள்சத்திக் கசியிழையம்,** (elastic cartilage). ஒரு மஞ்சள்நிற, வளையத்தக்க கசியிழைய வகை. இது முக்கியமாக வெளிக்காது, ஊத்தேக்கியோவின் குழாய், துடுப்புக் கசியிழையங்கள், இறிஸ்பேக்கினதும் சனரோறினியினதும் கசியிழையங்கள், மூச்சுக் குழல்வாய் மூடி ஆகியவற்றில் உள்ளது. மீள்சத்தி நார்கள் தாயத்தினூடு புகுந்து எல்லாத் திசைகளிலும் செல்வதை இதில் காணலாம்.

**மீளவிழுதசை,** (retractor). தான் சுருங்குதலின் விளைவாக ஓர் அங்கத்தையோ அல்லது உடலின் ஒரு பகுதியையோ பின்னுக்கு, அல்லது உடலை நோக்கி, இழுக்கவல்ல ஓர் தசை.

**முக்கூர் வால்வு,** (tricuspid valve). முலையூட்டிகளின் இதயத்தில் வலது இதயச் சோணைகக்கும் வலது இதய வறைக்கும் இடையே உள்ள வால்வு. இது மூன்று மென்சவ்வு மடிப்புக்களை உடையதாயக் காணப்படும்.

**முக்கோணத் தசை,** (deltoid muscle). தோள்முட்டை மூடிக்கிடந்து புயத்தைப் பக்கவாட்டாக உயர்த்த உதவியாக உள்ள ஒரு பெரிய முக்கோணத் தசை. இது சிறுசாவி என்பின் புறப்பகுதியில் உள்ள மூன்றிலொரு பாகத்தின் மேல் முன்பக்கப் பகுதியிலிருந்தும், தோள்பட்டையென்பின் தோட்பட்டை முளை, முள் ஆகியவற்றிலிருந்தும் கிளம்பி, புயவென்பின் தண்டின நடுப் பகுதியின் புறப்பக்கத்துள் செருகப் பட்டுள்ளது.

**முகப்பு,** (facet). மூடுதற்கான ஒரு மழமழப்பான, தட்டையான, அல்லது உருண்டையான பரப்பு.

**முட்டை,** (egg or ovum). அசையாத ஒரு பெண் புணரி.

**முச்சை நரம்பு,** (trigeminal nerve). முள்ளந்தண்டு விலங்குகளின ஐந்தாம் மண்டையோட்டு நரம்பு. இது முலையூட்டிகளில் முக்கியமாக உணர்ச்சியோடு சம்பந்தப்பட்டதாய் பல்லுக்கும் முகத்தின் தோலுக்கும் வழங்குகிறது.

**முட்டைச் சுருளிப்படை,** [chalaza (of egg)]. பறவை முட்டையில, கருவூணை ஓட்டு மென்சவ்வுடன் தொடுக்கின்ற, அடர்த்தியான வெண்கருவுடைய, சுருளியாகத் திரிக்கப்பட்டுக் கதிர்வடிவுடைய நார்கள் இரண்டினுள் ஒன்று.

**முட்டை மென் சவ்வு,** (egg membrane). முட்டையோட்டினைப் படலிட்டுள்ள விறைப்பான இழையப்படை.

**முட்டையாக்கம்,** (oogenesis). பெண் புணரி, அதாவது முட்டை, உணடாதல், விருத்தியடைதல், முதிர்ச்சியடைதல் என்பன.

**முட்டையோடு,** (egg case). முட்டையில் காணப்படுகின்ற ஒரு பாதுகாப்புப் போர்வை.

**முடி (பல்லினது),** [crown (of tooth)]. பல்லின் வெளியே தெரியும் பகுதி; சிறப்பாக அரைக்கும பரபபு.

**முடியுருவான,** (coronary). முடி வடிவான ; இப்பதம் நாடிகள், என்புகள், குடா, இணையங்கள், பின்னல்கள், நாளங்கள் ஆகியவற்றைக் குறிக்கப் பிரயோகிக்கப்படும். உ-ம்., முடியுருநாடி, முடியுரு என்பு, முடியுருப் பின்னல்.

**முண்ணாண்,** (spinal cord). முள்ளந்தண்டுக் கால்வாயில் உள்ள நரம்பிழையம்; முண்ணாண் மைய விழையம்.

**முண்மீன்,** (bony fish). இது தெலையோஸ்ற்றெயி கூட்டத்திலுள்ள ஒரு மீன். இது வழக்கமாக நன்கு என்பாக்கிய வனகூடு ஒன்றினை உடையது.

**முத்தலைச் தசை,** (triceps muscle). மூன்று சென்னிகளை அல்லது செருகலகளைக் கொண்ட ஒரு தசை.

**முத்துத் தாயி,** (mother of pearl). மொல்லுஸ்காப் பிராணிகளின் ஓடுகளைப் படலிட்டிருக்கும் மிருதுவான படை. இது சுண்ணாம்புள்ள அல்லது சேதன வுறுப்புக்குரிய பதாரத்தங்களைக் கொண்டிருக்கும். வழக்கமாகப் பன்னிறங் காட்டுவதாயும் சிலவேளைகளில் பிரகாசமான நிறமுடையதாயும் காணப்படும். சிற்பியகவொளிரி எனும் பெயரும் இதற்குண்டு.

**முதலான,** (primordial). ஆதியான, ஆரம்பத்தே உள்ள, முதற்தொடங்கிய, முதல் உண்டான, முட்டைகள், கலம், தோற்பை முதலியவற்றைக் குறிக்கும்.

**முதலுரு,** (protoplasm). ஒரு கலத்தில் முதலுரு மென்சவ்வு உட்பட அதனுள்ளடங்கிய பதார்த்தம் அல்லது முதலுரு. ஆனுல் வழக்கமாகப் பெரும் வெற்றிடங்கள், சுரப்புத் திணிவுகள் உட்செலுத்தப்பட்ட பொருட்கள் ஆகியவை இதில் அடங்குவதில்லை. இது விலங்குகளிலும் தாவரங்களிலும் கருவாகவும் குழிய முதலுருவாகவும் வியத்த மடைந்துளது.

**முதற்கான்மூட்டு,** (protopodite). ஆர்த்திரோப்பொட்டு விலங்கினது அவயவத்தின் அடித்துண்டம்.

**முதன்மார்பு,** (prothorax). பூச்சிகளினது மார்பை அமைத்துள்ள மூன்று துண்டங்களிலும் ஆக முற்பக்கமாய் அமைந்துள்ளது. இது ஒரு சோடி நடக்குங் கால்களை உடையதாய்க் காணப்படும். ஆனுல் இதில் செட்டைகள் காணப்படா.

**முதன்முதுகு,** (pronotum). பூச்சிகளினது முதன்மார்பிலுள்ள முதுகு.

**முதிர்மூலவுரு,** (foetus). கருப்பையிலோ முட்டையிலோ காணப்படுகின்ற ஒரு விலங்கின் குட்டி அல்லது முளையம் முதிர் மூலவுரு எனப்படும். பொதுவாக இப்பதம கருப்பையிலோ முட்டையிலோ விருத்தியடைந்து கொண்டிருக்கும் பிற்பருவக் குட்டிகளைக் குறிக்கப் பெரிதும் வழங்கப்படுகின்றது. மனிதனில் மூன்ரும் மாத இறுதி தொடங்கிப் பிறப்பு வரையும் உள்ள சிசுவிற்கு இப்பெயரும், தொடக்கப் பருவங்களிலுள்ள சிசுவிற்கு முளையம் என்னும் பெயரும் வழங்கப்படும். இப்பதம் முக்கியமாக முள்ளந்தண்டு விலங்குகளின் குட்டிகளை அல்லது முளையங்களையே குறிக்க வழங்கப்படுகின்றது.

**முதிர்மூலவுரு மென்சவ்வுகள்** (foetal membranes). மம்மாலியா விலங்குகளில் முளையத்தின் போசணை, சுவாசித்தல், முளையத்தைப் பாதுகாத்தல், ஆகியவற்ருேடு சம்பந்தப்பட்ட முளையத்துக்கப்புறமான சவ்வுகள். இவை கருவூண்பை, அமினியன், கோரியோன், அலந்தோயி என்பனவாம்.

**முதிர்வு,** (maturation). மூலவுயிர்க்கல விருத்தி முறுப் பெறல்; இது குரோமாற்றினின் ஒடுங்கற் பிரிவைக் கொண்டிருக்கும். ஒடுங்கற் பிரிவினுல் உடலுக்குரிய அல்லது இருமடியான தொகையிலிருந்து நிறமூர்த்தங்கள் பிறப்புரிமையியைபுக்குரிய அல்லது ஒருமடியான தொகைகருத் தாழ்த்தபடுதல்,

**முதுகுநாண்,** (notochord). முளையக் கோர்டாற்றுக்கள் யாவற்றிலும், இவ் வருணத்தின் (கோர்டாற்று) தாழ்ந்த உறுப்பினர் சிலவற்றின் நிறையுடலிகளிலும், நீள்பக்கமாய் அமைந்து விறைப்பாகக் காணப்படும் ஒரு கோல். இது மைய நரம்புத் தொகுதிக்கும உணவுச் சுவட்டுக்கும் (சமிபாட்டுத்தொகுதி) இடையே உளது. முள்ளநதணடு இதனைச சுற்றி விருத்தியடைவதற்கு இது ஓர் அச்சாக அமைநதுளது.

**முதுகுப்பக்கப் பெருநாடி,** (dorsal aorta). தலை, சில இனங்களில முன் அவயவங்கள ஆகியவை தவிர்ந்த உடலின் ஏனைய பாகங்கட்கு நாடிக் குருதி செல்வதற்கென அமைநதுள்ள முள்ளந்தண்டு விலங்குகளின் நாடி. இது முள்ளந்தண்டுக்குச் சற்றுக் கீழே அதன் நீளத்திற் பெரும் பகுதியில காணப்படும். நாற்பாதமுள்ள முள்ளநதண்டு விலங்குகளில அது தொகுதி வில்லின் (முலையூட்டிகளில் இவ்வில லும், சிலவேளைகளில் முதுகுப்பக்கப் பெருநாடியும் பெருநாடி எனபபடும்) தொடராகும். மீனில், பூககளிலிருநது குருதியை வாங்கும் நாடிகளிலிருநது (வெளிக்காவு பூ நாடிகள்) இது தோனறும். அது செல்கையில் உடலகத்துக்கும் அவயவங்கட்கும் பல பெரும் கிளைகளை விடுத்துக் கடைசியில் வாலில் வாலுடியாக முற்றுப்பெறும்.

**முதுகுப்பகுதி,** (notum). இன்செகறுவின முதுகுப்பட்டை (முதுககோது).

**முதுகுப்பட்டை,** (tergum). ஆர்த்திரோப்பொட்டு விலஙகுகளின் உடற்றுண்டம்; முதுகுப்பகுதி, பொதுவாக முதுகு. பாலூக்கிளின் முதுகுப்புறத தகடு.

**முதுகுப்பாதம்,** (notopodium). அன்னெலிட்டுப் புழுக்களின் பரபாதமுளையின் முதுகுப்புறப் பகுதி.

**முருகைக்கல்,** (coral). (1) அன்தொசோவாவின் சில இனங்களாலும் சில ஹீட்ரெருசோவாவாலும உண்டாக்கப்படும் மிகப்பளுவான சுண்ணும்பு சேர்ந்த வன்கூடு. (2) இவ்வன்கூட்டினை ஆக்கும் பொலிப்புக்களாலான சமுதாயங்கள.

**முருகைக் கிண்ணம்,** (corallite). முருகைக் கல்லின் தனியொரு பொலிப்பினது கிண்ணம்.

**முருகைக்கூடு,** (corallum). கூட்டு முருகைக கல்லின் வனகூடு.

**முருகைச் சுண்ணும்புக்கல்,** (coral lime stone). முருகைக கறகளின சுண்ணும்பு வனகூடுகளினுல் ஆக்கபபட்டதும் அனேகமாக கலசியம் காபனேற்றினுல் இணைக்கபபட்டதுமான ஒரு பாறை.

**முருகைப் பார்த் தொடர்,** (coral reef). சமுதாயஙகளாய் வாழும் முருகைக் கற்களின் வன்கூடுகளினுல உண்டான ஒரு சுண்ணும்பு சேர்நத மேடு. வெவ்வேறு விதிதங்களில் தோன்றிய முருகைப் பார்த் தொடர்கள். முருகைக்கற்றீவு, தடுப்புபபார்த தொடர், விளிம்புப் பார்த் தொடர் என அழைக்கப்படும்.

**முருகையுருப் பிராணி,** (coralline). (1) முருகைக்கலலை ஒத்த; ஹீட்ரெருசோவாவையும், பொலிசோவாவையும் குறிக்கப் பிரயோகிக்கப்படும் பதம். (2) உயிர்ச்சுவடுகளாகவுள்ள பொலிசோவா, மொலலுஸ்கா ஆகியவற்றைக் கொண்ட பிளையொசீன் காலச் செங்குத்துப் பாறையை அல்லது பாறையைக் குறிக்கப பிரயோகிககப்படும்.

**முலைக்காம்பு,** (nipple). பெண்முலையூட்டிகளின் பான்மடிசசுரப்பியின் முனை நீண்டிருக்கும் பகுதி. பால் உண்டாகும சுரப்பிகள் இதிற் திறக்கின்றன.

**முலைச்சுரப்பி,** (mammary gland) சிறப்பாகப் பெண் முலையூட்டிகளில அவற்றின் வயிற்றுப் புறததே காணப்படும் பால் உண்டுபண்ணும் சுரப்பி. இது ஒருவேளை திரிபுற்ற வியர்வைச்

சுரப்பியாய் இருக்கலாம். இதன் வளர்ச்சியும் தொழிற்பாடும் சனனி ஓமோன்களால் பாதிக்கப்படலாம். சுரப்பியின் நிலை வழக்கமாகக் காமவெப்பச் சக்கரத்தோடு மாறுபடுகின்றது. உண்மையான பால் உற்பத்தியானது கபச் சுரப்பிப் பால்பிறக்கும் ஓமோனில் தங்கியுளது.

**முலையூட்டி,** (mammal). நாற்பாதமுளி முள்ளந்தண்டு விலங்குகளின் ஒரு வகுப்பாய மாம்மாலியாவைச் சேர்ந்த யாதுமோர் உறுப்பினர்.

**முழங்கைத் தலைமுளை,** (olecranon process). முலையூட்டிகளில், முன்னவயவத்தை நீட்டுகின்ற தசைகள் தொடுத்திருப்பதற்காக, முழங்கை மூட்டுக்கு அப்பால் நீண்டு, அரந்தியிற் காணப்படும் என்பு முளை.

**முழந்தாள் வளைவு,** (genu). (1) ஓர் அங்கத்திலோ பகுதியிலோ காணப்படும் ஒரு முழந்தாள் வளைவு. (2) வன்சடலத்தின் முன்பக்க முனை.

**முழுப்பூ,** (holobranch). இரு மருங்கிலும் பூவிழைகள் கொண்ட ஒரு பூ.

**முள்,** (spine). கூரியமுனையுள்ள ஒரு சிறிய முளை ; ஒரு முள்ளந்தண்டெலும்பின் கூரான முளை. உ-ம்., நரம்பு முள் ; ஒரு செட்டைக்கதிர்; தோற்பட்டைப் பீடம்.

**முள்ளந்தண்டு விலங்கு,** (vertebrate). முதுகெலும்பை அல்லது முள்ளந்தண்டை உடைய விலங்கு.

**முள்ளந்தண்டென்பு,** (vertebra). (1) முள்ளந்தண்டை உருவாக்கியுள்ள என்பு அல்லது கசியிழையத் துண்டங்களுள் ஒன்று. (2) ஒபியூரொயிட்டின் புயத்தில் உள்ள சிற்றென்புகளுள் ஒன்று.

**முள்ளென்பு,** (spine). முதுகெலும்பு அல்லது முள்ளந்தண்டு.

**முள்ளென்பு நாடிக்கால்வாய்,** (vertebrarterial canal). உயர் முள்ளந்தண்டு விலங்குகளில், விலாவென்பின் இருதலைகட்கும் முள்ளந்தண்டென்புக்கும் இடையே முள்ளந்தண்டு நாடி செல்வதற்காக உள்ள கால்வாய்.

**முளையத்துக்கப்புறமான மென்சவ்வுகள்,** (extra embryonic membranes). முதிர் மூலவுரு மென்சவ்வுகள் பார்க்க.

**முளையம்,** (embryo). தானாக இயங்கும் நிலையை அடைவதற்கு முன்னர் விருத்தியின் தொடக்கப் பருவங்களில் உள்ள ஓர் அங்கி முளையம் எனப்படும்.

**முளையவியல்,** (embryology). முளையங்கள் உருவாதலையும் விருத்தியடைதலையும் பற்றிய கல்வி.

**முளையவுரு மென்சவ்வுகள்,** (embryonic membranes). போசணை முளையத்தின் சுவாசித்தல், முளையத்தைப் பாதுகாத்தல் ஆகிய தொழில்களோடுசம்பந்தப்பட்ட, முள்ளந்தண்டு விலங்குகளினது முளையவுருவிற்குப் புறமான அமைப்புகளே முளையவுரு மென்சவ்வுகள் எனப்படும். அவை வருமாறு :—அமினியன், கோரியோன், அலந்தோயி என்பன.

**முளைவால்,** (cercus). பலவகை ஆர்த்திரோப்பொட்டுப் பிராணிகளினது வயிற்றின் நுனியில் காணப்படும் ஓர் இணைந்த தூக்கம். சில பூச்சிகளில் செவிப்புலன் மயிர்களைத் தாங்கி நிற்கும் தூக்கம்.

**முற்சொண்டு,** (labrum). பூச்சியினங்களில், தகடுபோன்ற மேற்சொண்டு : கஸ்திரோப்போடாப் பிராணிகளில் துவாரத்தின் வரம்பின் வலதுபக்கம் அல்லது வெளிச் சொண்டு.

**முற்பக்கமான,** (anterior). தலை நுனிக்கு அண்மையிலுள்ள ; மனிதவுடலமைப்பியலில் வயிற்றுப்புறமான; அச்சிலிருந்து வெளிப்பக்கமாக நோக்கிக் கொண்டிருக்கின்ற ; முன்னுள்ள.

**முன்கடைவாய்ப் பற்கள்,** (premolars). முலையூட்டிகளிற் காணப்படுகின்ற அரைக்கும் பற்கள் அல்லது முன்கொ

டுப்புப் பற்கள். இவை பாற்பல்லமைப்பிலும் காணப்படும்.

**முன்காக்கையலகுருப்போலி,** (precoracoid). மார்புவளையத்தின் முற்புறமாய் அமைந்துள்ள வயிற்றுப்புற வென்பு.

**முன்குடல்,** (foregut). முன்பக்கப் புறமுதலுருப்படையின் உண்முக மடிதலிலிருந்தோ முளையத்தின் வாய் வழியிலிருந்தோ பெறப்பட்ட, ஒரு விலங்கின் உணவுக்கால்வாயின் அப் பகுதியே முன்குடல் எனப்படும்.

**முன்குழிவான,** (procoelous). முற பக்கம் குழிவுடையதாயும் பிற்பககம் குவிவுடையதாயும் உள்ள, முள்ளந் தண்டென்பின் மையத்தியைக் குறிக்கும்.

**முன்கை,** (fore arm). உயர்விலங்குகளில், முழங்கைக்கும் மணிக் கட்டிற்கும் இடையே காணப் படுகின்ற புயத்தின் அல்லது முன்னவயவத்தின் பகுதி ; முன்னங்கை ; பிற விலங்குகளில் தொழிலொத்த பகுதி

**முன்சிறுகுடல்,** (duodenum). முள்ளந்தண்டு விலங்குகளில், குடல் வாயை அடுத்து, சிறுகுடலின் பகுதியாய் அமைந்துள்ள பகுதி. இதன் சுவர்களின் அமைப்பிலிருந்து இதை நன்கு வேறு பிரித்து அறியலாம். மனிதனில் இது 12 அங்குல நீளமுடையது.

**முன்தோற்செட்டை,** (prepatagium). பறவைகளில் மேற்புயத்துக்கும் முற் புயத்துக்கும் இடையே நீட்சியுற்றுக் காணப்படும் தோன்மடிப்பு அல்லது இறகுமென்சவ்வு.

**முன்மூர்த்தம்,** (prosoma). அறக்னிடாவில், உற்பத்தித் துவாரத்தை உடைய துண்டத்துக்கு முன்னுள்ள துண்டங்கள் அனைத்தையும் கொண்டுள்ள உடற்பிரதேசம் ; அக் கறினுவில் பாத தாடைமூர்த்தத்துடன் பாதமூர்த்தத்தையும் சேர்த்து முன் மூர்த்தம் எனப்படும்.

**முன்மூளை,** (forebrain). முள்ளந் தண்டு விலங்குகளில், முளையத்தின் முதலாவது, அதாவது முன் பக்க மூளைப்புடகத்திலிருந்து பெறப் பட்ட மூளையின் பகுதியே இது. இது மணநுகர்ச்சிச் சோணைகள், மூளையவரைக் கோளங்கள், எந்திமூளை ஆகியவற்றை உடையதாயிருக்கும். முதலாவது, அதாவது முற்பக்க மூளைப்புடகமேதான் இது.

**முன்மேற்றுடையம்,** (premaxilla). அனேகமான முள்ளந்தண்டு விலங்குகளில் மேற்றுடையத்தின் முன்பகுதியாய் அமைந்துள்ள உட்டோலென்பு ; பற்களை (முலையூட்டிகளில் வெட்டும் பற்கள்) இது கொண்டிருக்கும். பறவைகளில் மேலலகின் பெரும்பகுதியும் இதுவாயிருக்கும்.

**முன்னவத்தை,** (prophase). உடுவுரு உண்டாகும்வரை நிகழ்கின்ற, இழையுருப்பிரிவின் அல்லது ஒடுக்கற் பிரிவின் ஆரம்பநிலைகள்.

**முன்னுப்புப் போலியென்பு,** (presphenoid). பல முள்ளந்தண்டென்புகளில், அடி ஆப்புருவென்பிற்கு முன்னுள்ள ஒரு மண்டையோட்டென்பு.

**முன்னிடுப்புச் சந்து,** (precoxa). சில குறுஸ்ராசெயன்களில, அரைச்சந்துக்கு முன்னுள்ள ஓர் அடி மூட்டு.

**முன்னிற்குஞ் சுரப்பி,** (prostrate gland). விந்துக்கு, தொழில் இன்னதென அறியப்படாத ஒரு பதார்த்தத்தை நல்குவதாய் அமைந்து, முலையூட்டிகளின் ஆண் இனப் பெருக்கத் தொகுதியிற் காணப்படும் ஒரு சுரப்பி. இதன் பருமனும் சுரக்கும் சக்தியும் ஆண்மை ஊக்கிகளினுல் கட்டுப்படுத்தப்படுகின்றன.

**முன்னாகவென்புமுளை,** (prezygopophysis). முன்னுள்ள முள்ளந்தண்டென்புடன் மூட்டுண்டிருப்பதற்காக, நரம்புவில்லின் முற்பக்கத்தே உள்ள ஓர் முளை.

**மூக்கு,** (nose). காற்றைச் சுவாசிக்கும் முள்ளந்தண்டு விலங்குகளின் முகத்

தில் உள்ள முன்னீட்சி. இதனூடாகச் சுவாசப்பாதைகள் செல்லும். இப்பாதைகளில் புலன் மணநுகர்ச்சி மேலணி காணப்படுவதால் மணத்துக்குரிய புலனோடு சம்பந்தப்பட்டதாயும் இது உளது.

**மூக்குக் குழி, (nasal cavity).** நாற்பாத முளிவிலங்கின் தலையில் மணநுகர்ச்சியங்கத்தைக் கொண்டிருக்கும் குழி. இது வாயோடும் தலையின் மேற்பரப்போடும் முறையே உண்மூக்குத் துவாரத்தாலும் வெளிமூக்குத் துவாரத்தாலும் தொடர்பு கொண்டுளது. இது சீதமென்சவ்வினால் படலிடப்பட்டிருக்கும்.

**மூக்குத் துவாரங்கள், (nares).** முள்ளந்தண்டு விலங்குகளின் நாசித்துவாரங்கள். மண நுகர்ச்சியங்கத்திலிருந்து வரும் துவாரங்கள். தலையின் மேற்பரப்பில் உள்ள வெளி மூக்குத் துவாரங்கள், அல்லது வாய்க்குட் செல்லும் உள் மூக்குத் துவாரங்கள்; வழக்கமாகச் சோடியாகவே காணப்படும்.

**மூக்கென்பு, (nasal bone).** மனிதனின் மூக்கில் பாலமாய் அமைந்துள்ள ஒரு சோடிச் சிறு என்புகளுள் ஒன்று. பிற முள்ளந்தண்டு விலங்குகளில் இதையொத்த, தலையோட்டுப் பகுதி.

**மூச்சுக்குழல்வாய், (glottis).** உயர் வகை முள்ளந்தண்டு விலங்குகளில் தொண்டையிலிருந்து வாதனாளிக்குட் செல்லுந் துவாரம்.

**மூச்சுக்குழல்வாய்மூடி, (epiglottis).** (1) பொலிசோவாவில உள்ள வாய் மேலங்கம். (2) இன்செக்ற்றுவிலுள்ள மேற்றொண்டையென்பு. (3) மம்மாலியாவில் மூச்சுக்குழல்வாயைப் பாதுகாத்திருக்கின்ற கசியிழைய மடி.

**மூட்டு, (articulation).** இரண்டு அல்லது பல என்புகட்கிடையே உள்ள அசையக்கூடிய அல்லது அசையவியலாத தொடுப்பு.

**மூட்டுக்குமிழ், (condyle).** ஓர் என்பின் முனையில் காணப்படும் ஒரு மழமழப்பான உருண்டையான வெளித்தள்ளல். இது அருகே உள்ள என்பின் தாங்குகுழியினுள் பொருந்தும். உ-ம்., கீழ்த்தாடையின் மூட்டுக்குமிழ்.

**மூட்டுச் சில், (patella).** (1) சிலந்திகளிலும் இவற்றின் இனவகைகளிலும தொடைக்கும் கணைக்காலுக்கும இடையே உள்ள மூட்டுக்காலின் ஒரு குறுகிய துண்டம். (2) மனிதனின முழங்காற் சில்லும், பிற முள்ளந்தண்டு விலங்குகளில் இதையொத்த என்பும்.

**மூட்டுறைப் பாய்பொருள், (synovial fluid).** மூட்டுறை மென்சவ்வினால் சுரக்கப்படும் பாகுநிலையான பளபளப்புடைய சுரப்பு.

**மூட்டென்பு, (articular bone).** இது முலையூட்டிகள் தவிர்ந்த முள்ளந்தண்டு விலங்குகளினது கீழ்த்தாடையினடியில் உள்ள ஓர் என்பு. இவ்வென்பினால் தாடை நாற்புடையவென்போடு வழக்கமாக மூட்டப்பட்டிருக்கும்.

**மூடித்துண்டு, (cover slip).** நுணுக்குக்காட்டியினால் பரிசோதித்தற் பொருட்டுக் கனடாப் பிசினில் (அல்லது இன்ன பிற பதார்த்தத்தில்) தயார் செய்யப்பட்ட மாதிரியுருக்களை (வெட்டுக்கள், முழு ஏற்றுக்கள் முதலியனவற்றை) வழுக்கியில் வைத்து மூடுவதற்காகப் பயன்படும் மிகவும் மெல்லிய (ஏறத்தாழ $\frac{1}{5}$ மி.மீ.) கண்ணாடித்துண்டு.

**மூடியுரு, (operculum).** ஒரு துவாரத்தை மூடியிருக்கும் மடிப்பு. (1) சில கடல் அன்னெலிட்டுப் புழுக்களின் பரிசக் கொம்பின் பருத்த இலை; விலங்கானது உள்ளிழுத்ததும் அது குழாயின் வாயை மூடும். (2) பிறியொசோவனின் விலங்ககத்தின் ஓரம்; இது உடல் உள்ளிழுத்ததும் மூடிக்கொள்ளும். (3) கஸ்திரோப்பொட்டு மொல்லுஸ்காப் பிராணிகளிலும் செபலொப்பொட்டு மொல்லுஸ்காப் பிராணிகளிலும் அவற்றின் உடல் உள்ளிழுக்கப்பட்டதும் ஓட்டுத்துவாரத்தை மூடி இறுக்கிக்கொண்டிருக்கும் ஒரு கொம்பாலான தட்டு. (4) தேள்களின உற்பத்திக் கான்களில் உள்ள வெளித்

துவாரங்களை மூடிக்காணப்படுகின்ற, விருத்தியிலித் தூக்கங்கள் ஒரு சோடியினால் உண்டான ஒரு தட்டு. (5) அனேகமான மீன்களின் தலையின் பக்கத்[illegible] காணப்படுகின்ற ஒரு பிணைச்ச[illegible] மடிப்பு. அது பூப்பிளவுவரிசை [illegible]தையும் மூடும்.

**மூடுபடை,** (tegmen). (1) கிறிகெருயிடெயாவை மூடியுள்ள கிண்ணமூடிகள். (2) ஆண் பூச்சிகளிற் காணப்படும் ஒன்பதாவது வயிற்று முதுகுப்பட்டை. (3) ஓர்தொப்ரெருவின் முற்பக்கச் செட்டை. (4) செவிப்பறைக் குழியை மூடியிருக்கும் ஒரு மெல்லிய என்புத் தகடு.

**மூதாதையரியல்பு மீட்சி,** (atavism). ஒரு மூதாதையின் இயல்பொன்று பல சந்ததிகளில் தோன்றுதிருந்து வழித் தோன்றல்களில் மீண்டும் தோன்றுதல்.

**மூலநாடி,** (truncus arteriosus). அம்பீபியனின் அல்லது முதிர்மூலவுருவினது இதயத்தின் மிகமுற்பக்கமாக உள்ள பிரதேசம். இதயவறையிலிருந்து இதனூடாகக் குருதி செலுத்தப்படுகிறது.

**மூலவுயிர்க்கலம்,** (germ cell). புணரிகள் பார்க்க.

**மூலவுயிர்ப் படை,** (germ layer). முளையவிருத்தியின் ஆரம்பப் பருவங்களில் வியத்தமடைந்துள்ள, கலங்களாலான படைகளுள் எதுமொன்று. புன்னுதரன் அல்லது இதையொத்த முளைய வடிவம் உண்டாதலின் போது மேலரும்பர், அதாவது புறமுதலுருப்படையும் உட்பக்கத்தே உள்ள கீழரும்பர், அதாவது அகத்தோற்படையும் உண்டாகின்றன. இவையிரண்டும் மேலணிபோன்ற இயல்பின. பின்னர், மூன்றுவது படையாகிய இடையரும்பர் வழக்கமாக அவையிரண்டிற்குமிடையே தோன்றும். அது பலவற்றில் கீழரும்பரிலிருந்து தோன்றும்.

**மூலவுயிர் மேலணி,** (germinal epithelium). சூலகத்தின் பஞ்சணையை மூடியிருக்கும் கம்பமேலணிப் படை.

**மூளி,** (cerebellum). முள்ளந்தண்டு விலங்குகளினது பின் மூளையின் முதுகுப்புறமேற்பரப்பின் முன்புற முளையின் வெளி வளர்ச்சி. இது வெறும் குறுக்குப் பிணைப்பாகக் சீக்குளோஸ்ரோம்களில் தொடங்கிப் பறவைகள், முலையூட்டிகள் (நரைநிறப் பொருளாலான மேற்பட்டையை அது முலையூட்டிகளில் கொண்டிருக்கும்) ஆகியவற்றின் மூளையில் கணிசமான அளவு விருத்தியடைந்துளது. இது சிறப்பாகச் சிக்கலான தசையசைவுகளை இயைபாக்குவதில் தொடர்பு பூண்டுளது.

**மூளை,** (brain). இருபக்கச் சமச்சீர் விலங்குகள் யாவற்றிலும் காணப்படுகின்ற, மையநரம்புத் தொகுதியின் முற்பகுதியே மூளை. தலைப்பிரதேசத்திலுள்ள புலனங்கங்களின் திரட்சியோடு தொடர்புற்று இது பருத்திருக்கும். மூளை முழுவுடலின் எதிர்த்தாக்கங்களை (ஓரளவு மாறுபடுமளவைகளில்) இயைபுபடுத்துகின்றது.

**முளையக்குழி,** (cerebral fossa). மண்டையோட்டுக்குழியின் தளத்தில் உள்ள பின்பக்க, நடு, முன்பக்க என்ற மூன்று பெரும் பள்ளங்களுள் யாதாயினும் ஒன்று. இப்பள்ளங்கள் முறையே மூளி, கடைநுதற்சோணை, நுதற்சோணை ஆகியவற்றினைத் தாங்கியிருக்கும்.

**முளையப் புடகம்,** (cerebral vesicle). முள்ளந்தண்டு விலங்குகளின் விருத்தியடையும் மூளையானது, முற்றுகக் குறுக்கு ஒடுக்கங்களினுல் அடைந்துள்ள தெளிவான பிரிவுகளுள் அல்லது விரிவுகளுள் ஒன்று.

**முளையம்,** (cerebrum). இது முதலாம் முதற்புடகத்தின் வியத்தத்திலிருந்து எழுகின்ற முன்மூளை.

**முளைய மேற்பட்டை,** (cerebral cortex). நரம்பிணைப்புக்கள் மிகுந்த, வெண்ணிறப் பொருளுக்கு மேலாக உள்ள நரைநிறப் பொருட்படை. இது அமினியன் விலங்குகளினதும் சிலவகை அனமினியன் விலங்குகளினதும் மூளையவரைக்

கோளங்களில் காணப்பட்டபோதிலும் முலையூட்டிகளில் மட்டுமே பரந்து காணப் படுகின்றது.

**மூளையவரைக் கோளங்கள்,** (cerebral hemispheres). முள்ளந்தண்டு விலங்கு களின் முன் மூளையின் சோடி யான வெளித்தள்ளல்கள். ஆரம்பகால முள்ளந்தண்டு விலங்குகளில், இவை முக்கியமாக மண நுகர்ச்சியோடு சம்பந் தப்பட்டனவாய் இருந்தன ; ஆனால் அமினியன் விலங்குகளில் சாதாரண இயைபாக்கத் தொழிற்பாடுகள் மேம்பட் டுக்காணப்படுகின்றன. முலையூட்டிகளில் கோளங்கள் மூளையின் பெரும் பகுதி களாயும், தொழிற்பாடுகளைக் கட்டுப் படுத்துகின்ற, மிக்க மடிப்புடைய, மேற்பட்டையை உடையவையாயும் காணப்படும்.

**மெக்கலின் கசியிழையம் அல்லது கோல்,** (Meckel's cartilage or rod). தாழ்ந்த முள்ளந்தண்டு விலங்குகளின் கீழ்த் தாடை ; உயர் முள்ளந்தண்டு விலங்குகளில், தாடையின் மென்சவ் வென்புகள் சுற்றிவர ஒழுங்குபடுத்தப் பட்டுள்ளதும் தோன்றுவதுமான அச்சு.

**மெதூசா,** (medusa). சீலென்ரெ ருற்றின் (கணப் பிரிவு நீடாறியா வைச் சேர்ந்தது, உ-ம்., சொறிமுட்டை) சுயாதீனமாய் நீந்துகின்ற வடிவம். மணி அல்லது குடை வடிவுடையது. உடலின் துடிப்பினால் நீந்துவது.

**மெதூசாப்போலி,** (medusoid). பிறப்பு முறை மாறல் உள்ள சீலென் ரெருற்றுவில் காணப்படும் அரைகுறை யாய் விருத்தியடைந்துள்ள இலிங்கத் தனியுயிர்கள். இவை ஐதராவுருப் பெற் ருேர் சமுதாயத்தோடு இணைந்து காணப் படும்.

**மெல்லண்ணம்,** (soft palate). மனிதனில், வல்லண்ணத்தின் பிற்பக்க வோரத்திலிருந்து தொங்கி நின்று தொண்டையிலிருந்து வாய்க் குழியை ஒரு பகுதியில் பிரிக்கும், மென்சவ்வு போன்றதும் தசைப் பிடிப்பானதுமான மடிப்பு,

**மெற்றசோவன்,** (metazoan). மெற்ற சோவாக் கூட்டத்தைச் சேர்ந்த ஓர் பல்கலமுள்ள விலங்கு.

**மென்சவ்வுச் சிக்கல் வழி,** (membranous labyrinth). சற்று நிணநீரினால் என்புக் குழிகளிலிருந்து பிரிக்கப் பட்டதும் தானே அகநிணநீரைக் கொண்டதுமான உட்செவி.

**மென்சவ்வென்பு,** (membrane bone). கசியிழையப் பருவத்தூடாகச் செல்லாது சிற்றிடத் தொடுப்பிழையம் நேரடியாக என்பாக்கமடைவதனால் உண்டான என்பு.

**மென்டலின் கொள்கை,** (Mendelism). தாவரங்களிலும் விலங்குகளிலும் இய ல்புகள் தலைமுறையுரிமைப் படுத்தப் படுவதை நிர்ணயிக்கும் ஒரு கொள்கை. இது கிரெகர் மென்டலினால் முன் மொழியப்பட்டது. இத்தத்துவமானது " ஒரு சோடி இயல்புகள் " தலைமுறை யுரிமையாதலைப் பற்றியது ; ஆட்சியுள்ள தும் பின்னிடைவுள்ளதுமான இரு உறள் பொருவியல்புகளுள் ஒன்றே மற்றதோ எச்சத்தில் உள்ளமையை அல்லது இல் லாமையை நிர்ணயிக்கும். ஒரு சோடி உறள் பொருவியல்புகளைக் கொண்ட, அங்கிகளின் எச்சங்களாலானவை இவ் வியல்புகளை ஒரு திட்டமான விகிதத்தில் கொண்டிருக்கும் என்பதை இத்தத்து வம் எடுத்துக்காட்டுகிறது. ஒரு சோடி இயல்புகளுக்கான இத்தத்துவம் இயல் புக் கூட்டங்களுக்கும் பயன்படக்கூடிய தாக விரிவாக்கப்பட்டுள்ளது.

**மென்மூடி,** (mantle). (1) உறுேகோர் டாவில், உறைக்குக் கீழே உள்ளதும் கூடக்குழியை மூடியுள்ளதுமான உண் மையான உடற் சுவர். (2) மொல் லுஸ்கா, பிரக்கியோப்போடா, சிர்றிப் பெடியா என்பனவற்றில், முண்டத்தைச் சுற்றியுள்ளதும் ஓட்டை அல்லது பரிசை மூடியைச் சுரப்பதுமான ஒரு மெல்லிய கவச மடிப்பு.

**மென்றகட்டிடத்திலுள்ள** (phrenic). மென்றகட்டுப் பிரதேசத்திலுள்ள; நாடி,

திரட்டு, நரம்பு, பின்னல், நாளம், ஆகியவற்றைக் குறிக்கும்.

**மென்றுயி,** (piamater). முள்ளந் தண்டு விலங்குகளின் மூளையையும் முண்ணாணையும் சுற்றியுள்ள மூன்று மென்சவ்வுகளுள் ஆக உள்ளே உள்ள மெல்லிய கலன்கள் கொண்ட படை.

**மேலணி,** (epithelium). ஒரு சுயாதீனப் பரப்பை மூடியோ, குழாயை அல்லது குழியைப் படலிட்டோ உள்ள கலங்களாலாய ஏதுமோர் இழையம்.

**மேலணியிழையம்,** (epithelial tissue). மேலணி பார்க்க.

**மேலிறக்கையுருவென்பு,** (epipterygoid). காது முதலென்பிலிருந்து இறக்கைப் போலியென்பிறகு கிட்டத் தட்ட கீழ்நோக்கி நிலைக்குத்தாகச் செல்லுகின்ற ஒரு சிறிய என்பு.

**மேலென்புமுளை,** (epiphysis). (1) புறம பான என்பாக்கல் மையத்திலிருந்து உண்டாகிப் பின்னர் என்புடனே இணை கின்ற, என்பின் முளை அல்லது ஏது மோர் பகுதி. (2) கூம்புருப் பொருள். (3) கூம்புருப்புடை அங்கங்கள். (4) கடன் முள்ளிகளில், ஒவ்வொரு தாடையின சிற்றறையோடும் உறுதியாக இணைந்து சிறு சக்கரங்களோடு மூட்டுடைய வலிமை யான சட்டம். (5) பூச்சிகளின் கணைக் கால்களில் உள்ள சில முளைகள்.

**மேற்கன்னவென்பு,** (supra temporal). சில முள்ளந்தண்டு விலங்கு களின் தலையோட்டிலே சுவரென்பு ஒவ் வொன்றிற்கும் அருகே காணப்படுகின்ற ஒரு சோடி மென்சவ்வென்பு.

**மேற்கான்மூட்டுமுளை,** (epipodite). குறுஸ்ராசெயாவில், முதற்கான் மூட்டி லிருந்து எழும் ஒரு முளை.

**மேற்செவியென்பு,** (epiotic). (1) காது முதலென்புக்கும் செவிப்பின் னென்புக்கும் இடையே மேலே உள்ள, முள்ளந்தண்டு விலங்குத் தலையோட் டின் செவியுறையின் ஓர் என்பு. (2) இது முளையுரு முளையின் என்பாக்கல் மையத் தைக் குறிக்கப் பிரயோகிக்கப்படும்.

**மேற்பட்டை,** (cortex). ஓர் அங்கத்தின் வெளிப்படைகள் நடுப்பகுதியிலிருந்து இழையவியலில் வேறுபடுமாயின் அவை மேற்படை எனப்படும்.

**மேற்பிடரெலும்பு,** (supraoccipital). பிடரென்புப் பிரதேசத்தின் மேற்பக் கத்தே நடுக்கோட்டில் அமைந்துள்ள ஒரு பெரும் என்பு.

**மேற்றுடையம்,** (maxilla). மேற் றுடை : முனமேற்றுடையத்துக்குப் பின் னால் உள்ள மேறறுடையின் பகுதி.

**மேற்றொடைத்தட்டு,** (epimeron). (1) இது பூச்சிகளில் காணப்படுகின்ற புடைப்பட்டையின் ஒரு பகுதி. மேன் மார்பென்பிற்குப் பின்னாலோ கிட்டத் தட்டக் கூடிய அளவு முன்பக்கமாகவோ உள்ளது. (2) அனு அரைச்சந்தின் பின்பக்கப் புடைக்கோது. (3) முதுகுப் பட்டைக்கும் அவயவச் செருகல்களுக் கும் இடையே உள்ள, ஆர்த்திரோப் பொட்டுத் துண்டத்தின் பகுதி.

**மேற்றொண்டையென்பு,** (epipharynx). (1) இன்செக்றறுவில, வாயின மென சவ்வுக் கூரை. இது சில வகை களில் கைற்றினேறிய நடுக்கோட்டு மடிப் பாக உள்ளது. டிப்டெறுவில் முற் சொண்டோடு இணைந்து துளைக்குமங்க மாக உள்ளது. (2) அக்கறினுவில், தொண்டையின் முன் முகப்பின் முன் தள்ளிய எறியம்.

**மேற்றோல்,** (epidermis). புறமுத லுருப்படையிலிருந்து உற்பத்தியான கவசப்படைகள் ; உடலை மூடியுள்ள மேலணி. முள்ளந்தண்டில்லாவிலங்கு களில் மேற்றோல் ஓர் கலப்படைத் தடிப் புடையதாயும் அடிக்கடி புறத்தோலை சுரக்கின்றதாயும் இருக்கும்.

**மேற்றோற்பட்டையென்பு,** (supra scapula). தோட்பட்டையென்பின் பகுதி யாய் அமைந்துள்ள, மார்பு வளையத்தின் ஓர் முதுகுப்புற மூலகக்கூறு.

**மேன்மண்டையோடு,** (epicranium). (1) பூச்சியின் தலையில் கண்களுக்கு இடையே பின்னால் உள்ளபிரதேசம். (2) தலைத்தோல். (3) மண்டையோட்டை மூடியுள்ள அமைப்புக்கள்.

**மேன்மார்பென்பு,** (episternum). (1) சிறு சாவியிடையென்பு. (2) மார்பென்பின் முன்பக்கக்கசியிழைய மூலகத்தைக் குறிக்கவும் இப்பதம் பிரயோகிக்கப்படும். (3) மார்ப்புப்பட்டைக்கு மேலும் மேற்றொடைத் தட்டுக்கு முன்னும் உள்ள, ஆர்த்திரோப்பொட்டு உடற்றுண்டத்தின் ஒரு பக்கப் பிரிவு. (4) உள் அரைச்சநதுக்கான் மூட்டின் புடைக்கோது.

**மேன்முகவவத்தை,** (anaphase). ஒடுக்கற் கருப்பிரிவிலோ இழையவுருக்கருப்பிரிவிலோ நிறமூர்த்தங்கள் அல்லது அரை நிறமூர்த்தங்கள் மத்திய கோட்டுத் தட்டைவிட்டகன்று சென்றுள்ள நிலையை உணர்த்தும் பருவம். சில சந்தர்ப்பங்களில் இழையுருப்பிரிவிலே, நிறமூர்த்தங்கள் உண்டாகும் வரையுள்ள பருவங்கள் அனைத்தையும் இச் சொல் குறிக்கும்.

**மேன்முன்னிடுப்பென்பு,** (epipubis). சில நகருயிர்ப் பிராணிகளிலும் உபய வாழ்வுள்ள பிராணிகளிலும் பூப்பென்புகட்கு முன்னால் உள்ள இடுப்பு என்பிணைப்பினது நடுக்கோட்டுக் கசியிழையம் அல்லது இக்கசியிழையத்திலிருந்து எழுகின்ற ஓர் என்பாக்கம்.

**மைப்பை,** (ink sac). அனேகமான செபலொப்பொட்டுக்களில் உதாரணமாகக் கணவாயில், காணப்படுகின்ற மைபோன்ற பாய்பொருளொன்றினைச சுரக்கும் ஓர் அங்கம். அப்பாய்பொருளானது குதத்திற்கு அண்மையில் உணவுக் கால்வாயினுள் திறக்கின்ற ஒரு கானிலிருந்து வெளித்தள்ளப்படுகின்றது. மையை வெளித்தள்ளல் ஒரு பாதுகாப்பு முறையாய் அமைந்துள்ளது.

**மையச்சிற்றிறக்கம்,** (fovea centralis). கோல்களிலாத, நீண்ட மெல்லிய கூம்புகளை உடையதாய, விழித்திரை மஞ்சட்பொட்டின் மைய மெல்லிய பகுதியே இது.

**மையநரம்புத் தொகுதி,** (central nervous system). ஒரு விலங்கின் தொழிற்பாடுகளை இயைபுபடுத்தும் நரம்பிழையத் திணிவு. முள்ளந்தண்டு விலங்குகளிலுள்ள மையநரம்புத் தொகுதி மூளையையும் முண்ணாணையும் கொண்டிருக்கும். அடிப்படையில் இவை இரண்டும் ஒருங்கே மிகவும் தடித்த கருவுடைய உட்குழிவான ஒரு தனிக்குழாயாக இருக்கும். இவை தலையோட்டினுள்ளும் முதுகெலும்பினுள்ளும் மூடப்பட்டிருக்கும. அனேகமான முள்ளந்தண்டு விலங்குகளில், மையநரம்புத் தொகுதியானது, நரம்பிழையத்தாலான ஒரு சில திண்மநாண்களையுடையதாயும் திரட்டுக்கள் எனப்படும் பெருந்திணிவுகளோடு தொடர்புடையனவாயும் காணப்படும் எனினும், முள்ளந்தண்டிலா விலங்குகளில் (சீலென்ரெறற்று, எக்கினோடேர்மாற்று, என்பவற்றில்) ஒரு பரவலான நரம்புவலையானது இயைபாக்கத்தை மையநரம்புத் தொகுதிக்குப பதிலாகச் செய்கின்றது.

**மையநீங்கி,** (centrale). அடிப்பாதவுருவின் மையத்தில் அமைந்துள்ள என்பு.

**மையத்தி,** (centrum). முள்ளந்தண்டென்பின் அடிப்பகுதி, முதுகுநாணைப் பகுதியாகவோ முற்றாகவோ ஈடுசெய்கின்றது. இதிலிருந்து நரம்பு விற்கள், குருதிவிற்கள், குறுககுமுளை என்பன தோன்றும்.

**மையவிழைய நரம்பு நார்கள்,** (medullated nerve fibres). அச்சுருளையை அல்லது ஆதிச்சிறுநார்களைக் கொணடதும், நரம்பு அச்சை உடையதும, மையவிழைய மடலாலும் இதையடுத்து நரம்பு நாருறையாலும் மூடப்பட்டும் உள்ள மூளையினதும் முள்ளந்தண்டு நாணினதும் நார்கள்,

**மையவிழையம்,** (medulla). (1) என்புகளின் மச்சை. (2) ஓர் அங்கத்தின் அல்லது இழையத்தின் மையப் பகுதி

**மையவிழையம்,** (pith or medulla). ஓரங்கத்தின் மையப்பகுதி. அதிரீனல் மையவிழையமானது, மூலையூட்டிகளின் அதிரீனற் சுரப்பியின் உட்பகுதி; இது முளையவியலின்படி நரம்பிழையத்திலிருந்து (நரம்புச்சியாயிருக்கலாம்) பெறப்பட்டதாகும். இது அதிரீனலினைச் சுரக்கின்றது. விலங்கு பயந்தோடும் பொழுதோ சண்டையிடும்பொழுதோ அதிரீனலின சுரக்கப்படுவதனால் மைய விழையம் பெரிதும் அவசரகாலத் தொழிற்பாடுடையதாகக் கருதப்படுகின்றது. இச்சுரப்பு அமைதியான வாழ்விற்குத் தேவையற்றது. மூளையினது மைய விழையத்திற்கு நீள்வளையமையவிழையத்தைப் பார்க்க.

**மொன்றோவின் குடையம்,** (foramen of Monro). மூளையறைக்குடையம், அதாவது மூன்றும் மூளையறைக்கும் பக்கமூளையறைக்கும் இடையே உள்ள பாதை.

**மோற்றேசு,** (maltase). மோற்வெல்லத்தைத் திராட்சை வெல்லமாக மாற்றவல்ல ஒரு நொதியம்.

## ய

**யுகவென்பு,** (jugal). முள்ளந்தண்டு விலங்கின் தலையோட்டில் உள்ள நுகவுருவில்லிற் காணப்படும் ஒரு சோடி மென்சவ்வென்பு. இது செதிலென்பிற்கும் மேற்றுடையத்திற்கும் இடையே காணப்படும்.

**யூரிக்கமிலம்,** (uric acid). முலையூட்டிகளில் நியூக்கிளிக்கமில அவசேபத்தின் இறுதி விளைவுப் பொருள் ; நகருயிர்கள், பறவைகள் ஆகியவற்றின் சிறுநீரிலுள்ள பிரதான நைதரசப் பதார்த்தம் ; திரியொட்சிபியூறின்.

**யூரியா,** (urea). காபமைட்டு. இது ஒரு பளிங்குருவக் கழிவுப் பதார்த்தமாகும் ; இதுவே சிறுநீரின் பிரதானமான சேதனவுப்புப் பொருளாகும். $CO(NH_2)_2$

**யோனிமடல்,** (vagina). கருப்பையிலிருந்து உற்பத்திக் கால்வாயின் வெளித்துவாரம் வரைக்கும் இட்டுச் செல்லும் கால்வாய்.

**யோனிமடி,** (vulva). புறத்தேயுள்ள பெண் உற்பத்தியங்கங்கள் அல்லது பெண்ணின் மர்மஸ்தானம்.

## வ

**வகுப்பு,** (class). தாவரங்கள் அல்லது விலங்குகளின் பாகுபாட்டில் அமைந்த ஓர் கணத்தின் பிரிவு ; இது மேலும் வருணங்களாகப் பிரிக்கப்பட்டுளது.

**வட்டத்தட்டு,** (disc). (1) தட்டுப்போன்ற வடிவமுடைய யாதுமோர் தட்டையான பகுதி. (2) அனேக விலங்குகளில் வாயை சுற்றியுள்ள பிரதேசம். (3) அனேக விலங்குகளின் எதிர் முனைகளிலுள்ள வட்டமான பிரதேசங்கள். (4) கண்ணுக்குள் பார்வை நரம்பு புகும் வாயிலைக் குறிக்கும் பிரதேசம். (5) தோலிலுள்ள கிண்ணவடிவுடைய தொட்டுணர் அமைப்புக்கள். (6) முட்டைப்புடைப்பின் குழிக்குள் நீட்டிக் கொண்டிருக்கும் சிறுமணி மென்சவ்வின் கலத்திணிவு. (7) தசை இழையங்களின் சுருங்கும் சிறு நார்களில் உள்ள சமனில்லாத் திருப்பமுடைய பகுதிகள், சமதிருப்பமுடைய பகுதிகள் என்பன.

**வட்டப்பலகணி,** (fenestra rotunda). நடுச்செவி விருத்தியடைந்து காணப்படுகின்ற முள்ளந்தண்டு விலங்குகளில், செவியின் வன்கூட்டுச் சுவரில் உள்ள இரண்டு துவாரங்களுள் கீழே உள்ள துவாரம்.

**வட்டவுருச் செதில்கள்,** (cycloid scales). ஒழுங்கான விளிம்பையும் கட்டற்ற கரையையும் உடைய செதில்கள்.

**வடி,** (filter). வடிகட்டத்தக்க வைரசுக்கள் போன்ற நுண்ணுடல்களை ஊடு செல்ல விடுகின்ற, ஆனால் கலங்களையோ நுண்ணங்கிகளையோ செல்ல விடாது தடுக்கின்ற, நுண்ணிய துளைகளை உடைய மெழுகுதிரி வடிவ வடிகட்டி. இது பற்றீரியாவியலில் பயன்படுத்தப்படுகின்றது.

**வண்டற்பாறைகள்,** (sedimentary rocks). முன்னைய பாறைகள் தேய்வதன் விளைவாக உண்டான பாறைகள் யாவும் வண்டற் பாறைகள் எனப்படும். தரையிலும், ஆறுகள், ஏரிகள், கடல்கள் ஆகியவற்றின் அடித்தளத்திலும் வண்டற் தகடுகளாய்ப் படிந்துள்ள துண்டுப் பாறைகள் இவற்றுளடங்கும். அங்கிகளின் வன்பகுதிகளினாலும் கரையிலிருந்து வீழ்படிவுற்ற உப்புக்களினாலும் (சிலவற்றில் தாழ்நத அங்கிகளின் உதவியினாலும்) உண்டான வீழ்படிவுகள்.

**வயிற்று நுண்டுளை,** (abdominal pore). சில மீன்களிலும், சீக்குளோஸ்ரோமாற்றாவிலும் உடற்குழியிலிருந்து வெளிச் செல்லும் துவாரம்.

**வயிற்றுப்புற பெருநாடி,** (ventral aorta). மீனினதும் முளைய அமினிய விலங்குகளினதும் பெருநாடியான இஃது இதயத்தின் சோணையிலிருந்து கிளம்பி பூக்களுக்கும் பெருநாடி விறகளுக்கும் குருதியை நல்கும்.

**வயிறு,** (belly). (1) சமிபாட்டு அங்கம் முதலானவற்றைக் கொண்ட, மார்புக்கும் தொடைக்கும் இடையே உள்ள மனிதவுடலின் முற்பக்கப் பகுதி.

(2) விலங்குடலில், மனித வயிற்றுக்கு ஒப்பான கீழ்ப்பகுதி.

**வரிகொண்ட,** (striated). வழக்கமாகச் சமாநதரமாயமைந்த குறுகிய கோடுகளால அல்லது தவாளிப்புக்களால் குறிக்கப்பட்டுள்ள.

**வரித்தசை,** (striated muscle). பலகருவுடைய கிளைவிடாத நார்களைத் தசை நாருறையால் மூடிய நிலையில் கொண்டுள்ளதும், தெளிவான குறுக்கு வரிகளோடு ஓரங்களில் கருக்களை உடையதுமான ஒருவகைச் சுருங்கத் தக்க இழையம்.

**வருணம்,** (phylum). விலங்கிராச்சியத்தின் பெரும் கீழ்ப்பிரிவுகளில் ஒன்றான, இனவகைகளாலான ஒரு கூட்டம்.

**வல்லண்ணம்,** (hard palate). மனிதனில மேற்றாடையவென்பினலும் அண்ணவென்பினலும் ஆதாரமடைந

துள்ள பகுதி குறிப்பாக வல்லண்ணம் எனப்படும்.

**வலஞ்சுழியாதல்,** (dextral). வலக் கைப் பக்கமாகத் திரும்புதல். அல்லது சுற்றுதல் அல்லது இடமிருந்து வலமாகச் சுருளிவடிவில் சுற்றியிருத்தல். கஸ்திரோப்பொட்டுப் பிராணிகளின் ஓட்டைக்குறிக்கும்.

**வளர்ப்பு,** (culture). ஓர் ஊடகத்தில் வளர்ந்து கொண்டிருக்கும் நுண்ணங்கியைக் கொண்ட ஒரு பரிசோதனைத் தயாரிப்பு.

**வளையப்பட்டை,** (cingulum). யாதுமோர் வளையவடிவான அமைப்பு. அனனெலிடாவில், கட்டுச்சேணம். றொற்றிபெருவில் வாய்க்குப் பின்னால் வெளியேயுள்ள பிசிர்ச் சிறு வளையம். மூலையூட்டிகளில், மூளையினது, ஹிப்போகாம்பஸ் மடிப்புக்களையும் வன்றேல் மடிப்புக்களையும் தொடுக்கின்ற நார்களினலான ஒரு சுவடு. முலையூட்டிகளில், பல் முடியின் அடியைச் சுற்றி இருந்து, வன்மையான உணவுத் துணிக்கைகளிலிருந்து முரசைக் காக்கின்ற ஒரு வரம்பு.

**வளையம்,** (girdle). (1) தூக்கவெனபுக் கூட்டில், தோளிலும் இடுப்பிலுமுள்ள தாங்கும் அமைப்பு ; ஒவ்வொன்றும் மாதிரியாக ஒரு முதுகுப்புற மூலகத்தையும் இரண்டு வயிற்றுப்புற மூலகங்களையும் கொண்டிருக்கும். (2) டினேபிளாஜெல்லாற்றுவில் உள்ள குறுக்குத் தவாளிப்பு ; இது சவுக்கு முளையைக் கொண்டிருக்கும். மேற்கூம்பையும் கீழ்க்கூம்பையும் பிரிக்கின்றது. (3) தயறம்களில் உள்ள வளையப் பட்டை. (4) மண்புழுவின் வளையபபட்டை. (5) அம்பிநெயுருவில் மென்மூடிப் பகுதியின் தசைப் பிடிப்பான, நுண்கூருடைய பகுதி. இது ஓட்டுத் தட்டுகளைச் சுற்றியுள்ளது.

**வளையவுருக்கசியிழையம்,** (cricoid cartilage). குரல்வளையில் துடுப்புக் கசியிழையத்தோடும் கேடயப்போலிக கசியிழையத்தோடும் மூட்டப்பட்டிருக்கும் கசியிழையம்.

**வறுகி,** (radula). அனேக கஸ்திரோப்பொட்டு விலங்குகளில், நீள்பக்க வரிசைகளில் கைற்றினல் ஆன பற்களைக் கொண்ட ஒரு குறுகிய, அகலமான மென்சவ்வுத்துண்டு.

**வன்கவசம்,** (elytrum). (1) சில பூச்சிவகைகளில் உள்ள வன்மையான, உறை போன்ற, முன்பக்கச் சிறகு. (2) சில புழுக்களின் முதுகுப்புறத்தே காணப்படுகின்ற செதிள்களுள் அல்லது பரிசை போன்ற தட்டுக்களுள் ஒன்று.

**வன்கூட்டுத்தசை,** (skeletal muscle). வரித்தசை பார்க்கவும்.

**வன்கூடாகின்ற,** (skeletogenous). பின்னடியில் வன்கூட்டின் பகுதிகளாக மாறுகின்ற, முளைய அமைப்புக்கள் அல்லது பகுதிகளைக் குறிக்கும்.

**வன்கூடு,** (skeleton). (1) அகத்தே அமைந்தோ புறத்தே அமைந்தோ விலங்கின் மென்மையான பகுதிகளைப் பாதுகாக்கின்ற வன்மையான சட்டவமைப்பு. (2) தமது இயல்பான ஒழுங்கின்படியே உள்ள என்புகள்.

**வன்கோது,** (sclerite). கல்சியம் சேர்ந்த தட்டு அல்லது நுண்கூர் ; கைற்றின் சேர்ந்த தட்டு. வெளிவன்கூட்டின் பகுதி.

**வன்கோதுப்படை,** (sclerotic layer). முள்ளந்தண்டு விலங்குகளின் கண விழியில், கண்ணின் முன்னுல உள்ள விழி வெண்படலத்தோடு தொடர்ச்சியாய் உள்ள, நார்போன்ற அல்லது கசியிழையத்தாலான, கண விழியின் வெளியுறை.

**வன்றுயி,** (duramater). மூளையையும முண்ணாணையும், முள்ளந்தண்டு விலங்குகளில் சுற்றிக் காணப்படுகின்ற மூன்று மெனசவ்வுகளில் மிகவெளியே உள்ள விறைப்பான நார்போன்ற படை.

**வாங்கி,** (receptor). விலங்கிற்கு வெளியேயோ உள்ளேயோ என்ன

நிகழ்கின்றதென்பதை (அதாவது தூண்டல்கள்) நரம்புத் தொகுதியின ஒத்துழைப்புடன் கண்டுபிடிப்பதற்காக அமைந்துள்ள விலங்கினது பாகம். இது பல்வேறு வகையினதாய்க் காணப்படும். ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட மாதிரியான தூண்டலுக்கு, உதாரணமாக, வெப்பம், ஒளி, அல்லது தசையசைவு போன்றவற்றிற்கு உணர்ச்சியுடையதாய்க் காணப்படும். ஒரு வாங்கியை அதற்குரிய ஓர் தூண்டல் போதுமான அளவு செறிவுடன் தாக்கும்பொழுது, முன்னையது தன்னோடு தொடுகையுறறிருக்கும நரம்புத் தொகுதி, நரம்புக் கலம் (நரம்புக கலங்கள்), ஆகியவற்றினூடாகக கணத் தாக்கங்களை அனுபபி விலங்கினது நடத்தையை வசப்படுத்தும்.

**வாட்போலி மார்புப்பட்டை,** (xiphisternum). மார்ப்புப்பட்டையின் பிற்பகத் துண்டம் அல்லது வாளுருவான முளை ; அனுமார்ப்புபட்டை.

**வாதனாளி,** (trachea). சிலவகை ஆாத திரோப்பொட்டுக்களில், உ-ம., பூச்சிகளில், அவற்றின் சுவாசத் தொகுதியைச் சேர்ந்த ஒரு வளிக் குழாய் ; காற்றைச் சுவாசிகும் முளளநதணடு விலங்குகளில, மூச்சுக்குழல் வாயிலிருந்து நுரையீரல்கள் வரை இட்டுச் செல்லுகின்ற காற்றுக் குழாய்.

**வாய்,** (mouth). உணவுச் சுவட்டிற்குள இட்டுச் செல்லும் வெளித்துவாரம். இப்பதம் பொதுவாக ஆனால் திருததக குறைவோடு சுவட்டின முனைக்குழியை (அதாவது முள்ளநதண்டு விலஙகுகளில் வாய்ககுழியை) குறிககப பிரயோகிக்கப்படுகிறது.

**வாய்க்கால்,** (iter). ஒரு வழி அல்லது கால்வாய். உதாரணம், நடுசசெவி, மூளை முதலியவற்றில் காணப்படும கால்வாய்.

**வாய்க்கீழ்,** (hypostome). (1) சில சீலெனரெருற்றுக்களில் காணப்படுகின்றஉயர்ந்த வாய்க் கூம்பு. (2) பூச்சிகளிலுள்ள பிற்சொண்டு. (3) குறுஸ்ரா செயாவில், வாயின் பின்பக்கவோரத்தை ஆக்குகின்ற கீழ்ச் சொண்டு அல்லது மடிப்பு. (4) சில அக்கறினவில் உணரடியரைச் சந்துகள இணைதலினலான கீழ்ச் சொண்டு.

**வாய்க்குழி,** (buccal cavity). வாய்த துவாரத்திற்கு, உள்ளே ஆனல் தொண்டை தொடங்குவதற்கு முன்னல உள்ள குழி, வாய்க்குழி எனபபடும்.

**வாய்க்கெதிர்ப்புறமான,** [aboral (abactinal)]. வாய்க்கு எதிரமைந்தது அல்லது வாயிலிருநது அப்பாற் செலலுவது அல்லது வாய்ககுத் தொலைவிலிருப்பது.

**வாய்ப்புறமான,** (adoral) வாயக்கு அருகமைந்து காணபபடுகினற.

**வாய்முன் அங்கம்** (prostomium). புழுககளினதும் மொலஸ்குலகாய பிராணிகளினதும வாய்க்கு முனனல் உள்ள தலையின் பகுதி.

**வாயயல்.** (peristome). (1) வாயைச் சூழநதுள்ள பிரதேசம. ஒரு கல முள்ள விலங்குகளின் வாயைச சுற்றிக காணப்படும் பிசிருடைய வலையதையும், கடன முள்ளிகளில் வாயானது திறககினற பகுதியாகிய உடற் சுவரின தோற்பகுதியையும் இப்பதம் முக்கியமாகக் குறிக்கப் பயனபடுத்தபபடுகிறது.

**வாயயற் துண்டு,** (peristomium). சில துணடப்புழுக்களின (பொலிக்கீற்ற) வாய்க்குப் பின்னல் உள்ள திரிபடைநத துண்டம் அல்லது துண்டங்கள். இது பரிசக்கொம்புகளையும் பிற புலனுறுப்புககளையும் உடையதாயக காணப்படும். சிலவகைககளில் இது காறையாகத் திரிபடைந்து காணப்படும. குழாய்களில் வாழும் இனங்களில் இககாறையானது ஒரு குழாய் வடிவமாய அமைந்து வாய்க்கு இட்டுச செல்லும் அல்லது ஒரு மடிப்பாயமைநது குழாய்ககுத தேவையானவற்றைச் சுரக்கும.

**வாயிற்சுற்றோட்டம்** (portal circulation), இருமுனைகளிலும் குடாப்

போலிகளாகவோ மயிர்க்குழாய்களாகவோ முடிவடையும் ஒரு நாளம். உதாரணமாக, முள்ளந்தண்டு விலங்குகளிற் காணப்படும் ஈரல்வாயிற்றொகுதி. இங்கு ஈரல்வாயிநாளமானது உணவுக் கால்வாயின் மயிர்க்குழாய்களிலிருந்து குருதியைப் பெற்று ஈரலிலுள்ள போலிக் குடாக்களுக்கும் மயிர்க்குழாய்களுக்கும் செலுத்தும்.

**வாயிநாளம்,** (portal vein). ஒரு மயிர்க்குழாய் வலைவேலைப்பாட்டிலிருந்து வேறொன்றிற்குக் குருதியை காவிச் செல்லும் நாளம்.

**வால்,** (tail). குதத்துக்குப் பின்னால் உள்ள பிரதேசம். ஓர் அங்கத்தின் பிற்புறப் பகுதி. உ–ம்., பரிவால்; முண்ணாணின் பிற்புற முனையில் உள்ள, சமாந்தரமாயமைந்த நரம்புகளாலாய ஒரு கற்றை.

**வால்வு,** (valve). குழாய், கான அல்லது துவாரத்தினூடாகப் பதார்த்தம் செல்வதைக் கட்டுப்படுத்தும் யாதுமோர் அமைப்பு, அல்லது அதனை ஒத்த மென்சவ்வு வடிவில் இருக்கும் அமைப்பு: உதாரணமாக, வியூஸெனின் வால்வு. மொலஸ்கா சிர்றிப்பெடியா, பிறக்கியோப்போடா என்பவற்றில் ஓட்டினை அமைத்துள்ள அனேக தனித்தனித் துண்டுகளுள் ஒன்று. இன்செக்றாவில், ஒரு மூடும் தட்டு அல்லது உறை, சிறப்பாக எதிரெதிரே அமைந்து ஒரு குழாயுருவ அமைப்பை ஆக்கவல்ல சோடிகளுள் ஒன்று. உ–ம்., சூலிடப்படுத்தியின் வால்வுகள்.

**வாழ்க்கைக் காரணிகள்** (biotic factors). உயிரங்கிகளின் தொழிற்பாட்டினால் எழுந்த சூழலாதிக்கங்கள் வாழ்க்கைக் காரணிகள் எனப்படும். இவை காலநிலைக் காரணிகள் போன்றவற்றிலிருந்தும் தனிப்பட்டவை.

**வாழ்க்கைச் சக்கரம்,** (life cycle). ஓர் அங்கியால் கருக்கட்டல் தொடங்கி இறப்புவரையுமோ அல்லது அதே மாதிரியான தொடர்மாற்றங்களை உண்டாக்கும் புணரிகளை ஆக்கும் பருவம் வரையுமோ நிகழும் முன்னேற்றமாற்றத் தொடர்கள்.

**வாழ்க்கைநியமவியல்,** (bionomics). அங்கிகளை அவற்றின் சூழலுடன் சேர்த்துக் கற்றல். சூழலியல்.

**வாழ்க்கை வரலாறு,** (life history). ஓர் அங்கியில், முட்டை, வித்தி அல்லது பிற முதற் பருவம் தொடக்கம் அதன் இயற்கை இறப்பு வரைக்கும் நிகழும் விருத்தியின் போது உண்டாகும் மாற்றங்களை ஒட்டிய வரலாறே வாழ்க்கை வரலாறு எனப்படும். இம்மாற்றங்களைக் கொண்ட ஒருதொடர்; பெரும்பாலும் ஒரு வாழ்க்கைச் சக்கரத்தை உடையதாயிருக்கும்.

**வாழ்தல்,** (living). உயிர் வாழும் நிலை; உயிரோடு உள்ள அல்லது உயிரோடு வாழ்கின்ற உண்மைநிலை; வாழ்க்கையை ஒரு நிபந்தனையாகவோ அறக்கொடையாகவோ தொழிற்பாடாகவோ காணுதல்.

**வாற்செட்டை,** (caudal fin). மீனின கடைப்பகுதியில் அதாவது வாலில் காணப்படும் செட்டை.

**வாற்பாதம்,** (uropod). குறுஸ்ராசெயாவின் ஒரு வயிற்றுத் தூக்கம்.

**வாற்றம்பம்,** (urostyle). அனூறுவைச் சேர்ந்த அம்பீபியன்களினது முள்ளந்தண்டின் பிற்புறப் பகுதி; இது ஒரு துண்டு படாத என்பு. மீன்களிலுள்ள வாற்கீழென்பு.

**வாநாடி,** (caudal artery). முள்ளந்தண்டு விலங்குகளில், முதுகுப்பக்கப் பெருநாளத்தின், வாலுக்குச் செல்லும் பகுதி.

**விகாரம்,** (mutation). (1) அமைப்பின் ஓர் திட்டமான மாற்றத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் படிப்படியான மாறுதல். (2) அடுத்தடுத்து வந்த இனங்கள் அல்லது இனப்பிரிவுகள்,

(3) ஒரு பாய்ச்சல் அல்லது தொடர்பில்லாத மாறுதல். (4) போதுமான அளவு வித்தியாசப்படுவதால் ஓர் புதுப்பேதத்தை உண்டாக்க வல்ல புதிய உருவங்கள் தாமாகவே தோன்றி அப்படியே இருக்கும் எனும் டீவேரீசின் கொள்கை.

**வித்தி,** (spore). புரோற்றோசோவாவில், பன்முறைப் பிளப்பினால் உண்டான ஒரு நுண்ணிய உடல். திட்டவட்டமாகக் கூறின் புரோற்றோசோவாவின் வாழ்க்கைச் சக்கரத்தில் சிறு வித்தியாக்கத்தின் விளைவாக உண்டாகிய ஒரு வன்மையான தடைத்திறன் மிகுந்தஉறையை உடைய ஒரு விதை போன்ற பருவம்.

**வித்திச்சிறைப்பை,** (sporocyst). புரோற்றோசோவா வித்தியினால் சுரக்கப்பட்டு, அதனைச் சூழவுள்ள ஓர் உறுதியான தடைநல்கும் உறை.

**வித்திப்பிறப்பு,** (sporogony). புரோற்றோசோவாவில் நிகழும் இனப்பெருக்கம். இது வழக்கமாக இலிங்கமுறைகளைக் கொண்டதாயும், எப்பொழுதும் - வித்தி ஆக்கத்தில் முடிவடைவதாயும் உளது.

**வித்தியரும்பர்,** (sporoblast). புரோற்றோசோவாவில் காணப்படுகின்ற, வித்தி உண்டாவதற்குரிய ஒரு வித்தித்தாய்க் கலம்.

**விதை,** (spermary). விந்துக்கள் உற்பத்தியாகும் ஓர் அங்கம்.

**விதைப்பை,** (scrotum). முலையூட்டிகளில் விதைகளை உடைய வெளிப்பை அல்லது பைகள்; பூச்சிகளின் விதைகளின் போர்வை.

**விதைமேற்றிணிவு,** (epididymis). (1) விதையின் பின்பக்கத்தில் காணப்படுகின்ற வெளிச் செலுத்திகளை முக்கியமாக உடைய ஒரு திணிவு. (2) உலூல்பியன் கானின் சுருண்டுள்ள முன்பக்க முனை.

**விந்தாக்கம்,** (spermatogenesis). விந்தாகுகலத்திலிருந்து விந்து விருத்தியடைதல்.

**விந்தாகுகலம்,** (spermatid). வழிவந்த விந்துக்குழியம் பிரிவடைவதால் உண்டாகி விந்தாக மாறும் ஒரு மடியான கலம்.

**விந்து,** (spermatozoon). வழக்கமாகத் தலை, நடுத்துண்டு, இடப்பெயர்ச்சிக்குரிய சவுக்குமுளை முதலியவற்றை உடையதாயக் காணப்படும் ஓர் ஆண் இனப்பெருக்கக் கலம்.

**விந்துக்குழியம்,** (spermatocyte). விந்துப்பிறப்புக்கலத்திலிருந்து வளர்ச்சியின் மூலம் உண்டாகும் ஒரு கலம். ஒரு முதல் விந்துக்குழியமானது பிரிவடைந்து இரு வழிவந்த விந்துக்குழியங்களாகினறது. இவ்விரண்டும் விந்தாகுகலங்களாக மாற்றமடையும்.

**விந்துதாங்கி,** (spermatophore). எண்ணற்ற விந்துக்களையுடைய அல்புமின பதார்த்தம் காணப்படும உறை.

**விந்துபிறப்புக்கலம்,** (spermatogonium). முதல் மூலவுயிர்க்கலம்; விந்துத்தாய்க்கலம.

**விந்து புகுத்தல்,** (insemination). சுக்கிலத்தையோ விந்தையோ பெண்ணின் உறபத்திச் சுவட்டினுட் புகுத்தல்.

**விந்துவாங்கி,** (receptaculum seminis). விந்து சேமித்து வைக்கப்படுகின்ற ஒருபை. இது அனேகமான முள்ளந்தண்டில்லா விலங்குகளில் உணடு. விந்துறை.

**விந்துறை,** (spermatheca). விந்துக்களைத் தேக்கிவைப்பதற்கெனப்பெண் முள்ளந்தண்டில்லா விலங்குகளிலோ ஈரிலிங்கத்தன்மையுள்ள முள்ளந்தண்டில்லா விலங்குகளிலோ காணப்படுகின்ற ஒரு பை.

**விம்பம்,** (imago). பூச்சியுருமாற்றத்தில் காணப்படும் இறுதி அல்லது நிறையுடலிப் பருவம். பரிபூரணமான பூச்சி.

**விம்பவட்டத்தட்டு (அரும்பு),** [imaginal disc (bud)]. என்டொப்டெறிகோற்று

வின் உருமாற்றத்தின்போது, விம்பத்தின் வெளியங்கங்களின் விருத்தியில தலையாய கருவிகளாய் அமைந்துள்ள, உருவாக்கும் கலத்திண்மத்தொகையிலுள்ள ஒன்று.

**வியத்தம்,** (differentiation). (1) நுணுக்குக் காட்டியில பரிசோதித்தற்பொருட்டு தயார் செய்யப்பட்ட மாதிரிகளின் அமைப்பைக் காட்டுவதற்கு சில அங்கங்களிலிருந்து மிகையான சாயத்தை நீக்கும்முறை. (2) பல்வேறு தொழில்களைப் புரிதற் பொருட்டு ஓர் அங்கியின பாகங்கள் அவற்றின் அமைப்பிலும் தொழிலிலும் திரிபடைதல்.

**வியத்திவரலாறு,** (ontogeny). ஒரு தனியனின வாழ்கை வரலாற்றில் ஏற்படும் விருத்தி முழுவதும்.

**வியர்ச் சுரப்பி,** (sudoriferous gland). வியர்வையை உண்டாக்கும் சுரபபி.

**விரல்,** (digit). (1) மீன்களிலும் உயர்வான முள்ளந்தண்டு விலங்குகளிலும் உள்ள அவயவத்தின் முனைப்பிரிவு ; கைவிரல் அல்லது கால் விரல். (2) கொடுக்குகளின அல்லது கொம்புகளின் சேய்மைப் பகுதி.

**விரல் நடை,** (digitigrade). விரல்கள் மட்டும் நிலத்தில் பதிய நடந்து செல்லல.

**விரற் சந்துக்கான்மூட்டு,** (dactylopodite). (1) குறுஉரசெயாவின சில அவயவங்களில் உள்ள சேய்மைமூட்டு. (2) சிலந்தியின் அனுக்கனுக்காற்றட்டும் கனுக்காற்றட்டும்.

**விரற்றுண்டம்,** (phalanx). முள்ளந்தண்டு விலங்குகளின விரல்களில உள்ள துண்டங்கள்.

**விரிக்குந்தசை,** (extensor muscle). அவயவத்தையோ அதன் பகுதியையோ விரிக்கின்ற யாதுமோர் தசை.

**விரிதசை,** (protractor). ஓர் அவயவத தையோ உடலின் ஒரு பகுதியையோ முன்னுக்கு அல்லது உடலிலிருந்து அப்பால் தனது சுருக்கத்தின் விளைவாக இழுக்கவல்ல ஒரு தசை.

**விரிவு,** (diastole). (1) இதயத்தின் அல்லது சுருங்கத்தக்க புன்வெற்றிடத்தின் சந்துவிரிவு. (2) ஓர் இழையுருப்பிரிவின் முடிவு தொடங்கி மற்றது ஆரமபமாகும் வரையும், கரு அடையும் வளர்ச்சியும பெருக்கமும்.

**விருத்தி,** (development). ஒரு முதிர்நத விலங்கு சூலிலிருநதோ அரும்பிலிருந்தோ வளர்தல், வியத்தமடைதல் ஆகிய முறைகள் விருத்தி எனப்படும்.

**விருத்தி உடன் மூட்டு,** (proglottis). நாடாப்புழுவில் நிரையாய் உள்ள துணடங்களுள் ஒன்று. முதிர்ச்சியடைநததும் ஒவ்வொன்றும் குறைந்தது ஒரு கூட்ட இனப்பெருக்க அங்கங்களையாவது உடைய தாய்க் காணபபடும்.

**விருத்தியிலி,** (rudiment). ஓர் உறுப்பினாிலோ அங்கத்திலோ ஆரம்ப காலத்தே கண்டுபிடிகககக்கூடிய பருவம.

**விருத்தியிலிக்குரிய,** (rudimentary). (1) திருத்தமாயமையாது விருத்தியடைந்துள்ள நிலை. (2) விருததியின தொடக்கப் பருவத்தில். (3) ஆரம்ப பருவத்தில தடைசெய்யப்பட்ட. (4) பதாங்கமடைந்த (சில ஆசிரியர்களின கருத்துப்படி).

**விருந்து வழங்கி,** (host). இன்னோரங்கியை அதன் வாணாள முற்றையுமோ பகுதியையோ தன்னகததே கழிககச் செய்ய உதவியும், போசாக் கையோ பாதுகாப்பையோ நல்கியும் வருகின்ற யாதுமோர் அங்கி ; ஒட்டுச் செய்த அல்லது பிடுங்கிநட்ட இழையத்தை ஏற்கும் ஓர் அங்கி.

**வில்லை,** (lens). (1) முள்ளந்தண்டு விலங்குகளின கண்களில காணப் படுவது ; கண்மணிக்குச் சற்றுப் பினனால், நீர்மயவுடனீரில மூழ்கி, பிசிருடனுடன் கொலாசின் நார்களினால் இணை

ந்து காணப்படும் ஓர் ஒளிபுகவிடும் அமைப்பு. (2) கூட்டுக் கண்ணின் ஒவ்வொரு மூலகத்தினதும் விழிவெண்படலம் திரிபடைந்து உண்டான பகுதி.

**விலங்கியல்,** (zoology). விலங்குகளின் அமைப்பு, தொழிற்பாடுகள், நடத்தை, வரலாறு, பாகுபாடு, பரம்பல முதலியனபற்றிக் கூறும் அறிவியல்.

**விலங்கினம்,** (fauna). ஒரு நாட்டுக்கோ இடத்திற்கோ காலத்திற்கோ சிறப்பாய் அமைந்துள்ள விலங்குகள் அனைத்தும் விலங்கினம் எனப்படும்.

**விலங்குருப்போலி,** (zooid). (1) கூட்டு விலங்கு அங்கியின் ஓர் உறுப்பினர். (2) சீலென்ரெருற்றுச் சமுதாயத்தின அல்லது பொலிசோவன் சமுதாயத்தின் உறுப்பினர். (3) பல பொலிக்கீற்றுக்களில் உண்டான பிறபக்க உறபத்திப் பிரதேசமும் இலிங்கமில்லாப் பிரதேசமுமாம்.

**விலங்குரோமம்,** (fur). மூலையூட்டிகளில், மென்மையான பட்டுப போன்ற, கட்டை மயிர்களால் ஆன தடித்த கீழ்க கவசம் : விலஙகுரோமம் மென்மையான மயிர்களால் மூடப்பட்டுள்ள தோல் ஆதலால் அப்பதம மாடுகள், வெள்ளாடுகள், செம்மறியாடுகள் (செம்மறியாட்டுக்குட்டிகள் தவிர) ஆகியவற்றின் தோல்களை அடக்காது.

**விலாவென்பு,** (rib). ஒரு முனை முள்ளந்தண்டுடன் மூட்டுற்ற நிலையிலும மற்றைய முனை சுயாதீனமாக அல்லது மார்புப்பட்டையுடன தொடுக்கப்பட்ட நிலையிலும் உடையதாய்க் காணப்படும ஒரு வளைந்த என்பு.

**விழித்திரை,** (retina). முள்ளநதண்டு விலஙகினது கண்ணின உட்பக்கத்தில முற்பக்கம் (பிசிர் உடற் பிரதேசம்) தவிர்ந்த ஏனைய பாகங்களைப படலிட்டிருக்கும படை. இது ஒளியை உணரும்தன்மை உள்ளது. தோலுருவை அடுத்து, இது ஒரு நிறப்பொருளுடைய புறப்படையையும் கண்விழியின குழியை அடுத்து உட்பக்கத்தே ஓர் ஒளிபுகவிடுமியல்புடைய நரம்புப்படையையும் கொண்டிருக்கக் காணப்படும். நரம்புப் படையானது, ஒளிக்கு உணர்ச்சியுள்ள கோல்களை அல்லது கூம்புகளை அல்லது இரண்டையும் நிறப்பொருளுள்ள படையோடு தொடுகையுற்ற நிலையில் கொண்டதாய் இருக்கும். நரம்பு நார்கள், இடைநிலை நரம்புக்கலங்கள், குருதிக்கலனகள், நரம்புப் பசையிழையம் என்பவற்றை உள்ளே வரும் ஒளிக்கும் கோல்கள் கூம்புகள் என்பவற்றிற்கும் இடையேயும் உடையதாய்க்காணப்படும். மூளையவியலின்படி விழித்திரை மூளையின் ஒரு பகுதியாகும்.

**விழித்திரை மஞ்சட்பொட்டு,** (macula-lutea). விழித்திரையிற் காணப்படும் மஞ்சட் புள்ளி. விழித்திரையின பின பக்கப் பகுதியின் மத்தியில், மிகக்கூடியளவு நிறை பார்வையுள்ள புள்ளியில் அமைந்துள்ள ஒரு முட்டைவடிவ மஞ்சட் பிரதேசம்.

**விழியியக்கி,** (oculomotor). கண் விழியின அசைவுகளை உண்டாக்குகின்ற மூன்றும் மண்டையோட்டு நரம்பைக் குறிக்கும்.

**விழிவெண்படலம்,** (cornea). (1) கண் விழியின் முன்பக்கப் பரப்பில உள்ள ஒளிபுகவிடுகின்ற போர்வை. (2) கூட்டுக் கண்ணிலுள்ள ஒவ்வொரு கண்ணுக்கும் வெளியேயுள்ள ஒளிபுகவிடு தன மையுள்ள பகுதி.

**விளிம்புத்தட்டுக்கள்,** (marginals). கெலோனியாவில், பரிசை மூடியின் விளிம்பாயமைந்த தட்டுககள்.

**விளைவுகாட்டு நரம்புக்கலம்,** (effector neuron). ஓர் இயக்கு நரம்புக்கலம்.

**விற்றமின்கள்,** (vitamins). துணை உணவுக் காரணிகள். குறைவாகவோ மிகையாகவோ இவை காணப்படின் நோய் உண்டாகும.

**வெட்டிச் சோதித்தல்,** (dissection). (1) வெட்டிச சோதிக்கின்ற செயல் அல்லது வெட்டிச சோதிக்கப்படுகினற நிலைமை. (2) சோதிப்புக்கு வெட்டப்பட்ட

யாதுமொரு பொருள். சிறப்பாகச் சோதிப்பிற்கு வெட்டப்பட்ட முழுவிலங்கு அல்லது தயாரிக்கப்பட்ட ஓர் உடல மைப்பு மாதிரி.

**வெட்டுப்பல்,** (incisor). வெட்டுதற் கென இயைபாக்கமடைந்துள்ள ஒரு பல். குறிப்பாக முலையூட்டிகளில், மேற் றுடையின் முன்மேற்றுடைய என்பி லிருந்து, வேட்டைப்பல்லிருப்பின் அதற்கு முன்னல், இளம்புகின்ற நறுக் கும் பற்களுள் ஒன்று. கீழ்த்தாடையி லும் அதையொத்த பற்களுள் ஒன்று.

**வெண்கரு,** (albumen). முட்டை யில் வெண்மையான கருப்பகுதி. உயர் வகை விலங்குகளின் முட்டைகளிலுள்ள கருவூணைச் சூழ்ந்து காணப்படும் போச ணைத் திரவியம்.

**வெண்குருதிக்குழியம்,** (leucocyte). ஒரு குருதி வெண்சிறு துணிக்கை ; பல விலங்குகளின் குருதிப்பிளாஸ்மாவில் தொங்கலாகக் காணப்படுகின்ற நிற மற்ற அமீபாப்போலிக் கலங்களுள் ஒன்று.

**வெண்குருதிச் சிறுதுணிக்கை,** (white blood corpuscle). விலங்குக்குருதியின் சுவாச நிறப்பொருள் இல்லாத கலங் கள். இவை முள்ளந்தண்டு விலங்கு களில் பலவுருவுளிகள், நிணநீர்க்குழி யங்கள், ஒற்றைக் குழிக்கலங்கள் ஆகி யவை.

**வெண்சடப்பொருள்,** (white matter). மூளையிலும் முண்ணணிலும் உள்ள, மையவிழைய நார்களாலான சுவடுகள்.

**வெண்ணார்கள்,** (white fibres). அலை வடிவக் கற்றைகளாய்த் தொடுப்பிழை யத்தில் காணப்படுகின்ற, கிளைவிடாத, மீள்சக்தியற்ற நார்கள்.

**வெப்பம்,** (temperature). ஒரு எதேச்சை யான பூச்சியத்திற்கு (சதமபடியளவி டையிலும் பரனைற்று அளவிடையிலும்) அல்லது தனிப்பூச்சியத்திற்கு இணங்க அளக்கப்படும் சூட்டளவு அல்லது குளி ரளவு. திடகாத்திரமான மனிதவுடலின் வழமையான (வாய்) வெப்பநிலை 98·4°ப. விலங்குகளின் சாதாரண பெறு மானங்கள் வருமாறு. பரிகள், 100·5°ப.; செம்மறியாடு, வெள்ளாடு, 104°ப. ; நாய்கள், 101°ப.; பூனைகள், 100·5°ப.

**வெளிக்காவி,** (efferent). புறத்தே அல்லது அப்பால் எடுத்துச் செல்லு கின்ற: உதா., மீனிலுள்ள வெளிக் காவு பூக்கலன்கள். இது பூக்களிலிருந்து குருதியை அப்பாற் கொண்டு செல்லும் வெளிக்காவு நரம்பு. இது கணத்தாக் கங்களை மையநரம்புத் தொகுதியிலி ருந்து அப்பாற் கொண்டு செல்லும்.

**வெளிக்காவு நரம்புமுளை** (axon). ஒரு வகையான நரம்புக் கலத்தினதோ நரம் புக் குழியத்தினதோ, கணத்தாக்கத் தினை காவிச் செல்லுகின்ற முளை. வழக் கமாக இதிலிருந்து ஒரு மையவிழை யமற்ற நரம்பு நார் அல்லது ஒரு மைய விழைய நரம்பு நாரின் அச்சுருளை தோன்றும்.

**வெளிக்கான் மூட்டு,** (exopodite). காட்டு ருவான இரு கிளை கொண்ட குறுஸ்ரா செயன் அவயவத்தின் வெளிக்கிளை.

**வெளிச்சுரப்பு,** (external secretion). வெளிப்பக்கத்துக்கு அல்லது வெளிப்பக் கத்துடன் தொடர்பு கொண்டுள்ள உட லின் யாதோவொரு குழிக்குள் வெளி யேற்றப்படுகின்ற ஒரு சுரப்பு.

**வெளிச்சுவாசம்,** (expiration). சுவாச அங்கங்களிலிருந்து காற்றையோ நீரை யோ வெளித்தள்ளல்.

**வெளிச்செலுத்தி,** (vas efferens). விதை யிலிருந்து அப்பாற் செலுத்திக்கு இட்டுச் செல்லும் சிறு கான்.

**வெளிப்பக்கந் திரும்பும் நரம்பு (6 ஆம் மண்டை நரம்பு),** (abducens nerve). முள்ளந்தண்டு விலங்குகளின் ஆறுவது மண்டையோட்டு நரம்பு. இது ஒரளவு முற்றிலும் இயக்கு நரம்பு எனலாம் ; புறநேர் கட்டசைக்கு நரம்பு வழங்குவது.

**வெளிப்பிடரெலும்பு,** (exoccipital bone). இது பெருங்குடையத்தின்

இருபக்கலிலும் உள்ள ஒரு தலையோட்டெலும்பு.

**வெளியெறிக்கான்,** (ductus ejaculatorius). பல முள்ளந்தண்டில்லா விலங்குகளில் (உ-ம்., பிளாற்றிஹெல்மின்தெஸ்) அப்பாற் செலுத்தியின் கீழ்ப்பகுதியாக அமைந்து, புணர்ச்சியங்கத்தினுள் இட்டுச்செல்லுகின்ற ஒரு தசைப்பிடிப்பான குறுகிய குழாய்.

**வெளிவன்கூடு,** (exoskeleton). புறமுதலுருப்படையினால் சுரக்கப்பட்ட, புறத்தே உள்ள, வன்மையான, தாங்குகின்ற அல்லது பாதுகாப்பளிக்கின்ற அமைப்புக்கள். உ-ம்., முள்ளந்தண்டு விலங்குகளில் —செதில்கள், பரிசைகள், நகங்கள், இறக்கைகள் முதலியன. முள்ளந்தன்டிலா விலங்குகளில் —பரிசைமுடி, வன்கோதுகள் முதலியன.

**வெளிவாங்கல்,** (abduction). பிரதான அச்சிலிருந்து ஓர் அங்கத்தையோ பகுதியையோ அப்பால் இழுக்கும் செயற்பாடு.

**வெளிவாங்கி,** (abductor). நடுக்கோட்டச்சிலிருந்து அங்கத்தையோ பகுதியையோ அப்பால் இழுக்கும் தசை. உ-ம்., வெளிவாங்கிப் பெருவிரற்றசை—இது பெருவிரலைப் புறம் இழுக்கும்.

**வேட்டைப்பல்,** (canine tooth). முலையூட்டிகளிலுள்ள நாய்ப்பல். இது வழக்கமாகக் கூம்புருவாய்க் கூர்மையானதாய், மேற்கீழ்த்தாடைகளில் ஒவ்வொரு பக்கத்துக்கும் ஒன்றென, வெட்டும் பல்லுக்கும் கடைவாய்ப்பல்லுக்கும் இடையே காணப்படுகின்ற பல். மேல்வேட்டைப் பல்லை அனுவென்பில் ஆக முன்னுக்குள்ள பல் என்றும், கீழ்வேட்டைப் பல்லை மேல்வேட்டைப் பல்லோடு கடிபடும் பல்லென்றும் வரைவிலக்கணம் கூறலாம். கொறியுயிர்களிலும் குளம்புவிலங்குகளிலும் இது இல்லாமலோ குறுக்கப்பட்டோ இருக்கும். சிலவேளைகளில் தந்தங்களாய் (காட்டுப்பன்றி போனறவற்றில்) பெருத்திருக்கும்.

**வைரசு,** (virus). கருப்புரதம் போன்றுள்ள பொருட்களுள் ஒன்றான இது பற்றீரியாவைத் தங்க வைக்கக்கூடிய வடிகட்டிக்கூடாகவும் செல்லக்கூடியது. வாழும் அங்கிகளின் இயல்புகளில் பலவற்றினைக் கொண்டது. தாவரங்களிலும், விலங்குகளிலும் இவற்றின் நச்சுத் தன்மை வாய்ந்த, அல்லது நோய் விளைவிக்கும், இயல்புகளைக் கொண்டு இவற்றை அடையாளங் காண முடியும்.